# கல்கி

சல்மான்
ருஷ்டியின்
சென்னைக்
காதலி!



இரண்டு புத்தகங்கள்!

KALKI
19.3.2000
ரூ. 5.00

# மென்பொருளே, என்னுயிரே!

சாஃப்ட்வேர்
சிறப்பிதழ்



இவர் என்ன செய்கிறார் என்று
அவருக்குத் தெரியாது.
அவர் என்ன செய்யப் போகிறார்
என்று அடுத்தவருக்குத்
தெரியாது.
அடுத்தவர் செய்வது யாருக்குமே
தெரியாது!

**10 VIPக்கள் இணைந்து...**

"அட, ஒரு நிமிசம் நிறுத்தப்பா!
யார் என்ன செய்தா எனக்கென்ன
லாபம்?"

"உங்களுக்கா? இருக்கே,
ஒரு **மெகா பரிசு!"**

"சொக்கா! நெசமாவா!?"

வாரம் தோறும் வழிமேல் விழி
வைக்கப் போகிறீர்கள்!

ஒரு புதிய அனுபவத்துக்குத்
தயாராகுங்கள்!

விவரங்கள் விரைவில்.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

தமிழ்நாட்டை சாஃப்ட்வேர் மாநிலமாக உயர்த்த தமிழக அரசு தீவிரமாக முனைந்திருக்கிறது. அதற்கென ஒரு ஐ.டி. டாஸ்க்ஃபோர்ஸே உருவாக்கப்பட்டுள்ளது. இதன் சப்-கமிட்டியின் தலைவரும், முன்னாள் துணைவேந்தருமான டாக்டர் எம். அனந்த கிருஷ்ணனைப் பேட்டி கண்டோம் :

*கணிப்பொறித் துறை வளர்ச்சியில் தமிழ்நாடு அரசு போதிய அக்கறை காண்பிக்கிறதா?*

டரை வைத்திருப்பவர் என்ன தொழிலில் ஈடுபட்டிருக்கிறாரோ, அந்தத் தொழிலுக்கு ஏற்றதான கணிப்பொறி மென்பொருள் உருவாக்கப்பட வேண்டும்.

*அதற்கு இங்கே ஏதேனும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டனவா?*

ஆமாம். எல்லா மொழிகளையும் விட, இணையத்தில் தமிழ் அதிகம் பயன்

# காவிரி, தென்பெண்ணை, சாஃப்ட்வேரு..!

அதுதான் எங்கள் பலமே! சாதாரண மனிதரும் கூட இந்த கம்ப்யூட்டர் புரட்சியில் பங்கு கொள்ள வேண்டும் என்பதுதான் முதல்வரின் விருப்பம்.

கம்ப்யூட்டர் கல்வி சின்னஞ்சிறு ஊர்களில் கூடத் தரப்பட வேண்டும். கம்ப்யூட்

படுத்தப்படுகிறது. இரண்டு வருடங்களுக்கு மேலாக இது நடைமுறையில் இருக்கிறது. டிவிஎஸ் தமிழில் கீபோர்டு கொண்டு வந்து விட்டார்கள். ஹார்டு டிரைவ்-சாஃப்ட் டிரைவ், டாஸ், விண்டோஸ் எல்லாம் தயக்கமில்லாமல் பயன்படுத்த முடிகிறது.

*அரசு நிர்வாகத்தில் கணிப்பொறி எந்த அளவுக்குப் பயன்படுத்தப்படுகிறது?*

ரெவின்யூ ரெக்கார்டுகள், ப்ளாக் டெவலப்மென்ட் ஆபீஸ் ரெக்கார்டுகள்; கலெக்டர் ஆபீஸ் மற்றும் லேண்ட் ரெக்கார்டுகள், முதியோர் பென்ஷன், பப்ளிக் டிஸ்ட்ரிப்யூஷன் சிஸ்டம், ஆர்.டி.ஓ. போன்ற துறைகளில் கம்ப்யூட்டர் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது.

திருவாரூர், தஞ்சாவூரில் அனைத்துத் தாலுகா தஸ்தாவேஜுகளும் கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்டு விட்டன.

இன்னும் ஓராண்டுக்குள் 30 மாவட்டங்கள், 205 தாலுகாக்களுக்கான ரெக்கார்டுகள் முழுக்க முழுக்கக் கம்ப்யூட்டர் மயமாகிவிடும்.

மகேஷ் அண்ணாதுரை என்பவர் 'இதம்' என்றொரு சாஃப்ட்வேர் தயாரித்திருக்கிறார். ஆறு மாதத்தில் அதை அறிமுகப்படுத்தி விட்டால், தமிழிலேயே கணினியை இயக்க முடியும். ஆங்கிலமே அறியாதவர் கூட இதைப் பயன்படுத்தலாம்.

*ஈ காமர்ஸ் துறையில் தம் நிலைமை என்ன?*

ஈ காமர்ஸ் நமக்கு இன்று பிரச்னையாகத்தான் இருக்கிறது. ஒரு தஞ்சாவூர் தலையாட்டி பொம்மை செய்கிறவரோ, பத்தமடைப்பாய் உருவாக்குகிறவரோ, தங்கள் தயாரிப்பை கம்ப்யூட்டர் மூலம் சந்தைக்குக் கொண்டு வர முடிவதில்லை. இதற்கான இணையம் செயல்பட்டால் தவிர, இது நடைமுறைக்கு வர சாத்தியமில்லை. அதையும் வேகமாகச் செய்ய வேண்டும்.

*மாணவர்கள் பயில வகை செய்யும் புத்தகங்கள் ஏதும் தயாரிக்கப்படுகிறதா?*

தயாரித்துக் கொண்டிருக்கிறோம்; 9, 10, 11, 12 வகுப்பு மாணவர்களுக்கான ஜாவா, C++, டாஸ், இணையம் எல்லாம் பற்றி, புத்தகங்கள் வந்து விடும். வேர்ல்ட்-டெல் பிராஜக்ட்டின் இணைய மையங்கள் பற்றித் தெரிந்து கொள்ளும் வகையில், பள்ளி மாணவர்கள் பயிற்சி பெறும் திட்டமும் இருக்கிறது.

பேட்டி, கட்டுரை : **எஸ்.வி.என்.**
புகைப்படம் : **வெங்கடேஷ்**

**தமிழ்நாட்டுல சப்தம் போடாம, ரொம்ப அமைதியா ஒரு சாஃப்ட்வேர் புரட்சியே நடந்திட்டிருக்கு. இதை நாம்பளே எடுத்துச் சொன்னா 'தம்பட்டம் அடிக்கறான் டோய்'ம்பாங்க. அதுனால, 'இகனாமிக் அன்ட் பொலிடிகல் வீக்லி'ன்னு ஹாங்காங்லே இருந்து வருதே இங்கிலீஷ் பத்திரிகை, அதோட நிருபர்ங்க நிருபம் பாஜ்பாய்; நவி ராஜு'; ரெண்டு பேர், தமிழ்நாட்டுக்குப் போன மாதம் வந்து ஒரு கட்டுரை எழுதியிருக்காங்க. அதுல இருந்து முக்கியமான பகுதிங்க மட்டும் இங்கே :**

- தமிழகத்தின் சாஃப்ட்வேர் ஏற்றுமதி வருமானம் 1998ல் மட்டும் 300 மில்லியன் யுஎஸ் டாலர். ஹார்ட்வேர் எக்ஸ்போர்ட்டுக்கு, 2002க்கு, 1.25 மில்லியன் டாலர் இலக்கு. இதை மட்டும் சாதிச்சிட்டா, இந்தியாவோட மொத்த ஹார்ட்வேர் உற்பத்தில 30 சதவிகிதம் தமிழ்நாட்டோட பங்கா இருக்கும்!
- தமிழ்நாடு வகுத்திருக்கற ஐடி கொள்கைதான் தொலைநோக்குப் பார்வை கொண்டது; முழுமையானது.
- தகவல் தொழில் நுட்ப(ஐ.டி) துறை வளர்ச்சி அடையணும்னா அதுக்கு அதிகம் கவனம் செலுத்தணும். தமிழ்நாடு அதைத்தான் செஞ்சது. ஐடி கொள்கையை முதல் முதல்ல அறிவிச்ச இந்திய மாநிலம், தமிழ்நாடுதான். ஒரு 'டாஸ்க் ஃபோர்ஸ்' – வேலையைச் செய்ய ஒரு கமிட்டி நியமிச்சது. ஐடிக்குன்னு ஒரு அரசாங்க இலாகாவே ஆரம்பிச்சது. தேவை எத்தனை, விற்பனை எத்தனைன்னு அழகா கணிச்சு, ரெண்டையும் விட்டுக் கொடுத்துடாம பாலன்ஸ் பண்ணினது. இதெல்லாம் இந்தியாவிலேயே தமிழ்நாடுதான்!
- தமிழ்நாட்டுலதான் சாஃப்ட்வேர் புரொஃபஷனல்கள் அதிகம். மல்ட்டி மீடியா சாஃப்ட்வேர் தயாரிப்புலயும் தமிழகம்தான் நெ.1.
- 75 மிலியன் டாலர் செலவுல டெக்னாலஜி பார்க் (TIDEL) வந்துட்டிருக்கு. இது முடிஞ்சுதுன்னா, எக்கச்சக்கமான சாஃப்ட்வேர் பிராஜக்ட்ஸ் தமிழ்நாட்டுக்கு வரும்.
- ஒரு தொழில் சிறப்பா வளரணும்னா முக்கியமா ரெண்டு விஷயம் தேவை. ஒண்ணு, திறமையான ஊழியர்கள். ரெண்டு, பவர், ரோடுன்னு அடிப்படை வசதிகள். இந்த இரண்டு விஷயங்கள்லேயும் தமிழ்நாடு மத்த மாநிலங்களை எல்லாம் தாண்டி எங்கயோ போயிடிச்சு! அதனால அயல்நாட்டு முதலீட்டாளர்களை, தமிழ்நாடு ஈஸியா இழுத்து வளைச்சுப் போட்டுடலாம்.

• கல்யாணக் கோலத்தில் ஃபோட்டோ எடுக்க ப்ரஸ் ஃபோட்டோகிராஃபர்களுக்கு அனுமதியில்லையாம். ஆனால், நாமே கம்ப்யூட்டர் உதவியோட மாலை போட்டுட்டோம்!

“கண்டிப்பாக உங்கள் அனைவருக்கும் சொல்லி விட்டுத்தான் திருமணம் செய்து கொள்வேன்” என்று கற்பூரம் அணைத்து சத்தியம் செய்யாத குறையாக அறிக்கை விட்டுவிட்டு, கடைசியில் - ரகசியமாகத் திருமணம் செய்து கொள்வது தான் சினிமா ஸ்டைல்.

ஆனால், அந்த மரபை மீறி, “நாங்கள் இரண்டு பேரும் அடுத்த மாதம் இருபத்தி நாலாம் தேதி திருமணம் செய்து கொள்ளப் போகிறோம்” என்று வெளிப்படையாகவே அறிவித்தார்கள் அஜித்தும் ஷாலினியும். ஏகப்பட்ட பத்திரிகையாளர்கள் கலந்து கொண்ட பிரஸ் மீட்டில், புகைப்படக்காரர்களுக்குத்தான் அஜீத் மீது கொஞ்சம் வருத்தம்.

ஏப்ரல் இருபத்தி நாலாம் தேதி காலை ஒன்பதரை மணிக்கு. அஜீத் - ஷாலினி திருமணம் நடக்கப் போகிறது. இரு வீட்டாரது நெருங்கிய குடும்பத்தினருக்கு மட்டுமே திருமணத்துக்கு அழைப்பு. மறுநாள் மாலை ரிசப்ஷன். கன்னிமாரா ஓட்டலில் நடக்கிறது. திருமணத்துக்கு பத்திரிகையாளர்களுக்கு நோ என்ட்ரி. ரிசப்ஷனுக்கு அனைவருக்கும் அழைப்பு உண்டு. குடும்பத்துடன் கண்டிப்பாக வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் அஜீத்!

“ரிசப்ஷன் சமயத்தில் கேமராக்களுக்கு அனுமதி யில்லை. நாங்கள் ஏற்பாடு செய்துள்ள போட்டோகிராபர் திருமணம் மற்றும் ரிசப்ஷனைப் படமெடுத்து நேரடியாகப் பத்திரிகை ஆபீசுக்கே அனுப்பி வைத்து விடுவார்” என்று சொல்லி விட்டார்!

செக்யூரிட்டி காரணங்களுக்காக ஓட்டல் நிர்வாகம் கேட்டுக் கொண்டதன் பேரில் இந்த முடிவு என்பதை பவ்யமாகத் தெரிவித்தார் அஜீத்.

அஜீத் - ஷாலினி திருமணம், சிறப்பு திருமணச் சட்டத்தின்படி நடக்கப் போகும் பதிவுத் திருமணம். ஷாலினி பிராட்டஸ்டன்ட் கிருஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர். அஜீத் இந்து - பிராமணர். கிருஸ்தவ முறைப்படி மோதிரம் மாற்றிக் கொள்வதுடன், இந்து முறைப்படி

# கல்யாண அமர்க்களம்!

தாலியும் கட்டப் போகிறார் அஜீத்.

"எங்களுக்கிடையிலான காதல், இரண்டு மனங்கள் சம்பந்தப்பட்டது. எனவே மதம் ஒரு தடையில்லை" என்ற அஜீத்திடம், "நீங்கள் கிருஸ்தவராக மதம் மாறப் போவதாக ஒரு செய்தி வந்ததே?" என்றதும் சற்றே உணர்ச்சிவசப்பட்டார்.

"அது வெறும் வதந்தி. திருமணத்துக்குப் பின்னும் இரண்டு பேரும் அவரவர் மத சம்பிரதாயத்தைக் கடைபிடிக்கப் போகிறோம். அடுத்தவரின் மத, மன உணர்வுகளை மதிக்கப் போகிறோம்" என்றார். அது மட்டுமில்லை. தங்கள் குழந்தைகளையும் இன்ன மதம் என்று குறிப்பிடப் போவதில்லையாம். அவர்கள் வளர்ந்தபின் அவர்களாகவே அதனைத் தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று விட்டு விடப் போகிறார்களாம்!

"திருமணத்துக்குப் பின் ஷாலினி நடிப்பாரா?"

"மாட்டார். இது அவராக எடுத்த முடிவு. இதைக் கூட நான் சொன்னால் ஆண் ஆதிக்க வெளிப்பாடாக நீங்கள் நினைக்கலாம்" என்று சொல்லிவிட்டு, "நீயே உன் முடிவைச் சொல்" என்றார் ஷாலினியிடம்.

"எனக்கு திருமணத்துக்குப் பின் நடிப்பதில் விருப்பமில்லை. குடும்பப் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டு, ஒரு நல்ல கணவருக்கு அன்பான மனைவியாய் வாழவே விருப்பம்" என்றார் ஷாலினி. "காதலுக்கு மரியாதை பட வாய்ப்பு வந்தபோது, அதை என்னால் மறுக்க முடியவில்லை. பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த நான், படிப்பைத் தொடர்ந்து கொண்டுதான், மற்றப் படங்களையும் நடித்துக் கொடுத்தேன். ஆனால், திருமணம் முடிந்தபின் கண்டிப்பாக 'குட்பை'தான்!"

"சொல்லப் போனால், எங்கள் திருமணம் இந்த ஜனவரியிலேயே நடந்திருக்க வேண்டும். ஷாலினி ஒப்புக் கொண்ட படங்கள் அனைத்தையும் முடித்துக் கொடுத்த பின்தான் திருமணம் என்று தீர்மானித்தோம். எதிர்பாராதவிதமாக அவளது படம் தாமதமாகி விட்டது. ஒருவழியாக ஏப்ரலில் திருமணத் தேதியை நிர்ணயித்தோம்" என்கிறார் அஜீத்.

"சினிமாவில் நடிப்பதை நிறுத்துகிறோம் என்று மனவருத்தமில்லையா?" என்று ஷாலினியிடம் கேட்டால், "கணவனும், மனைவியும் வேலைக்குப் போவது என்பது சகஜமான ஒன்றுதான். ஆனால், இரண்டு பேரும் சினிமாத் துறை என்றால், குடும்ப வாழ்க்கையில் பல பிரச்னைகள் வரும். இரண்டு பேருமே ஷூட்டிங் என்று பிஸியாக இருந்து, குடும்ப வாழ்க்கை சந்தோஷத்தை இழக்க நாங்கள் தயாராக இல்லை" என்றார் பனிச்சென்று!

**ஷா**லினியின் பெற்றோரும் சரி; அஜீத்தின் பெற்றோரும் சரி காதலித்துத் திருமணம் செய்துகொண்டவர்கள்! அஜீத்தின் அப்பாவிடம், "உங்கள் தலைமுறைக் காதலுக்கும், இந்தத் தலைமுறை காதலுக்கும் என்ன வித்தியாசம்?" என்று கேட்டோம்.

"தலைமுறை மாறியிருக்கிறதே ஒழிய, காதல் அப்படியேதான் இருக்கிறது" என்றார் இலேசாகப் புன்னகைத்துக் கொண்டு!

அஜீத்-ஷாலினி இரண்டு பேரையும் ஒன்றாக நிறுத்தி வைத்து, "உங்கள் நிஜ வாழ்க்கைக் காதலும், சினிமா காதல் போல பல சிக்கல்களைக் கடந்துதான் ஜெயித்ததா?" என்றால், இரண்டு பேரும், "சினிமாவில் காதலர்களுக்கிடையே பிரச்னைகள் இருந்தால் தானே சுவாரசியம்! அதனால், பிரச்னைகள் உருவாக்கப்படுகின்றன. ஆனால் எங்கள் காதல், பிரச்னைகளே இல்லாத காதல். அந்த விதத்தில் நாங்கள் அதிர்ஷ்டசாலிகள்" என்றனர்.

— **எஸ். சந்திரமௌலி**

படம் : **பிரவீண்குமார்**



# பதிலென்ன ஜே.கே.?

“பத்து டாகுமெண்டரி எடுத்திருக்கிறேன். இருந்தாலும் இந்த டாகுமெண்டரி மேலும் கொஞ்சம் ஊக்கத்தைத் தருகிறது” என்கிறார் எழுத்தாளர் சா. கந்தசாமி.

சாகித்ய அகாடமி ஆதரவுடன் இவர் தயாரித்திருக்கும் 'ஜெயகாந்தன்' பற்றிய டாகுமெண்டரி பிலிம்சேம்பரில் கடந்த 8ம் தேதி திரையிடப்பட்டது!

ஒரு சாதனையாளர் பற்றி அவர் வாழும் காலத்திலேயே டாகுமெண்டரி தயாரித்து வழங்குவது அபூர்வமாக நிகழும் கிரகண தரிசனம் மாதிரி!

1934-ஆம் ஆண்டு ஏப்ரல் 24-ஆம் தேதி கடலூர் மஞ்சக்குப்பத்தில் ஜெயகாந்தன் பிறந்தார் என்பதில் தொடங்கும் டாகுமெண்டரி, அவரின் இளமைப் பருவம் அவரது வீடு, ஊரில் அவரது நண்பர்கள், (திராவிடக் கழகத் தலைவர் கி. வீரமணியும், ஜெயகாந்தனும் பால்ய காலம் முதல் தோழர்களாம்!) அவர் எழுதக் காரணமாக இருந்த சூழல், பாரதியாரின் படைப்புகளால் ஈர்க்கப்பட்டு அவரையே குருவாக ஏற்றுக் கொண்டது, வெகுஜனப் பத்திரிகைகளில் தனது படைப்புகளுக்கு அங்கீகாரம், சினிமா - ஈடுபாடு, வெளிநாட்டு இலக்கியப் பயணம், விருதுகள், நண்பர்களோடும், குடும்பத்தினரோடும், இன்றைய ஜெயகாந்தனின் நிலை என அவரின் இன்றைய உருவமே டாகுமெண்டரி முழுக்க வந்து நினைவு கூர்கிறது. தேவைப்படும்போது புகைப்படங்களில் கேமரா ஊர்கிறது. (அதில் மீசையில்லாத ஜெயகாந்தன் போட்டோவும், ஆதிமூலத்தின் எளிமையான கோட்டு ஓவியமும் மனசை விட்டு அகலாதவை.)

டாகுமெண்டரியில் ஜெயகாந்தனின் 'ஒரு வீடு ஒரு உலகம் ஒரு மனிதன்' நாவலின் ஒரு பகுதியை ஐகோர்ட் நீதிபதி பிரதிபா வாசிக்கிறார். அவரைப் பற்றி எழுத்தாளர்கள் அசோகமித்திரன், சௌரி ஆகியோரும் பேசுகிறார்கள்.

ஜெயகாந்தனின் இலக்கிய வாழ்க்கையில் அவர் எடுத்த நிலைபாடுகள், முடிவுகள்; விமரிசனங்கள் குறித்து நேர்காணல் உத்தியில் வரும் சா. கந்தசாமியின் கேள்விகளுக்கு பதில் கிடைக்கிறது. ஆனால் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து அவர் தூரமாயிருந்து செயல்பட நேர்ந்தது ஏன்? ஒரு கட்டத்திற்கு மேல் எழுதுவதை நிறுத்தியது ஏன்? என்பது போன்ற கேள்விகள் கேட்கப்படும் என பார்வையாளர்கள் காத்திருக்க... பதிலில்லாமல் ஏமாற்றத்தோடு முடிந்து விடுகிறது டாகுமெண்டரி.

ஆங்கில சப்டைட்டில்களோடு தயாரிக்கப்பட்டிருக்கும் இந்த டாகுமெண்டரிக்கு இசையும், பின்னணிக் குரலும் கூடுதல் ஜீவனைக் கொடுத்திருக்கின்றன!

"சாகித்ய அகாடமி இந்தியாவில் சிறந்த எழுத்தாளர்களைப் பற்றி டாகுமெண்டரி தயாரித்து வருகிறது. தமிழில் இதுதான் முதல்! சில ஆண்டுகளில் இன்னுமொரு தமிழ் எழுத்தாளர் பற்றி சாகித்ய அகாடமி டாகுமெண்டரி எடுக்கலாம்" என்று கூறும் சா. கந்தசாமி, கல்கி, ஞானக்கூத்தன் பற்றிய டாகுமெண்டரிகளை தயாரித்துக் கொண்டிருக்கிறார்!

— விஷ்வல்தாசன்

# வியாபாரத்தில் அதிகபடி லாபம் வருவதற்கு உபயோகப்படும் பிசினஸ் சக்ஸஸ் கோர்ஸ்!



நீங்கள் எந்த வியாபாரமாவது செய்யுங்கள். சிறிய வியாபாரமாக இருந்தாலும் சரி அல்லது பெரிய வியாபாரமாக இருந்தாலும் சரி. அதை பெரிய வியாபாரமாகவே நாங்கள் கருதுகிறோம். ஒரு வேளை நீங்கள் வியாபாரத் துறையில் அடியெடுத்து வைக்க நினைத்தாலும் சரி அல்லது புதிய வியாபாரத்தைத் தொடங்கி இருந்தாலும் சரி நீங்கள் எங்களுக்கு பெரிய வியாபாரி தான்! தெருவில் வியாபாரம் செய்பவராக இருந்தாலும், வெளி நாட்டுடன் தொடர்பு கொண்டு வியாபாரம் செய்து வந்தாலும் அது வெற்றிகரமாக நடந்து அதிக லாபத்தை பெற வேண்டுமல்லவா? அதற்கு ஏற்ற வகையில் உங்களுக்கு அனேக வெற்றி ரகசியங்களை தெரியவைக்கிறது எங்களின் சுலப வியாபார சூத்திரங்களின் கோர்ஸ். வியாபாரிகள் வியாபாரத்தில் எம்மாதிரியான தவறுகளை செய்யக் கூடாதென்று விவரித்து, வியாபாரத்தில் எதிர்வரும் தொல்லைகள், தடைகள், ஆகியவற்றை எவ்வாறு விலக்கிட வேண்டுமென்று சொல்லித் தரும் அற்புதமான பிசினஸ் சக்ஸஸ் கோர்ஸ் இதுவாகும். இந்த பிசினஸ் சக்ஸஸ் கோர்ஸின் அசல் விலை ரூ. **300/-** தான்.

**இந்த பிசினஸ் சக்ஸஸ் கோர்ஸ் மொத்தம் 10 பாகங்கள்!**

**ரூ.150/- மதிப்புள்ள கேல்குலேட்டர் இலவசம்!**




## இக்கூப்பனை உடனே நிரப்பி தாமதிக்காமல் அனுப்பவும்

**இலவசம்!**



எனக்கு இந்த 10 பாகங்கள் அடங்கிய பிசினஸ் சக்ஸஸ் கோர்ஸ், மற்றும் ஒரு இலவச கேல்குலேட்டர் சேர்ந்து ரூ.**300/-**க்கு வி.பி.பி. மூலமாக அனுப்பி வைக்கவும். உடனே தபால்காரரிடம் பணத்தை செலுத்தி என்னுடைய பேக்கட்டை பெற்றுக்கொள்கிறேன்.

**K.V.R. INSTITUTE** 816

(BUSINESS SUCCESS COURSE DIVISION)

77, HABIBULLAH ROAD, T. NAGAR,
CHENNAI - 600 017.

Name : ..............................................

Address : ..............................................

..............................................

..............................................

.............................................. PIN

**மை**க்ரோசாஃப்ட் நிறுவனத்தில் ரிசப்ஷனிஸ்ட்-செக்ரடரி ஆகச் சேர்ந்த 42 வயது மிரியம், பில்கேட்ஸை முன்னே பின்னே பார்த்ததில்லை. ஒரு நாள் பிஸியாக இருந்த போது ஒரு பையன் 'ஹை!' என்று விஷ் பண்ணிவிட்டு, நேராக சேர்மன் அறையில் நுழைந்து விட்டபோது திணறிப் போனார். அவரை நியமித்த ஸ்டீவ் உட் என்பவரிடம் போய், "சார்; ஒரு பையன் சேர்மன் ரூமில் நுழைந்து விட்டான்!" என்றார். "ஆமாம், பையன்தான். ஆனால் அவர்தான் கம்பெனி சேர்மன்!" என்றார் உட். "ஐயோ, அவர் தானா பில்கேட்ஸ்?" என்று மிரியம் கூவி விட்டு, "அவர் வயது எத்தனை?" என்று கேட்டார்.

"21" என்று உட் பதிலளித்ததும் மிரியத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது!

**பி**ல் கேட்ஸின் அப்பா, ஸியாட்டில் நகரில் புகழ்பெற்ற வழக்கறிஞர். அம்மா மேரி, பள்ளிக்கூட ஆசிரியையாக இருந்தவர்.

பள்ளிக்கூடத்தில் பில் படிக்கும்போது சீரியஸ் மாணவர். வகுப்பில் அவர்தான் முதல். பாய்ஸ் ஸ்கவுட்ஸில் உறுப்பினராகவும் இருந்தார்.

பள்ளி விட்டு வந்தால், அறையில் புகுந்து கதவைச் சாத்திக்கொண்டு, தீவிர யோசனையில் ஆழ்ந்து விடுவார். அறிவியல், கணிதம் இரண்டுமே பிடித்த பாடங்கள். பிராங்க்ளின் டி. ரூஸ்வெல்ட், நெப்போலியன் தவிர, கண்டுபிடிப்பாளர்களின் வாழ்க்கைச் சரிதங்களை வெகு ஆர்வத்தோடு படிப்பார், பில். தம்மையும் ஒரு 'சயன்டிஸ்ட்' என்று சொல்லிக் கொள்வார்.

பில்லுக்கு அசாத்திய ஞாபக சக்தி. ஒரு தடவை, பள்ளிக்கூட நாடகத்துக்காக, மூன்று பக்க வசனத்தை ஒரே ஒரு தடவை படித்துப் பார்த்துவிட்டு, அப்படியே பேசினார்.

லேக்ஸைடு ஸ்கூலில் படித்துக் கொண்டிருக்கும்போதே, 'ஒருநாள் நான் கோடீசுவரன் ஆவேன், தெரியுமா?' என்று தமது ஆசிரியரிடம் சொல்லியிருக்கிறார் பில். ஆனால் அவரைத் தெரிந்தவர்கள் எல்லோரும், அப்போதே பில் எந்தத் துறையில் காலடி வைத்தாலும், அதில் சக்கைப் போடு போடுவான் என்றுதான் சொன்னார்கள்!

லேக்ஸைடு ஸ்கூலில் கம்ப்யூட்டரை அறிமுகப்படுத்துவது என்று பிரின்சிபல் தீர்மானித்தார். மதர்ஸ் கிளப் அங்கத்தினர்களிடம் 'உங்கள் பையன்கள் புதிய தொழில்நுட்பத்தைக் கற்றுக் கொள்ளணும் என்று ஆசைப்பட்டால், உங்கள் சேமிப்பைக் கொடுத்து உதவுங்கள்' என்றார். அம்மாக்கள் 3000 டாலர்கள் கொடுத்தார்கள். GECயின் PDP-10 மினி கம்ப்யூட்டர் ஸ்கூலுக்கு வந்தது!

பில்லும் நண்பன் பால் ஆலனும் எட்டாவது கிரேடு, பத்தாவது கிரேடு மாணவர்கள். கம்ப்யூட்டர் கோர்ஸில் சேர்ந்ததுமே, இரண்டு பேருக்கும் புரோகிராமிங் பண்ணுவதில் ஒரே ஆர்வம். ஆசிரியர்களுக்குத் தெரிந்ததோ கொஞ்சம்தான். இந்தப் பையன்கள் மட்டும், கம்ப்யூட்டர் மான்யுவல்களைத் தேடிக் குடைந்து எடுத்துப் படித்து, புகுந்து விளையாட ஆரம்பித்து விட்டார்கள்!

இரண்டு பேரும் கம்ப்யூட்டரே கதி என்று கிடந்தார்கள். இரவில் பில் பள்ளிக்கூடத்து கம்ப்யூட்டர் அறைக்குள் போனால், பால் ஏற்கெனவே அங்கே உட்கார்ந்து கீ போர்டைத் தட்டிக் கொண்டிருப்பான்!

# கம்ப்யூட்டர்

பிராக்டிகலாக உபயோகிப்பதற்கு என்னென்ன புரோகிராம்கள் தேவையோ அதை எல்லாம் பில் தயாரித்தான். பால், அசெம்பிளி லாங்குவேஜ் என்ற ஆரம்பப் பாடங்களை ஒரு பிடிபிடித்து, கம்ப்யூட்டரின் சகல பாகங்களையும் எப்படி இயக்குவது என்று கற்றுக்கொண்டு விட்டான்.

**இ**ந்தச் சமயத்தில்தான் யூனிவர்சிடி ஆஃப் வாஷிங்டனில் படித்து வெளிவந்த பட்டதாரிகள் சிலர் கம்ப்யூட்டர் சென்டர் கார்ப்பரேஷன் (CCC) தொடங்கினார்கள்.

பில்லும் பாலும் அங்கே போய்த் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். இந்தப் பசங்களைப் பார்த்து அவர்களுக்கு நம்பிக்கை வரவில்லை. ஆனால் பில் விடுவானா? புரோகிராமிங்கில் தாங்கள் சூரர்கள் என்று அவர்களை நம்ப வைத்து, 'லேக்ஸைடு புரோகிராமிங் குரூப்' என்று



"நாங்கள் PDP-10 கம்ப்யூட்டர் தருகிறோம். நீங்கள் புரோக்ராம்கள் தயாரித்துக் கொடுங்கள்!" என்று முன்வந்தது இன்ஃபர்மேஷன் சயன்ஸ் என்ற கம்ப்யூட்டர் நிறுவனம்.

பையன்களின் திறமையைப் பரிசோதித்துத் தெரிந்து கொண்ட இன்ஃபர்மேஷன் சயன்ஸ்காரர்கள், தங்கள் கம்பெனி ஊழியர்களின் சம்பளப் பட்டியலை 'COBOL' பாஷையில் புரோக்ராம் பண்ணித் தரச் சொன்னார்கள். பில்லுக்கும், பாலுக்கும் பத்தாயிரம் டாலர் பெறுமான கம்ப்யூட்டர் நேரத்தை ஊதியமாகத் தந்தார்கள்! அந்த வருடம் பூராவும், அந்த நேரத்தைப் பயன்

# கடவுளின் கதை!

தங்களை ஏற்க வைத்து, CCC-யுடன் ஓர் ஒப்பந்தமும் போட்டுக் கொண்டு விட்டார்கள்!

ஆறு மணிக்கு கம்பெனி ஆட்கள் வீட்டுக்குக் கிளம்பிப் போனவுடன் பில்லும் பாலும் தங்கள் கைவரிசையைக் காட்டத் தொடங்குவார்கள். ரிக் வீலண்ட், கென்ட் ஈவான்ஸ் என்ற இரண்டு பையன்கள் சைக்கிளில் வந்து சேருவார்கள். நாலு பேருமாக இரவு முழுக்கக் கம்ப்யூட்டரை உண்டு இல்லை என்று பண்ணி விடுவார்கள்!

இதற்கிடையே இந்த இரண்டு இளம் ஹைஸ்கூல் மாணவர்களின் புரோகிராமிங் திறமை கொஞ்சம் வெளியே பரவியிருந்தது-

படுத்திக் கொண்டனர் இருவரும் - பள்ளியில் படித்துக் கொண்டே!

ஆனால் மலையேற்றப் பயிற்சிக்குப் போன கென்ட் ஈவான்ஸ் மரணம் அடைந்தான். பிறகு பால் ஆலன் பில் கேட்ஸ் உதவிக்கு வர, FORTRAN மொழியில் இரவு பகலாக உட்கார்ந்து புரோக்ராம் செய்தார்கள்.

இப்படி, பள்ளிக்கூடத்தில் படிக்கும் போதே கம்ப்யூட்டரைக் கட்டிக் கொண்டு, புரோக்ராம்கள் எழுதி, புகழைக் குவித்தார்கள்.

நியூ மெக்ஸிகோவில், அல்புகர்க் நகரில்,



''அவருக்கு இங்கிலீஷ் அவ்வளவா தெரியாதுன்னு நாம சந்தேகிக்றது சரியாத்தான் இருக்கு...''

''ஏன், என்ன ஆச்சு?''

''என் மனைவியை அறிமுகப்படுத்தி, 'ஜஸ்ட் ஹவுஸ்ஒய்ஃப்பாத்தான் இருக்கா'ன்னு சொன்னேன்; உடனே, 'ஹை! ஆபீஸ்ல இன்னொரு ஒய்ஃப்பா'ன்னு கேட்கிறார்!''

— இரா. சம்பத்குமார்

---

ஜூலை 1975ல் பிறந்தது மைக்ரோ–சாஃப்ட் நிறுவனம். பில் கேட்ஸும் பால் ஆலனும் பிஸினஸ் பார்ட்னர்கள்.

பில், ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் சேர்ந்தார். ஆனால் அவர் மனசு முழுக்க மைக்ரோ சாஃப்ட்டில்தான் இருந்தது. அதனால் பெற்றோரின் எதிர்ப்புக்கு இடையே, ஹார்வர்டை விட்டுவிட்டு, முழுக்க முழுக்க மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தை விரிவுபடுத்துவதில் முழுமூச்சாக இறங்கினார். பையன் ஒரு கல்லூரி டிகிரி வாங்கவில்லையே என்று அம்மாவுக்கும் அப்பாவுக்கும் ஏக வருத்தம்!

**1982** ஆரம்பத்தில் பில் கேட்ஸின் படம் Money மாத இதழின் அட்டையில் வெளியாயிற்று. செயலாளர் மிரியம் லூபோ, எல்லா மைக்ரோசாஃப்ட் ஊழியர்களும் ஒரு பிரதி பெற ஏற்பாடு செய்தாள். அவர் புகைப்படம் பிரமாதமாக இருந்தது.

'80களில் மூன்று லட்சம் பேரே உபயோகித்து வந்த கம்ப்யூட்டர், 83ல் முப்பது லட்சம் பேரின் உடைமையாயிற்று.

ஏப்ரல் 83ல், மைக்ரோசாஃப்ட் நிறுவனம் வேர்ட்பிராசசிங் புரோக்ராம் ஒன்றை அறிமுகப்படுத்தியது. வேர்ட் ஸ்டாரைத் தூக்கிச் சாப்பிடுகிற புரோக்ராம் இது.

மெமரியிலும், டிஸ்க்கிலும், பதிவானதைத் தக்க வைத்துக் கொள்ளும் வசதி இதில் இருந்தது. (வேர்ட் ஸ்டார் கீபோர்டில் அடிப்பது ஸ்க்ரீனில் தெரிந்து, அது அப்படியே காகிதத்தில் அச்சாகியது.)

**க**ம்ப்யூட்டர் கம்பெனிகள், கம்ப்யூட்டர் பத்திரிகைகளில் தங்கள் தயாரிப்பை விளம்பரப்படுத்தித்தான் மக்களுக்கு இவை அறிமுகமாயின. பில்கேட்ஸின் மைக்ரோசாஃப்ட்டும் இதைத்தான் செய்தது. மேலும் ஆர்வம் உள்ளவர்கள் விற்பனையாளரிடம் டெமான்ஸ்ட்ரேஷன் செய்து காட்டச் சொல்லுவார்கள்.

மைக்ரோசாஃப்ட் ஒரு புதிய உத்தியைக் கண்டுபிடித்தது. 4,50,000 டெமான்ஸ்ட்ரேஷன் டிஸ்கெட்டுகளையும், பன்னிரண்டு பக்க மான்யுவலையும் மார்க்கெட்டில் விநியோகித்தது!

இது போல, எதைச் செய்தாலும் வித்தியாசமாகச் செய்தார் பில்கேட்ஸ்.

செப்டெம்பர் 83ல் போட்டி நிறுவனத்தின் லோட்டஸ் 1-2-3 அறிமுகமானபோது மைக்ரோசாஃப்ட்டுக்குப் பெரிய சவால்.

ஒரு நிபுணர் குழுவைக் கூட்டி, மூளையைக் கசக்கிக் கொண்டார்கள். 'எக்ஸெல்' பிறந்தது. மைக்ரோசாஃப்ட்டை நெ.1 இடத்துக்குத் தூக்கி விட்டது.

நவம்பர் 85ல் விண்டோஸ் வெளிவந்தது. இதற்கென அசுரத்தனமாக உழைத்திருந்தது மைக்ரோசாஃப்ட் குழு.

விண்டோஸ் சாதனை, கம்ப்யூட்டர் சரித்திரத்தில் ஒரு மைல் கல்.

மைக்ரோசாஃப்ட் உச்சாணிக் கிளையில் போய் உட்கார்ந்தது.

அக்டோபர் 87 'ஃபோர்பஸ்' மாத இதழில் பில்கேட்ஸ் உலகின் 400 கோடீசுவரர்களில் ஒருவராகப் பட்டியலில் தோன்றினார்.

அதே மாதம் 'ஃபார்ச்சூன்' இதழ் அட்டையிலும் பில்கேட்ஸ் படம்தான். அவருடைய வயதுக்கு அதிகமாகவே சம்பாதித்தவர் என்ற குறிப்பு வேறு!

பில்கேட்ஸின் அப்போதைய மாதச் சம்பளம் 1,33,000 டாலர்கள். அவருடைய பங்குகள் மதிப்பு அப்போது 640 மில்லியன் டாலர்கள்!

இன்று –

பில்கேட்ஸ் உலகின் முதல் கோடானு கோடி கோடீசுவரர்!

— எஸ்.வி.என்.

மதுரை மற்றும் திருநெல்வேலி
மக்களின் வசதிக்காக

## தமிழக அரசின் நிதி நிறுவனம்

# 'பவர் ஃபைனான்ஸ்'

## வழங்கும் ஓர் அரிய வாய்ப்பு!

# டெபாசிட் திரட்டும் முகாம்

### மதுரை

| | | |
|---|---|---|
| இடம் | : | YMCA இன்டர்நேஷனல் கெஸ்ட் ஹவுஸ் அண்ட் ப்ரோக்ராம் சென்டர், மெயின்கார்டு சதுக்கம் (மீனாட்சி அம்மன் கோயில் அருகில்), மதுரை - 625 001. தொலைபேசி : 746649 |
| நாள் | : | 16-3-2000 முதல் 18-3-2000 வரை |
| நேரம் | : | காலை 9.00 மணி முதல் மாலை 7.00 மணி வரை |

### திருநெல்வேலி

| | | |
|---|---|---|
| இடம் | : | தேவ் மாளிகை, 120-C, பெருமாள் கிழக்கு ரத வீதி (P.V.T. திரையரங்கம் அருகில்), திருநெல்வேலி சந்திப்பு, திருநெல்வேலி - 627 001. தொலைபேசி : 334800 |
| நாள் | : | 19-3-2000 முதல் 21-3-2000 வரை |
| நேரம் | : | காலை 9.00 மணி முதல் மாலை 7.00 மணி வரை |

வாருங்கள், இந்த வாய்ப்பை பயன்படுத்தி வாழ்வில் வளம் காணுங்கள்!




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894

மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in

Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com

●

**இரண்டு ரூபாய் மதிப்புள்ள ஒரு 'விப்ரோ' ஷேர் இன்று 9000 ரூபாய்க்கு விற்கப்படுகிறது, பங்குச் சந்தைகளில்!**

●

அஸிம் பிரேம்ஜி அமெரிக்க ஸ்டான்ஃபோர்டு பல்கலைக் கழகத்தின் இஞ்சினியரிங் படித்துக் கொண்டிருந்த போது, அவர் தந்தை இறந்து போனார். இந்தியாவுக்கு வந்து, அவர் நடத்திக் கொண்டிருந்த வெஸ்டர்ன் இந்தியா வெஜிடபிள் பிராடக்ட்ஸ் என்ற நிறுவனத்தை நடத்தும் பொறுப்பு, இருபதே வயதான பிரேம்ஜி தோளில் அமர்ந்தது.

வெறும் சோப்பும், சமையல் எண்ணெயும் மட்டுமே விற்பனை செய்து கொண்டிருந்த கம்பெனியை சாஃப்ட்வேர் தயாரிப்பிலும் ஈடுபடுத்தினார் பிரேம்ஜி. அதற்குப் பிறகு 'விப்ரோ'வின் வளர்ச்சி ஓகோதான்!

இரண்டு ரூபாய் மதிப்புள்ள ஒரு 'விப்ரோ' ஷேர் இன்று 9000 ரூபாய்க்கு விற்கப்படுகிறது, பங்குச் சந்தைகளில்! அதனால் 75 சதவிகிதப் பங்குகளை வைத்திருக்கும் அஸிம் பிரேம்ஜிதான் இன்று இந்தியாவின் மிகப் பெரிய பணக்காரர்! உலகின் ஐந்து மிகப் பெரும் பணக்காரர்களில் ஒருவராகவும் இவரைச் சொல்லுகிறார்கள்.

ஆனால் பிரேம்ஜி ரொம்ப சிம்பிள் மனிதர். பிளேனில் கிளப் கிளாஸ் எனப்படும் சொகுசு பிரிவில் பயணம் செய்ய மாட்டார். எகானமி வகுப்பில்தான் போவார். ஐந்து நட்சத்திர ஓட்டல்களில் தங்க மாட்டார். அணிந்து கொள்ளுகிற உடைகளாகட்டும், கட்டிக் கொள்ளுகிற கடிகாரம் ஆகட்டும், ஓட்டுகிற கார் ஆகட்டும் - எல்லாம் இந்தியத் தயாரிப்புகள்தாம்.

மிகுந்த கூச்ச சுபாவம் உள்ளவர் அஸிம் பிரேம்ஜி. உலகின் ஐந்து பெரும் பணக்காரர்களில் ஒருவராக இவரைத் தேர்ந்தெடுத்தபோது, புகைப்படம் எடுக்கவே பத்திரிகைகள் திண்டாடின!

கட்டுப்பாட்டுக்கும், நாணயத்துக்கும், நேர்மைக்கும் பெயர் போனவர் அஸிம். இவரது மும்பை அலுவலகத்தில் ஓர் ஊழியர் இரண்டாம் வகுப்பில் பயணம் செய்துவிட்டு,



# பலப்பல கோடீஸ்வரர்!

முதல் வகுப்புக் கட்டணத்தைக் கோரினார் என்பது தெரிந்ததும், முதலில் அவரை வீட்டுக்கு அனுப்பினார் பிரேம்ஜி! அதற்காக இரண்

டரை மாதங்கள் ஊழியர்கள் ஸ்ட்ரைக் செய்தனர். அசையவில்லை அவர்.

பவர் ஸப்ஸ்டேஷன் வைக்க லஞ்சம் கேட்டார்கள் என்பதற்காக, பதினெட்டு மாதங்கள் பொறுமையாகக் காத்திருந் தார். ஆனால் லஞ்சம் மட்டும் கொடுக்கவில்லை!

1979ல்தான் இன்பர்மேஷன் டெக்னாலஜி துறையில் அடியெடுத்து வைத்தார் அஸிம் பிரேம்ஜி. ஓர் அமெரிக்க கம்ப்யூட்டர் நிறுவனத்திடமிருந்து தொழில் நுட்பத்தைப் பெற்றுக் கொண்டது விப்ரோ. விற்பனைக்குப் பிறகு பராமரிப்பு சர்வீஸ் இந்தத் துறையில் குறைவாக இருந்தது. 'விப்ரோ' அந்தக் குறையை அறவே போக்கியது.

நிர்வாக இயல் பற்றிய நூல்களைப் படிக்கிறார். ஐடி ஒர்க் ஷாப்ஸ் நடந்தால் போய்ப் பங்கு கொள்ளுகிறார் பிரேம்ஜி.

இன்ஃபோஸிஸ் அதிபர் நாராயணமூர்த்தி இவருடைய நிறுவனத்தில்தான் வேலை பார்ப்பதாக இருந்தாராம். ஆனால் வேலை கிடைக்கவில்லை! அதனால் என்ன? இப்போதும் பிரேம்ஜியின் நெருங்கிய நண்பராக நாராயணமூர்த்தி இருந்து வருகிறார்.

மற்றவர்களை எடை போடுவது போலவே, தம்மையும் எடை போட்டுக் கொள்ளுவார் அஸிம் பிரேம்ஜி. தாம் கூட்டும் கம்பெனி மீட்டிங்குகளில் ஊழியர்கள் எந்த அளவுக்குத் தயாராக வந்திருக்கிறார்கள்; அவர்களுக்குப் பயன் உள்ளதாக மீட்டிங் இருக்கிறதா; எதற்காக மீட்டிங் போடுகிறோமோ, அதற்குப் பலன் இருக்கிறதா என்றெல்லாம் எடை போட்டார். அப்புறம் கிட்டத்தட்ட 40 சதவிகித மீட்டிங்குகளைக் குறைத்துவிட்டார்!

பிரேம்ஜி விரும்பும் இரண்டு மனிதர்களில் ஒருவர் மகாத்மா காந்தி. இன்னொருவர் ஜி.இ. அதிபர் ஜாக் வெல்ஸ்.

— சித்தார்த்

**மும்பை மசாலா**

## "நடக்க" வேண்டியவை

'என்ன நடக்க வேண்டுமென்று இருக்கிறதோ அதுதான் நடக்கும்' என்று சும்மாவா சொன்னார்கள்? பட்ஜெட்டால் அப்செட் ஆகிப் பிதற்றவில்லை. மான்குர்ட்- குர்லா இடைப்பட்ட தூரத்தில் ரயில்வே லைனில் முளைத்திருந்த குடிசைகளில், ஆயிரத்துக்கும் மேற்பட்டவை திடீரென்று மாயமாய் மறைந்திருந்தன. போலீசார் உதவியுடன் மடமடவென்று ஆக்கிரமிப்பை அகற்ற, "ஆஹா, ரயில் பிரயாணிகளுக்கு நல்ல காலம் பிறந்துட்டுது..." என்று சந்தோஷிக்கையில், "விடுவேனா பார்" என்று சவால் விட்டு, 'ஸ்டே ஆர்டரும்' வாங்கிவிட்டார் ஹவுஸிங் மினிஸ்ட்டர் ரோஹிதாஸ் பாட்டீல்! இந்த நிலை தொடர்ந்தால், ரயிலே ஓட்டுவது கஷ்டம்; அப்படியே ஓட்டினாலும் துரித வண்டிகளும் கூட 10 கிலோ மீட்டர் வேகத்தில்தான் ஓட்ட முடியும் என்று ரயில்வேக்காரர்கள் விசனப்படுகிறார்கள். ஹூம்... புது மிலெனியத்தில், மும்பைக்காரர்களுக்கு, 'ரயில் வண்டியிலேயே மாட்டு வண்டி' என்ற டூ இன் ஒன் அனுபவத்தை நடத்திக் காட்ட, அரசியல்வாதிகள் முடிவெடுத்துவிட்டால், அதை யாரால் மாற்ற முடியும்?

## யாரோ... அவர் யாரோ?

கிரிக்கெட்டில் எந்த அணி தலைவராவது 'டிக்ளேர்' செய்தால் சாதாரணமாக எல்லோருக்கும் கொட்டாவிதான் வரும்! ஆனால் ஒரு முன்னாள் இந்திய கிரிக்கெட் காப்டன் 'டிக்ளேர்' செய்ததற்கு எல்லோரும் இங்கே குய்யோ முய்யோ என்று அலறுகிறார்கள்- அவர் டிக்ளேர் செய்திருப்பது VDIS (Voluntary Disclosure of Income Scheme) அதுவும் 16 கோடிகள்! பத்திரிகையாளர்கள் இது பற்றிக் கேட்டு கபில்தேவை முற்றுகையிட, அவர், "ஒரு கிரிக்கெட்டரால், இவ்வளவு பணம் பண்ண முடியுமா? ஐயோ... எனக்கு அவர் பெயரைச் சொல்லுங்களேன்" என்று பதற்றப்படுகிறார். அஸாரிடம் கேட்டால், "அட, நான் அவ்வளவு பணக்காரனா? எனக்கே தெரியாதே?" என்று ஆச்சர்யப்பட்டு விட்டு, "நான் 'அவரி'ல்லை! எனக்குக் கொஞ்சம் 'ரன்' கிடைத்தால் போதும்! பணம் எல்லாம் வேண்டாம்" என்கிறார். ஒரு சராசரி கிரிக்கெட் வீரர், ஒரு டெஸ்ட் மாட்சுக்கு 1.2 லட்சங்களும், ஒருநாள் மேட்சுக்கு ரூ. 90,000ம் வாங்குகிறாராம். இது தவிர விளம்பரங்கள், பரிசுத் தொகைகள்! ஆஸ்தி



• அசார்

ரேலியா, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளில், திறமைக்கேற்ற ஊதியம்தானாம்! அந்த முறை இங்கேயும் அமலுக்கு வந்திருந்தால், இப்போது இப்படிக் குழம்பிக் கொண்டிருக்க வேண்டாமல்லவா?

## குறைத்தால் குறையுமா?

**தா**க்கரேவின் 'இஸட்' ப்ளஸ் பாதுகாப்பு சுருங்க இருக்கிறது! அதாவது, பாதுகாவலர்கள் 179லிருந்து 149 ஆகக் குறைக்கப்படப் போகிறார்களாம். இந்தச் செய்தி வந்ததிலிருந்தே சிவசேனை வட்டாரங்கள், 'எங்கள் தலைவருக்கு எதிராக சதிசெய்கிறார் புஜ்பல்' (உள்துறை அமைச்சர்) என்று கூக்குரலிடுகின்றன. "தாக்கரேவின் உண்மையான பாதுகாவலர்கள் அவரது அடிமட்டத் தொண்டர்கள்தாம்! தம் உயிரைப் பணயம் வைத்தாவது அவரைக் காப்பாற்றி விடுவார்கள்" என்று அடிக்கடி மார்தட்டிக் கொள்கிறார்கள்! பின் ஏன் இந்தக் கவலை? காவல் குறைந்து விட்டால், மதிப்பு குறைந்துவிடும் என நினைக்கிறார்களோ?



• தாக்கரே

# 'திடுக்'டிக்ளோர்!

## கிட்நாப்பும் செய்வாள் பத்தினி!

**எ**த்தனையோ கடத்தல் மன்னர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள்; ஆனால் இந்தக் கடத்தல் 'மன்னி' எல்லோரையும் தூக்கிச் சாப்பிட்டு ஏப்பமே விட்டு விட்டார் - அந்த ஓசை கொஞ்சம் அதிகமாக இருந்ததால் மாட்டிக் கொண்டு விட்டாள், பாவம்!

கோரேகானைச் சார்ந்த 36 வயது ஷீலா பானுவுக்கு, சிண்டிகேட் வங்கியில், தன் கணவனுடன், 'ஜாயிண்ட் அக்கவுண்ட்'. கணவனுக்குத் தெரியாமல் நிறையப் பணத்தை 'ஸ்வாஹா' பண்ணியிருக்கிறார். அப்பாவிக் கணவன் யாருக்கோ கொடுத்த 'செக்' 'பவுன்ஸ்' ஆகிவிட, தன் மனைவியிடம், வங்கியிலுள்ள இருப்புத் தொகையை அறிந்து வரச் சொல்லியிருக்கிறார். பானுவுக்கு 'குளிர்' எடுத்திருக்கிறது; தன் பையன் மாஸினுடன் 'கலந்தாலோசித்து', நண்பர் சௌத்ரியுடன் அவனை வேற்றிடத்துக்கு அனுப்பிவிட்டு, போலீசில் தன் பிள்ளையை யாரோ கடத்தி விட்டதாகவும், ரூ 50,000 கேட்டு மிரட்டுவதாகவும் கம்ப்ளெயிண்ட் கொடுத்திருக்கிறார்கள். வீட்டின் அமைதி கருதி பிள்ளையும் ஒத்துழைத்திருக்கிறான். யாரோ 'சேல்ஸ்மேன்' தன்னை மயக்கி பிள்ளையைக் கடத்தியதாக பானு விட்ட ரீலை நம்பாமல், போலீசார் விசாரித்திருக்கின்றனர். சௌத்ரி உண்மையை உளறிவிட, குட்டு உடைந்து விட்டது. கணவனிடமிருந்து பணத்தைப் பெற்று, சௌத்ரியிடம் கொடுத்து வங்கியில் கட்டுவதாக ஏற்பாடாம்... அடக் கடவுளே! கிட்நாப்பும் செய்வாள் பத்தினி....?

## 'வாட்டர்' பிராப்ளம்ஸ்

**மு**ம்பை பத்திரிகையாளர்களெல்லாம் சங்கராச்சாரியார் சுவாமிகளிடம், வாரணாசியில் தீபாமேத்தாவுக்கு ஏற்பட்ட பிரச்னைகளைக் குறித்து நிறைய கேள்விகள் கேட்கிறார்கள். சுவாமிகளும், "கங்கைக் கரையிலுள்ள விதவைகளுக்கு உதவ வேண்டும் என நினைத்திருந்தால், தீபா ஏதாவது ஒரு படத்தின் வசூலை அவர்களின் மேம்பாட்டுக்கு ஒதுக்கியிருக்கலாம்; அல்லது வெறும் டாகுமெண்டரி எடுத்திருக்கலாம்; கமர்ஷியல் படம் தேவையில்லையே" என்று சொல்லி வருகிறார்.

— ஜெயஸ்ரீ ராஜ்

ஸ்ரீ:

ஸ்ரீமந் நடனகோபால நாயக்யை நம:

# மதுரை ராணி சாரீஸ் சுங்குடிப் புடவைகள்

## சென்னையில் தனி ஷோரூம்




*"ராணி சாரீஸ்"*

"RANEE SAREES"

MADURAI

SPECIAL QUALITY

COLOURS ARE GUARANTEED

FOR DHOBI WASH

**COPY RIGHT REGD. A-52846/95**

**COPY RIGHT REGD. A-52846/95**

காப்பி ரைட் ரிஜிஸ்டர் நம்பர் உள்ளதா
என பார்த்து வாங்கவும். மற்றவை நம் தயாரிப்பு அல்ல.

எங்களிடம் மதுரை சுங்குடிப் புடவைகள்
ஸ்பெஷல் சுந்தர் காட்டன் சாரீஸ், மற்றும்
அனைத்து காட்டன் புடவைகளும், மற்றும்
100% காட்டன் வேஷ்டி, துப்பட்டாக்களும்
சுடிதார் மெட்டீரியல்களும் கிடைக்கும்

***Reduction sale! From 24.3.2000 to 31.3.2000***

# RANEE SAREES

***EXCLUSIVE SHOPEE***

*Shop. No. 23, "Gold Crest Complex" 1st Floor,*
*54 - 55, North Usman Road,*
*Panagal Park, (Near Petrol Bunk)*
*T. Nagar, Chennai - 600 017.*
*✆ 8217308, 8217309*

அந்த ஆளோட தோட்டத்தைப்
பார்த்து மயங்கிடாதீங்க....
நம்ம சோலைக்குக் கொஞ்சம்
வாங்க சொல்றேன்....



2000 மார்ச் 19
பிரமாதி பங்குனி 6
மலர் : 58
இதழ் : 34

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பீஹாரில் கழுதை வியாபாரம்!

'ஆளுனர் பதவி என்பதே அவசியமற்றது!' என்று வாதிடுவோருக்கு பீஹார் தேர்தல் முடிவுகள் ஒரு நல்ல படிப்பினை!

போட்டியிட்ட இரு பிரதான அணிகளுமே பெரும்பான்மை பெறாத நிலையில், அரசு அமைக்க யாரை அழைப்பது என்ற கஷ்டமான முடிவை எடுக்க வேண்டிய முக்கியமான பொறுப்புக்குரியவரானார் ஆளுனர் வி.ஸி. பாண்டே.

நிதிஷ் குமாரை, தேசிய ஜனநாயக முன்னணி சார்பில் ஆட்சி அமைக்க அவர் அழைத்ததும் அதன் பின்னர் நிகழ்ந்தவையும் கடும் விமர்சனத்துக்கு உள்ளாகியிருக்கின்றன. ஆட்சி அமைக்க அவசியமான மேலும் 16 எம்.எல்.ஏக்களின் ஆதரவைப் பெற பத்து நாட்கள் அவகாசம் தந்தும் நிதிஷ்குமாரால் அதைப் பெற முடியவில்லை. பெரும்பான்மையை நிரூபிப்பதற்கு முன்னரே தேவையற்ற அவசரத்துடன் பட்ஜெட்டை அவையில் சமர்ப்பித்து, நம்பிக்கை வாக்கெடுப்பைச் சந்திக்க முடியாமல் அவர் ராஜினாமா செய்தது ஜனநாயகத்தைக் கேலிக்கூத்தாக்கியிருக்கிறது.

தங்கள் கட்சியான ராஷ்ட்ரீய ஜனதாதளம்தான் அதிக இடங்களைப் பெற்ற தனிக்கட்சி; எனவே தங்கள் அணியே ஆட்சியமைக்க அழைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது லாலு




கூட்டாளிகளின் வாதம். அதிக இடங்களைப் பெற்றபோதிலும் ஆர்.ஜே.டியோ அது இடம்பெறும் அணியோ ஆட்சி அமைக்க தேர்தலில் பெரும்பான்மை பெற்றுவிடவில்லை. தேர்தலுக்குப் பின்னர்தான் அதைக் கஷ்டப்பட்டுச் 'சேகரித்'திருக்கிறது.

தேர்தல் முடிகிற வரையில் லாலு கட்சியைப் புறக்கணித்த காங்கிரஸ், இப்போது எதிர்ப்பை மூட்டை கட்டி வைத்து விட்டு லாலுவுக்கு ஆதரவு தரத் தயார் என்கிறது! அதுவும் உடனடியாக நடந்துவிடவில்லை. 'வெளியூர் சென்றுள்ள சோனியா டெல்லி திரும்பினால்தான் முடிவெடுக்கலாம்' என்று முதல் நிலை பேச்சுவார்த்தைகளின் இறுதியில் முடிவு ஒத்திப் போடப்பட்டது. அதன் பின்னர், கொள்கையளவில் காங்கிரசும் ஆர்.ஜே.டியும் முரண்பட்ட ஜார்கண்ட் மாநிலப் பிரிவினை தொடர்பாகத் தமது நிலையை அந்தர்பல்டி அடித்து மாற்றிக் கொண்டார் லாலு! அதாவது, காங்கிரஸ் எம்.எல்.ஏக்களின் ஆதரவைப் பெறுவதற்காக கொள்கையை விலையாகத் தந்து விட்டார்! பீஹார் மாநிலத்தை இரண்டாகப் பிரிக்கத் தயாராகி விட்டார். இது குதிரை வியாபாரத்திலும் கேவலமான 'கழுதை வியாபார'மன்றி வேறென்ன!

தற்போது ராப்ரி தேவி, ஆளுனரிடம் ஆதரவு எம்.எல்.ஏக்களின் பட்டியலைச் சமர்ப்பித்து ஆட்சி அமைக்க வாய்ப்புக் கோரியிருப்பது கணிதரீதியாகச் சரியாக இருக்கலாம். அக் காரணத்துக்காக ஆளுனர் அவரது பட்டியலை ஏற்று ஆட்சி அமைக்கவும் அழைக்கலாம். ஆனால், பீஹார் மாநில காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் தங்கள் கட்சி மேலிடத்தின் முடிவை ஏகமனதாக ஏற்கவில்லை என்பதை மறந்துவிடலாகாது. 'ஆர்.ஜே.டியை ஆதரிப்பது தற்கொலைக்குச் சமம்' என்று பேசியிருக்கிறார் வீணா சாஹி என்கிற காங்கிரஸ் எம்.எல்.ஏ.







இப்படிப்பட்ட இரண்டுங்கெட்டான் நிலைமையில், ஆர்.ஜே.டி. கூட்டணி ஆட்சி அமைத்தாலும் பதவியில் நீடிக்க தொடர்ந்து குதிரை வியாபாரத்தில் ஈடுபட வேண்டியிருக்கும்!

எனவே, ஆளுனர் பாண்டேயின் நிலைமை பரிதாபகரமானதுதான்! அதனினும் பரிதாபகரமானது பீஹார் மக்களின் நிலைமை.

தமக்கு வாய்ப்புத் தரப்படவில்லை என்பதற்காக 'தர்ணா' என்ற பெயரில் பொதுச் சொத்துக்களை துவம்சம் செய்யத் தூண்டும் காட்டு தர்பார் தலைவர் லாலு பிரசாத் யாதவ்; அவரது அக்கிரமங்கள், அராஜகம், ஊழல், அட்டூழியம் அனைத்தையும் வீர சாகசம் என்று நம்பி வாய் பிளந்து நோக்கும் அப்பாவி பீஹாரிகள்!

ஐம்பது ஆண்டுகளில் பீஹார் மாநில மக்களின் வாழ்க்கைத் தரமோ, கல்வி அறிவோ, ஜனநாயக உணர்வோ, எதுவுமே உயரவில்லை. அவை உயர்வதற்கு அடுத்தடுத்து வந்த ஆட்சித் தலைவர்கள் அனுமதிக்கவில்லை!

அறியாமையில் உழலும் அம்மாநில மக்களைக் காப்பாற்றி மேம்படுத்தும் கடமை, நாட்டின் தலைமைக்கு இருக்கிறது.

பீஹாரில் எந்த அணி ஆட்சி அமைத்தாலும் எதிர் அணி அவ்வாட்சியைக் கவிழ்க்க முயலும் அரசியல் விளையாட்டே தொடரும்! நிர்வாகம் என்பதாக எதுவும் நடைபெறப் போவதில்லை. 'வாலு போச்சு, கத்தி வந்தது' கதையாக, நிதிஷ் போய் ராப்ரி வந்தாலும் மக்கள் பயன் ஏதும் அடைந்து விடப் போவதில்லை. ஜனநாயக ரீதியான செயல்பாடு என்ற போர்வையில் இப்படியொரு நையாண்டி தர்பார் நடப்பதைக் காட்டிலும் சிறிது காலம் ஜனாதிபதி ஆட்சி நடப்பதே மேலானது. பீஹாரின் பலவீனமான அரசியல் சூழல் வெகு விரைவிலேயே அதற்கு வழிவகுத்துவிடும். ●

மனிதர் கடந்த பத்து வருடங்களாக பச்சைக் காய்கறிகள், பழ ரசங்கள், மோர் ஆகியவற்றைத்தான் உணவாகக் கொள்கிறாராம். அது மட்டுமல்லாமல் தாம் கலந்து கொள்ளும் எல்லா நிகழ்ச்சிகளிலும் இயற்கை உணவைப் பற்றி மறக்காமல் பேசுகிறாராம். – சைதை துரைசாமியைப் பற்றி இந்தச் செய்தி அறிந்ததும் அவரைச் சந்தித்தோம்:

# ஆளே மாறிட்டாருப்பா!

"எந்தச் சூழ்நிலையில் இந்த உணவுப் பழக்கத்துக்கு மாறினீர்கள்?"

1989-ம் ஆண்டு தேர்தலில் தோற்றுப் போனேன். அதன் பின் நிறைய நேரம் கிடைத்தது. ஜெகத்ரட்சகன் (இப்போது பாராளுமன்ற உறுப்பினர்) மற்றும் நண்பர்களோடு எங்கெங்கு ருசியான உணவு வகைகள் கிடைக்கிறதோ அங்கெல்லாம் சென்று ஒரு வெட்டு வெட்டுவோம். தினசரி மூன்று வேளையும் எனக்கு அசைவம் வேண்டும். இந்த நிலையில்தான் உடல் ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்கியது. கொஞ்சம் நடந்தால் மூச்சு வாங்குவது, வாயு தொந்தரவு, உடல் வலி, போதாதற்கு மூலநோய். தொப்பை வேறு பெருத்தது. 'மூலத்துக்கு அறுவைச் சிகிச்சை செய்து கொண்டே தீர வேண்டும்' என்றார் டாக்டர். மிகவும் கவலையுடன் இருந்த அந்தச் சூழ்நிலையில்தான், கந்தசாமி முதலியார் எழுதிய 'உணவே மருந்து' என்ற நூலைப் படிக்கும் வாய்ப்பு கிடைத்தது. "உணவே மருந்தாகவும், மருந்தே உணவாகவும் உட்கொள்ள வேண்டும்" என்று அதில் சொல்லப்பட்டிருந்தது. மேலும் ஒரு ஆர்வம் உந்தித் தள்ள இயற்கை உணவுகளைப் பற்றி மு. ராமகிருஷ்ணன், ஏ.வி.ஜி. ரெட்டி ஆகியோரது புத்தகங்களைப் படித்தேன். ஒரு ஞாயிறு மதியம் தடபுடலாகத் தயார் செய்யப்பட்டிருந்த அசைவ உணவைத் தியாகம் செய்து விட்டு இயற்கை உணவுடன் இணைந்து கொண்டேன். பதினைந்தே நாட்கள்தான். உடலில் மாறுதல் பளிச் சென்று தெரிந்தது. மறைந்து போயிருந்த சுறுசுறுப்பு மீண்டும் வந்தது. மூலநோயின் கொடுமை குறைந்திருந்தது. அடுத்த ஒரு மாதத்தில் டாக்டரே ஆச்சர்யப்படும் படியாக ஆபரேஷன் இன்றியே மூலம் விடைபெற்றுக் கொண்டது."

**மொடாக் குடியர்கள் குடியை விட்டுவிட்டு, ஒரு வருடம் இருந்தால் அவர்களை மேலும் ஊக்கப்படுத்தும் விதமாக ஒரு பவுன் தங்க மோதிரம் பரிசாகக் கொடுக்கிறார் துரைசாமி!**

"தினசரி உணவுப் பழக்கம் என்ன?"

"காலை பனைவெல்லம் போட்டு கொத்துமல்லி அல்லது புதினா சாறு. அப்புறம் எட்டு, ஒன்பது மணிவாக்கில் பழச்சாறு. சீசனுக்கேற்ற மலிவான பழங்களை உபயோகப் படுத்திக் கொள்வேன். பத்து மணியிலிருந்து வெள்ளரிக் காய், வெங்காயம், தக்காளி என்று பச்சைக் காய்கறிகளை, கொஞ்சம் கொஞ்சமாக சாப்பிடுவேன். அவ்வப்போது கருவேப்பிலை போட்ட மோர், (சமைக்காத) தேங்காய். இரவு ஏழு மணிக்குள் உளுந்து சேர்க்காமல் அரிசி,



வெள்ளை பூசணி, வெந்தயம் போட்டு தயார் செய்யப்படும் இட்லி மாவில் செய்யப்பட்ட நான்கு இட்லி. வாழைப் பழங்களுடன் முடித்துக் கொள்வேன்."

"சாதாரண மக்கள் கடைபிடிக்க யோசிக்கும் கொஞ்சம் காஸ்ட்லியான சமாசாரமாக இருக்கும் போலிருக்கிறதே?"

"கிடையவே கிடையாது. சீசனில் கிடைக்கும் பழங்கள் காய்கறிகளை வாங்க வேண்டும். எண்ணெய், அரிசி ஆகியவற்றுக்கு ஆகும் செலவை விட அதிகமாக ஆகாது. மேலும் வேர்க்கடலை, பேரீச்சம் பழங்கள் போன்றவை எந்தக் காலத்திலும் மலிவாகக் கிடைக்கும். உட்கார்ந்த இடத்திலேயே வேலை செய்யும் கொஞ்சம் வசதியுள்ளவர்கள் எந்தச் சிரமமும் இல்லாமல் இந்த உணவு முறையைக் கடைப்பிடிக்கலாம். நடுத்தட்டு மக்கள் முயன்றால் முடியும். அடித்தட்டு மக்கள் வேர்வை சிந்தி உழைப்பதால் நம்மை அணுகும் நோய்கள் அவர்களைக் கண்டு ஒதுங்குகின்றன."

"உங்களின் இந்த தனிப்பட்ட உணவு பழக்கத்தால், உங்கள் வீட்டில் உள்ள மற்றவர்களின் நிலை பாதிக்கப்படாதா?"

"என் மனைவி என் உணவுப் பழக்கத்துக்கு மாறி விட்டாள். என் மகனும் விரைவில் மாறி விடுவான் என்று நம்புகிறேன்."

பெரும்பாலான தனது நண்பர்களை இயற்கை உணவுக்கு மாற்றியிருக்கிறார் துரைசாமி. கட்டுக்கோப்பாக உடலை வைத்திருக்கும் இந்த 48 வயதுக்காரருக்கு பிடித்த மற்றொரு விஷயம் : யோகாசனம்.

கடந்த பத்து வருடங்களாக டாக்டரைப் பார்க்க வேண்டிய அவசியமே வரவில்லையாம்! மொடாக் குடியர்கள் குடியை விட்டு விட்டு, ஒரு வருடம் இருந்தால் அவர்களை மேலும் ஊக்கப்படுத்தும்விதமாக ஒரு பவுன் தங்க மோதிரம் பரிசாகக் கொடுக்கிறார் துரைசாமி! கடந்த 16 வருடங்களாக ஏழே பேர்தான் மோதிரம் பரிசு பெற்றிருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை மேலும் ஏற வேண்டும் என்பதே என் ஆசை" என்கிறார். திராவிட இயக்கத்திலிருந்தாலும் கதர் ஆடை, இயற்கை உணவு, மதுவிலக்கு என்று சுத்த காந்தியவாதியாக மாறியிருக்கிறார் துரைசாமி.





சந்திப்பு : ஸ்ரீநிவாசன்
படங்கள் : வெங்கடேஷ்

# தொழிலோடு தர்மமும்...

20 முதல் 25 பேருக்கு இந்த தர்ம உபநயன நிகழ்ச்சியை எங்களுடைய ஸ்ரீ குருராகவேந்திரா திருமண மண்டபத்தில் நடத்துகிறோம்.

தர்மம் தலை காக்கும், தக்க சமயத்தில் உயிர் காக்கும் என்பார்கள். வெற்றிகரமாக இரண்டாவது தடவையாக 20 பேருக்கு தர்ம உபநயனம் செய்த J.D. மேரேஜ் கேட்ரிங் சர்வீஸ் உரிமையாளரும் தென்னிந்திய சமையற்கலைஞர் சங்கத்தின் தலைவருமான J.D. துரை அவர்களைச் சந்தித்த போது சில தகவல்களைக் குறிப்பிட்டார்.



• உபநயன வடுக்களுடன் J.D. தம்பதியினர்

"இந்த நவீன உலகத்தில் பக்கத்து வீட்டில் வசிப்பவர்களுக்குக் கூட உதவி செய்யாமல் இருக்கும் காலத்தில் இவன் மட்டும் எப்படி செய்கிறான் என்ற கேள்வி எல்லோருக்கும் தோன்றும்.

ஆரம்ப காலம் முதல் எங்கள் குடும்பம் மிகவும் ஏழைமையான நிலையில் இருந்தது. எனக்கும் என் சகோதரருக்கும் உபநயனம் செய்யப் போதுமான வசதி இல்லாத காரணத்தினால் என் தந்தையார் பல பேரிடம் யாசகம் கேட்டு உபநயனம் செய்து வைத்தார். அந்தச் சம்பவம் எனது மனத்தில் பசுமரத்தாணி போலப் பதிந்தது. இந்த நிகழ்ச்சியை மனத்தில் வைத்துக் கொண்டுதான் ஒவ்வொரு ஆண்டும் மாசி மாதத்தில் ஏழைமை நிலையில் இருக்கக்கூடிய

இந்தக் காலத்தில் சாதாரண சில தர்ம காரியங்களை செய்வதற்குக் கூட நன்கொடை பெறுகிறார்கள். ஆனால் நாங்கள் நடத்தும் இந்த தர்ம உபநயன காரியங்களுக்காக யாரிடமும் நன்கொடை பெறுவதில்லை. நான் செய்யும் சமையல் தொழில் மூலம் வரும் வருவாயிலும் எங்களுடைய குருராகவேந்திரா கல்யாண மண்டபத்தின் மூலமான வருமானத்தில் ஒரு பகுதியையும் இந்த மாதிரி தர்ம காரியங்களுக்காக ஒதுக்கி வருகிறேன். இதையெல்லாம் விளம்பரத்துக்காகச் சொல்வதாக நினைக்க வேண்டாம். ஆரம்பக் காலத்தில் கும்பகோணத்தில் வீதி வீதியாக பட்சணம் விற்றது முதல் சென்னைக்கு சாதாரண சமையல்காரனாக வந்து இறைவன் அருளாலும் ஸ்ரீகுரு ராகவேந்திரரின் கிருபையாலும் இன்றைக்கு ஒரு நல்ல நிலையில் இருப்பதற்குக் காரணம் சிறு வயதிலிருந்தே எனக்குத் தோன்றிய சிறு சிறு தர்ம சிந்தனைகள்தான்.

இந்த தர்ம உபநயன வைபவத்தில் பங்குபெறும் வடுக்களுக்கு சில ஏற்பாடு

• சீர் வரிசைகள்



கள் செய்துள்ளோம்.

* உபநயனம் செய்து கொள்ளும் ஒவ்வொரு குழந்தைகளின் குடும்பத்தினருக்கும் சுமார் 50 பேர் வரை காப்பி, டிபன், சாப்பாடு.

* எல்லா உபநயன குழந்தைகளுக்கும் ஒரு ஜோடி பருப்புத் தேங்காய், முறுக்கு, லட்டு, திரட்டுப் பால், அதிரசம்.

* வெள்ளி பூணூல், முகூர்த்த வேஷ்டி, குமார போஜனம் வேஷ்டி, பெற்றோருக்கு வேஷ்டி, புடைவை, ரவிக்கை பிட்.

* பஞ்ச பாத்திர உத்திரணி, தாம்பாளம், பிக்ஷை அரிசி பாத்திரம், பூ மாலைகள், வைதீக சாமான்கள் போன்ற அனைத்து ஏற்பாடுகளையும், வருகிற அனைவருக்கும் தங்க இட வசதிகளும் செய்திருக்கிறோம்.

என்னிடம் கல்யாண ஆர்டர் கொடுத்த அனைவருக்கும் இந்த தர்ம காரியத்தில் பங்கு உண்டு. ஏனென்றால் உங்களிடம் கிடைத்த வருவாயில்தான் இந்த மாதிரியான தர்ம சிந்தனையுடைய காரியங்களை சிறப்பாக நடத்துகிறேன். இதோடு மட்டுமல்லாமல் விரைவில் ஜாதிமத பேதமின்றி பத்து ஏழைக் குடும்பத்தின் பெண்களுக்கு இலவசத் திருமணம் செய்ய உத்தேசித்துள்ளோம். அத்துடன் செம்பரம்பாக்கத்தில் ஸ்ரீ குரு ராகவேந்திரா முதியோர் இல்லம் துவக்கவுள்ளது. இந்தக் காரியங்களை மிகச் சிறப்போடு செய்ய வேண்டுமென்றால் வாடிக்கையாளர்களுடைய ஆதரவு கிடைக்க வேண்டும். கோலம் முதல் கட்டுச் சாதம் வரை மிகச் சிறந்த முறையில் திருமணத்தை நடத்தித் தருகிறோம்.

எங்களுடைய திருமண மண்டபமான ஸ்ரீ குருராகவேந்திரா கல்யாண மண்டபத்தில் நல்ல சுவையான குடிநீர், காற்றோட்டமான வசதியுடன் பாத்ரூம் அட்டாச்சுடன் 6 ரூம் (1 ஏ.சி), 600 பேர் உட்கார்ந்து பார்க்கக்கூடிய நவீன கல்யாண ஹால், 150 பேர் சாப்பிடக் கூடிய டைனிங் ஹால், சைதை முதல் தாம்பரம் செல்ல 5 நிமிடத்திற்கு ஒருமுறை பஸ் வசதி, கல்யாண மண்டபத்திலிருந்து மவுண்ட் வரை செல்ல இலவச வேன் வசதி,



* ஸ்ரீ குருராகவேந்திரா திருமண மண்டபம்

கெஸ்ட் ஹவுஸ் (மாப்பிள்ளை வீட்டாருக்கு), மாப்பிள்ளை அழைப்பிற்கு விஜய கணபதி ஆலயம், கார் பார்க்கிங் வசதியுடன் உள்ளது.

அனைத்து வசதிகளுடன் ஸ்ரீ குருராகவேந்திர கல்யாண மண்டபம் 24 மணி நேரத்திற்கு 1000 பேருக்கு சமைக்கக்கூடிய பாத்திரங்கள், 600 சேர், டைனிங் டேபிள், குடிநீர், ஜமக்காளம் உட்பட வாடகை வெறும் ரூ. பத்தாயிரம்தான் (10,000). ஏப்ரல், மே, ஜூன், ஜூலை முகூர்த்த தினங்களில் மண்டபம் கிடைக்கும்.

இது தவிர ஸ்ரீ குரு ராகவேந்திரா வித்யாலயா என்ற பள்ளியை உள்ளகரத்தில் சிறப்பாக நடத்தி வருகிறோம். இதில் சுமார் 150 குழந்தைகள் படித்து வருகின்றனர்.

ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பக்கபலமாக ஒரு பெண் துணையிருப்பார். அதுபோல என்னுடைய வெற்றிக்கு என் மனைவி பக்கத்துணையாக இருக்கிறார். நான் கடினமாக உழைத்தாலும் அதிர்ஷ்டம் எனக்கு மனைவி வந்த பிறகுதான்! இன்று நான் செய்யும் தர்ம காரியத்திற்கு மறுப்பு ஏதும் சொல்லாமல் வீட்டு நிர்வாகத்தை கவனித்து, என் தொழில் சிறக்கவும் வழிசெய்து வருபவர் அவர் தான்!"

# மழ மழ

## திருவாழத்தான்

புதிதாக ஷேவிங் செட் வாங்கியிருந்தான் சுவாமிநாதன். சேஃப்டி ரேஸர், ஐந்து பிளேடுகள் கொண்ட பச்சை நிற பாக்கெட், ஜிலு ஜிலு பிரஷ், இறக்குமதி கிரீம் ட்யூப் ஆகிய சாதனங்கள் கொண்ட செட் அது! இவற்றை அவன் எடுத்து வைத்து, வாஷ்பேஸின் அருகில் கண்ணாடி முன் நின்றபோது, தான் ஏதோ ஒரு தேர்ந்த தொழில் தொடங்கப் போவதாக, சாதனை ஒன்று நிகழ்த்தப் போவதாக அவனுள் பரவசம் மூண்டது.

கண்ணாடியில் முகம் பார்த்தான். பூனை முடியாக மயிர் வளர்ந்து கிடக்கிறது. அவனுடைய சிறு தாடியைப் பார்த்துவிட்டு, வளர்க்கப் போகிறீர்களா என்று அவனுடன் பணிபுரியும் டைப்பிஸ்ட் கோகிலா கேட்டாள். அவளைக் காதலிக்கலாமா என்று அவன் எண்ணிக் கொண்டிருந்த ஒரு நேரத்தில் அவள் அப்படிக் கேட்டுவிட்டாள். ஆகவே முகச்சவரம் என்பதான சங்கல்பத்தை மேற்கொண்டு விடுவது எனத் தீர்மானித்தான்.



இதுநாள் வரை அவனுடைய தாயோ, தந்தையோ, தங்கையோ இப்படி முகத்தில் முடி வளர்ந்துள்ளதைச் சுட்டிக் காட்டவில்லை. காதலிக்கும் எண்ணம் எழுந்ததால், கோகிலாவுக்கு மட்டும் பார்வையில் பட்டிருக்கிறது. ஆகவே, இந்த ஷேவ் தீர்மானம்! சுய ஷேவ்.

உடன் பணிபுரியும் காசிராமன் கருகரு வென்று, கம்பி பிரஷ்ஷாக, இந்தப் பக்கம் இரண்டு அங்குலம், அந்தப் பக்கம் இரண்டு அங்குலமாக புஸ்தி மீசை வைத்திருக்கிறான். அத்தனை பெரியதாக இல்லாவிட்டாலும், சின்ன மீசை, கம்பளிப் பூச்சி போலவாகிலும் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது அவன் விருப்பம்.

'சவரம் செய்து கொள்வது எப்படி?' என்பது குறித்து காசிராமன் சின்ன புத்தகம் போடும் அளவுக்கு ஒரு சொற்பொழிவை நேற்று மாலை இவனிடம் ஆற்றியிருந்ததால் தேர்ந்த சர்ஜனின் சாதுர்யத்துடன் முனைந்தான்.

பிரஷ்ஷில் கிரீமை எடுத்துக் கொண்டான். எலுமிச்சை மணம்! புசுபுசுவென்று முகத்தில் பூசிக் கொண்டு, கண்ணாடியில் பார்த்தபோது, கதகளி நாட்டியக் கதாநாயகனின் முகமாக ஒரு நேரமும், கிருஸ்துமஸ் தாத்தா சாந்தா க்ளாஸ் முகமாக மறுநேரமும் காணப்படுவதாக எண்ணிக் கொண்டான்.

சவரம் செய்தான்.

கிருதாக்கள், தாடி, மீசை என்று வரிசையாக ஷேவ் செய்தான். இனி வாழ்நாள் முழுதும், வாரம் ஒரு தடவையோ, இரண்டு நாட்களுக்கு ஒருமுறையோ, நாள்தோறுமோ ஷேவ் செய்து கொண்டாக வேண்டும்.

தலையை இப்படியும் அப்படியுமாகத்





''இவ்வளவு தண்ணியா பால் ஊத்தறியே! உங்க வீட்ல டீ, காபி எதுல போடுவீங்க?''

''நாங்க எல்லோருமே ஹார்லிக்ஸ்தான் சாப்பிடறதும்மா!''

– மிஸ்டர் எக்ஸ்

திருப்பி கண்ணாடியில் பார்த்தான். இடப் பக்கம் கிருதா, வலது பக்கத்தில் இருப்பதை விடச் சற்று இறங்கி இருப்பதாகத் தோன்றியது. ரேஸரை இடப்பக்கம் வைத்து, இழுத்தான். கண்ணாடியில் பார்த்தபோது, வலது பக்கம் சற்று இறக்கம்.

சரக்... சரக்...

இப்போது கண்ணாடியில் பார்த்துக் கொண்டபோது, டிவியில் பார்த்த ஏதோ ஒரு ஆப்பிரிக்க மனித இனம் கவனத்துக்கு வந்தது. தன் மீது கோபம் கூட வந்தது. சரியாகச் சிரைத்துக் கொள்ளக் கூடத் தெரியவில்லை. வேறு எதுக்கு நீ லாயக்கு என்பதான கோபம்! வேறு எங்காவது மழிக்காமல் விட்டுப் போய் இருக்கிறதா என்று பார்த்தான். கண்களுக்கு மேலாக இரு புருவங்களுக்கு இடையில் பாலம் கட்டினாற்போல, முடி வளர்ந்து கிடந்தது. லேசாக கிரீம் பூசி ரேஸர் கொண்டு அந்த முடிகளை அகற்ற முனைந்தான். அப்படி முனைந்ததில் வலது பக்கப் புருவ முடியில் ஒரு பகுதி சேர்ந்து வந்து விட்டது. ஆகவே வலது புருவ முடிக்குச் சரிசமமாக இடது புருவ முடியைச் சரிசெய்தான். வலது, இடது என்று செல்ல செல்ல...

அவ்வளவுதான். புருவங்கள் மறைந்தன. பார்த்தான். அவனுடைய முகத்தை பப்ளிமாஸ் போலக் காட்டியது கண்ணாடி. கோரம். ஒருவன் தனக்குத்தானே இப்படி கோரப்படுத்திக் கொள்ள முடியுமோ? முடிந்திருக்கிறதே!

குளிப்பதற்குச் சென்றான்.

காலைச் சிற்றுண்டிக்கு உட்கார்ந்தபோது, கையில் இட்லித் தட்டுடன் வந்த அவன் அம்மா அதிர்ச்சியுற்று, பதைத்துப் போய் அவனைப் பார்த்து சத்தம் போட்டார். "ஐயோ, இங்கே வாங்களேன், வந்து பாருங்களேன்!"

"என்ன?" அப்பா விரைந்து வந்தார்.

"என்ன, என்ன?" தங்கை ஓடி வந்தாள்.

"இவன் மூஞ்சியைப் பாருங்கோ! பெரிய பலாக் கொட்டை மாதிரி."

"அட, ஆமா. எப்படிடா செஞ்சிண்டே?" அம்மா கேட்டாள்.

"பலாக் கொட்டை இல்லேம்மா! முலாம் பழம் மாதிரி இருக்கு!" தங்கை சொன்னாள்.

இதுலே எது சரி? அவனாக நினைத்துக் கொண்டது பப்ளிமாஸ்.

''யாரைக் கேட்டுண்டு ஷேவ் பண்ணிண்டே?" அப்பா ஆவேசத்துடன் முன்னேறி வந்தார்.

"யாரைக் கேட்கணும்? என் மூஞ்சி. நான் ஷேவ் பண்ணிண்டேன்."

"ஷேவ் பண்ணிக்கோ. எதுக்காக இப்படி முகத்தைக் கோரப்படுத்திண்டேன்னு கேட்கறேன்."

''ஃபர்ஸ்ட் ஷேவ். கொஞ்சம் அதிகமா பண்ணிண்டுட்டேன். அதுக்காக இப்படி வீடே கூடி அமர்க்களப்படுத்தணுமா?"

பஸ் ஸ்டாப்பில் நின்றிருந்த சக பயணிகள் அனைவரும் ஒரே நேரத்தில் அவனுடைய முகத்தைப் பார்த்தபடி நின்றார்கள். கேவலம், ஒரு முதல் சவரம் இப்படியா பாரத சமுதாயத்தைப் பாதிக்கும்?

அலுவலகத்தினுள் நுழைந்ததும், வாயில் காப்போனிலிருந்து மானேஜர் வரை ஆச்சர்யத்துடன் பார்த்தார்கள். இவர்களுடைய ஆச்சர்யத்தைத் தவிர்க்க வேண்டும் என்றால், ஒரு வாரமாவது லீவு போட்டு, முடி வளரக் காத்திருக்க வேண்டும். ம்ஹூம், அசரப் போவதில்லை. உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அசரப் போவதில்லை.

நாற்காலியில் உட்கார்ந்து, லெட்ஜரைப் புரட்டியபோது, காசிராமன் வந்து அவன் முன் நாற்காலியில் அமர்ந்தான். முகம் இலுப்பச்சட்டியில் கடலை வறுபடுவது போல, கடுகடுவென்று இருந்தது. ''இன்னிக்கு ஷேவ் பண்ணிக்கப் போகிறேன் என்று நேற்றே நீ சொல்லியிருந்தால், நான் உன் வீட்டுக்கு வந்து சொல்லிக் கொடுத்திருக்க மாட்டேனா?" என்றான்.

"அதான், நேத்திக்கே சொன்னியே, அதுபடிதான் ஷேவ் பண்ணிண்டேன்."

"இப்படி வேறே எனக்குக் கெட்ட பேரா? வெளியே சொல்லாதே" காசிராமன் எழுந்து போனான்.

அன்று முழுதும் கோகிலா அவனுடன் பேசவில்லை. ஆனால் மற்ற ஊழியர்களின் முகங்களில் ஆச்சர்யம், எள்ளல் முதலான உணர்வுகள் இருக்க, கோகிலாவின் முகத்தில் ஒருவித வருத்தம் தோய்ந்து இருப்பதாக நினைத்துக் கொண்டான்!

மாலையில் டைப்ரைட்டரை மூடிவிட்டு, கைப்பையை எடுத்துக் கொண்டு அவள் அவனை நோக்கி வந்தாள். என்ன சொல்லப் போகிறாளோ, ஏது சொல்லப் போகிறாளோ என்று அவனுடைய நெஞ்சம் தடக் தடக் என்று ஓசை எழுப்ப, அவள் அவன் எதிரே நின்று, ''அந்த தாடிக் குஞ்சம் உங்களுக்கு ரொம்ப அழகாகவே இருந்தது'' என்று சொல்லி விட்டுத் திரும்பி நடந்தாள். ○

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை – 84.

**? 'ஹே ராம்' படம் எடுத்தது ஏன்?' என்றதற்கு, 'ராஜாஜி கூட ஒருத்தனைச் சுட்டுட்டாரு – நிறைய பேருக்குத் தெரியாது' என்று கமல் ஒரு பத்திரிகை பேட்டியில் பதில் கூறியிருக்கிறாரே?**

! ராஜாஜி வாழ்க்கை வரலாறை கவனமாகப் படித்தால் தாம் எடுத்துக்காட்டுகிற முன்னுதாரணம் ரொம்ப தவறானது என்று கமல் நிச்சயம் உணர்வார். ஒரு கலைஞர் மட்டுமல்ல, ஒரு அறிவு ஜீவி என்றும் கமலை ரசிகர்கள் கருதும்போது அவர் மிகுந்த பொறுப்புணர்வோடு படம் எடுக்க வேண்டும்; பேச வேண்டும்.

● வி. சிவா, மதுரை – 16.

**? சென்னை மேயர் ஸ்டாலினின் பிறந்த நாள் விழா ஆடம்பரம், கோலாகலம் பற்றி...?**

! ஸ்டாலின் மட்டுமென்ன, எல்லா அரசியல் தலைவர்களுக்குமே பிறந்த நாள் என்பது இன்று ஒரு பப்ளிசிடி ஸ்டன்ட் ஆகி விட்டது. மேயர் விஷயத்தில் முந்தைய தினமே பனகல் பார்க்கில் பொதுக் கூட்டம் போட்டு போக்குவரத்தையெல்லாம் திசை திருப்பி பிராணனை வாங்கி விட்டார்கள். பிறந்த நாள் கொண்டாட்டமெல்லாம் வீட்டிலே கேக் வெட்டுவதுடன் முடிவடைந்து விடக் கூடாதோ?

● ரா. சாலமோன், ஆலங்குளம்.

**? 'பாரதீய ஜனதாவின் தூதர்களாக திராவிட முன்னேற்றக் கழகம் செயல்படுகிறது' என த.மா.கா. எம்.எல்.ஏ. அழகிரி சட்டசபையில் குற்றம்சாட்டியுள்ளாரே?**

! ஜெயலலிதாவின் தூதராகப் பேசுகிறார்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

**? பாதுகாப்புச் செலவுக்காக பட்ஜெட்டில் இந்தியா அளவுக்கதிகமாக ஒதுக்கீடு செய்துள்ளது என்று பாகிஸ்தான் கூறியுள்ளது பற்றி...?**

! பாகிஸ்தான் என்ன சொல்வது? நாமே அதைத்தானே சொல்கிறோம்! இந்த ராணுவச் செலவுப் போட்டி இரு நாடுகளையும் பொருளாதார ரீதியில் பாதாளத்தில் தள்ளுவதுடன் யுத்த களத்தின் விளிம்பிலேயே சதா நிறுத்தி வைக்கும். சமாதானமாகப் போய், நட்பு வளர்ந்து, அமைதி நிலைநாட்டுவதே இரு நாடுகளுக்கும் மேன்மை தரும்.



• கொண்டாட்டமும் திண்டாட்டமும்!



• பொறுப்பு எங்கே?

# தி.மு.க. பா.ஜ.கவின் தூதராமே...?



• அரிசி பாரம்!

● என். உஷாதேவி, மதுரை.

**? 'மரண தண்டனை விதிப்பதால் மட்டுமே கொலைக் குற்றங்கள் குறைந்து விடுவதில்லை. எனவே மரண தண்டனை சட்டத்தை ஒழிக்க வேண்டும்' என்று ராம் ஜெத்மலானி கூறியிருப்பது பற்றி...?**



• அழகான தூது!

! மரண தண்டனை விதித்தும் குறையாத

போதும், அதை ஒழித்துக் கட்டினால் கொலைக் குற்றங்கள் அதிகரிக்கவல்லவா செய்யும்!

● பா. பிரகாஷ், மதுரை – 16. ✱

*? மத்திய பட்ஜெட்டின் வருவாயில் 28 சதவிகிதம் கடனாகவும் செலவில் 26 சத விகிதம் வட்டியாகவும் காட்டப்பட்டுள்ளது. இதன்படி, வாங்கிய கடனில் 2 சத விகிதம்தான் செலவு செய்யப்படுகிறது. எதற்காக இவ்வளவு கடன் வாங்கி அதற்கு மேலும் வட்டி கட்ட வேண்டும்?*

! ஆண்டுதோறும் கடன் தொகை அதிகரித்து வந்துள்ளதால் செலுத்த வேண்டிய வட்டியும் அதிகரித்து வந்திருக்கிறது. இதைச் சீராக்க ஒரே வழி, உற்பத்திக்கு உதவாத அரசுச் செலவுகளைக் குறைப்பதுதான் என்பது தொடக்கப் பள்ளி மாணவனுக்குக் கூடப் புரியும். தொடர்ந்து வரும் அரசாங்கங்கள் மட்டும் புரிந்து கொள்ள மறுக்கின்றன.

• ரொம்பப் பழசுங்க!



• தப்புக் கணக்கு!

● அஜார், சென்னை – 18. ❑

*? மக்கள் வோட்டுப் போட்டு வெற்றியடைய வைத்து விட்டால் ஒரு கிரிமினலின் குற்றம் தண்டனைக்குரியது அல்ல என்று ஆகிவிடுமா?*

ஆகிவிடாது. ஆனால், வழக்கு நடத்த வேண்டியவர், வழக்கு தொடரப்பட வேண்டியவர் இருவருமே ஒருவராகி விடுவதால் வழக்குகள் பிசுபிசுத்துப் போகும். எனவேதான் வழக்கு நிலுவையில் இருந்தால் தேர்தலுக்கு நிற்கக் கூடாது என்ற சட்டம் அவசியமாகிறது.

● கி. பலராமன், கோவை – 11.

*? ஆர்.எஸ்.எஸ். விவகாரத்தினால் லோக் சபா அலுவல்கள் பாதிக்கப்பட்டது பற்றி?*

! 'நடப்பது கூட்டணி ஆட்சி; ஆர்.எஸ்.எஸ். விவகாரத்தில் கூட்டணிக் கட்சிகள் கூட எதிர்க்கும்' என்பது தெரிந்திருந்தும் பி.ஜே.பி. மத்திய, மாநில அரசுகள் பிடிவாதமாக நடந்து கொண்டது அநியாயம். பட்ஜெட் போன்ற முக்கிய விஷயங்கள் இருக்க, நாடாளுமன்றத்தையே நடக்க விடாமல் எதிர்க்கட்சிகள் ஆர்ப்பாட்டம் செய்தது அக்கிரமம்.

● பா. இராம்முருகன், சென்னை – 81.

*? பயிற்சி டாக்டர்கள் சாகும் வரை உண்ணாவிரதம் என்று அறிவித்தார்களே...?*

! கேரள அரசு அளவுக்குத் தமிழக அரசும் உதவித் தொகையை உயர்த்தும் என அறிவித்ததும் நிறுத்தி விட்டார்கள். ஆனால் உயிர் காக்கும் பொறுப்பில் இருப்போர் செய்யக்கூடாத காரியம் இந்த ஸ்டிரைக். அதிலும் முதல்வர் பரிவுடன் கோரிக்கைகளைக் கவனிக்கத் தயாராக இருந்தபோது தேவையற்றது.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? 5.75 ரூபாய்க்கு விற்க வேண்டிய ரேஷன் அரிசியை தமிழக அரசு 3.50 ரூபாய்க்கு விற்பது பற்றி...?*

! விலை வேறுபாட்டை வரி செலுத்தும் மக்கள்தான் தாங்குகிறார்கள் என்றாலும் இதுபோன்ற அத்தியாவசியப் பண்டத்தின் விலையைக் குறைத்து நிர்ணயிப்பது வருவாய் குறைந்த மக்களுக்குப் பேருதவி. இதில் மத்திய அரசு மானியத்தைக் குறைத்தது சரியல்ல. தமிழக அரசுக்குக் கூடுதல் சுமை.

● எம். வெங்கடேஸ்வரன், திருநெல்வேலி.

*? 'ஹே ராம்' பட டைட்டிலில் 'பாட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்' என்று இருக்கிறதே? இவர் யார் என்று தெரியுமா? புதுக் கவிதாயினியா?*

! இல்லைங்க, ரொம்பப் பழசு! பெரியாழ்வார்ன்ற பக்திக் கவிஞரோட வளர்ப்பு மகள் – கையில கிளி, கழுத்துல மாலை, தலையில கொண்டை, வாயில் எப்பவும் கண்ணன் பெயர்... கனவெல்லாம் கண்டு, அதைப் பத்திப் பாடி, கடைசில கண்ணனையே கல்யாணம் பண்ணிக்கலை..? அவங்கதாங்க...!

✱ ரூ. 25 பரிசு பெறுபவர் :
பா. பிரகாஷ்,
28 எ, மேலப் பொன்னகரம்
7வது தெரு,
மதுரை - 625 016.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
அஜார்,
117, எல்டாம்ஸ் சாலை,
சென்னை - 600 018.



**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

வார ஆரம்பத்துல நீங்க எதிர்பாராத பிரச்னைகள் சில தலை தூக்கும். மனசுல எப்பவும் ஒரு குழப்பம், கவலை வட்டம் போடும். அலைச்சலும் அசதியும் அதிகமா இருக்கும். ஏதாச்சும் முக்கியமான திட்டங்கள் வெச்சிருந்தீங்கன்னா, செயல்படுத்தறதுல சிக்கல்கள் வரவே செய்யும். குடும்பத்தாரோட அனுசரிச்சிப் போக வேண்டியது முக்கியம். வயசுல பெரியவங்களை எடுத்தெறிஞ்சிப் பேசாதீங்க. பயணங்களைத் தவிர்த்துடுங்க.



**ரிஷபம்** : (கிருத்திகை 2–ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2–ம் பாதம் வரை)

நீங்க எந்தத் துறையைச் சேர்ந்தவரானாலும் இந்த வாரம் முன்னேற்றம் உறுதி. மத்தவங்க புகழ்ந்து பாராட்டறாப்பல சில காரியங்களைச் செய்து முடிப்பீங்க. அரசியல்வாதிகள் புத்திசாலித்தனத்தோட செயல்பட்டு, பெரும் புகழடைவாங்க. வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு அனுகூலமான செய்தி ஒண்ணு வந்து குஷிப்படுத்தும். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. தொழில் தொடங்கறவங்களுக்கும் எதிர்பார்த்த பண உதவி கண்டிப்பா கிடைக்கும். பெண்களுக்குத் தங்க யோகம் இருக்கும்.



**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3–ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3–ம் பாதம் வரை)

உங்களை அறியாமலேயே மனசு ஆன்மீகத்துல தீவிரமா லயிக்கறதை உணருவீங்க. நீண்ட நாள் பிரார்த்தனைகளை நிறைவேற்ற சரியான சமயம் இது. தொழில் துறைல இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் உறுதி. அரசு ஊழியர்களுக்கு இடமாறுதல் வரலாம். சிலருக்கு மட்டும் ஊதிய உயர்வும் கிடைக்கலாம். குடும்பத்துல வயசுப் பொண்ணுங்க இருந்தாங்கன்னா, கல்யாணப் பேச்சை இப்ப ஆரம்பிக்கலாம். எழுத்தாளர்களுக்கும் ஆன்மிக சொற்பொழிவாளர்களுக்கும் புகழும் பரிசும் வந்து சேர்ற வாரம் இது.



**கடகம்** : (புனர்பூசம் 4–ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

உங்க காரியங்கள் நடைபெற நிறையத் தடைகளைச் சந்திக்க வேண்டி வரும். உழைப்பு அதிகமாகவும் பலன் குறைவாகவும் அமையறதைப் பார்ப்பீங்க. பேச்சுல எச்சரிக்கை காண்பிக்க வேண்டியது அவசியம். யாரைப் பத்தியும் கமென்ட் அடிக்காதீங்க. மேலதிகாரிகளிடம் மரியாதையா நடந்துக்கங்க. கடன் குடுக்கறதும் வாங்கறதும் வேண்டாம். வெளியூர்ப் பயணம், ஸ்பெகுலேஷன், லாட்டரி, – இந்த ஐட்டம் எதுவுமே இந்த வாரம் சுமுகமான பலன் தராது. எப்பவும் எச்சரிக்கையா நடந்துக்கங்க.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

ஆதாயமான காலகட்டம் இது. எடுத்த காரியங்கள்ல வெற்றி உறுதி. நண்பர்கள் தக்க நேரத்துல உதவி செய்து உங்க மனசைக் குளிர்விப்பாங்க. வெளிநாடு போற சான்ஸ் கூடி வரும். குடும்பத்துல ஏதோ ஒரு விசேஷம் நடக்கப் போவுது. சுபச் செலவுகளுக்குத் தயாரா இருங்க. இரும்பு சம்பந்தமான தொழில் செய்யறவங்களுக்கும் கணக்கு வாத்தியார்களுக்கும் இந்த வாரம் பணவரவு பிரமாதமா இருக்கும். பெண்களுக்கு வேலை வாய்ப்பு, பதவி உயர்வுன்னு குஷியான சமாசாரங்கள் உண்டு.



**கன்னி** : (உத்திரம் 2–ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2–ம் பாதம் வரை)

மனசுல குழப்பம் நிறைய இருக்கும் போது புதிய காரியங்கள் எதையும் தொடங்காதீங்க. ரொம்ப அவசியம்னா நாலு பேர்கிட்ட கருத்துக் கேளுங்க. நிதானம் ரொம்ப முக்கியம். கோர்ட்ல வழக்கு ஏதும் இருந்ததுன்னா, வாய்தா வாங்கப் பாருங்க. அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருக்கணும். சொல்லடி பட வாய்ப்பு இருக்கு. வெளியிடங்கள்ல சாப்பிடறதை அவாய்ட் பண்ணுங்க. சுரம், தலைவலி வர்ற வாய்ப்பு



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

மகான்கள் தரிசனம் கிடைக்கும். பணவரவு ஏராளமா இருக்கும். கடல் வாணிபம் செய்யறவங்களுக்கும் மீனவர்களுக்கும் நல்ல லாபம் கிடைக்கும். சுபகாரியங்கள் நடக்கறதுக்கான சூழல் ஏற்படும். சில பெரிய மனிதர்களோட தொடர்பு கிடைக்கும். அழகா பயன்படுத்திக்கிட்டு முன்னேறப் பாருங்க. கல்வியாளர்களுக்குப் புகழ் உறுதி. வெளியூர்ப் பயணம் இருக்கும். வேற்று மொழிக்காரர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. பொதுவா இது ஆதாயமான வாரம் தான்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சிலர் புதிய முயற்சிகள்ல அபார வெற்றி பெற சான்ஸ் இருக்கு. பழைய நண்பர்களோட உறவு புதுப்பிக்கப்படும். ஆனா, சகோதரர்கள் நடுவுல சண்டை உண்டாகும். வீட்டுல

# நடக்கும்!

அமைதி நிலவும். அதே சமயம் சில சில்லறை மனஸ்தாபங்களையும் தவிர்க்க முடியாது. பணத்தை, சிக்கனமா செலவு பண்ணுங்க. மகன்/மகள் உடல்நலத்துல கவனம் செலுத்துங்க. மனைவிமார்கள் விரும்பற காரியத்தை செய்து தர்றது மூலமா, வீட்டுல குதூகலத்தைக் கொண்டு வரலாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வெற்றி வாய்ப்புகள் கதவைத் தட்டற நேரம். உங்களோட அபார உழைப்பு மேலதிகாரிகள்கிட்ட பாராட்டைப் பெறும். மனசுல புதிய திட்டங்கள் உருவாகும். எதிரிகள் காணாமப் போயிடுவாங்க. வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். சிலருக்குத் திருமண நேரம் கூடி வரும். மனசுக்குப் புடிச்ச பெண்/பையன் அமைவாங்க. காதல் அனுபவம் பரம சுகமா இருக்கும். சிலருக்கு வெளிநாடு போற ஆசையும் வாய்ப்பும் உண்டானாலும் தற்சமயம் அதைத் தள்ளிப் போட வேண்டியது அவசியம். இரவு கண் விழிச்சு வேலை பார்க்கறதைத் தவிர்த்துடுங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

விருந்து, கேளிக்கைன்னு ஜாலியா பொழுது போகும். பெரும்பாலான நேரத்தை எதிர்காலம் பத்தின கனவுகள் காணறதுல செலவு பண்ணுவீங்க. சிலர் வீடு வாங்குவாங்க. டூ வீலர்; கார் வாங்கற யோகமும் இருக்கு. மனைவி/காதலி ஆசைப்படறதையெல்லாம் செய்து முடிக்கற ஜோர்ல கைப் பொருளை தாராளமா இழப்பீங்க. சினிமா, எழுத்துத் துறைல இருக்கறவங்களுக்குப் புதிய வாய்ப்புகள் கூடி வரும்.



மேஷ ராசிக்காரரான ராதிகாவுக்கு எதிர்பாராத சில பிரச்னைகள் இப்ப தலைதூக்கும்; எச்சரிக்கை அவசியம்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். மதிப்பும் கௌரவமும் உயரும். எதிர்ப்புகள் அடங்கி, உங்க கொடி உயரப் பறக்கும். அரசு விவகாரங்கள்ல நல்ல திருப்பம் உண்டாகும். நிர்வாகத் துறைல இருக்கறவங்களுக்கு வளர்ச்சி உறுதி. கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் பிஸினஸ் பண்றவங்களுக்கு ஆர்டர் மலை மலையா வந்து விழும். சினிமா, வர்த்தகம் எல்லாமே ஆதாயமாத்தான் அமையும். வெளிநாட்டுத் தொடர்புள்ளவங்களுக்கும் ராணுவத்தினருக்கும் வெற்றி வாய்ப்புகள் பிரகாசமா இருக்கும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

வாரத் தொடக்கம் அனுகூலமாகவே இருக்கும். புதிய முயற்சிகள் வெற்றி அடையும். பண வரவு திருப்தியா இருக்கும். பெண்களால் ஆதாயம் உண்டு. இரும்பு சம்பந்தப்பட்ட துறைல இருக்கறவங்களுக்கு வருமானம் ஜோரா இருக்கும். வாரக் கடைசில நண்பர்களோட பகை, எதிரிகள் தொல்லை, பார்ட்னரோட மனக்கசப்புன்னு கொஞ்சம் படுத்தும். பயணங்களைத் தவிர்த்துடுங்க. பர்ஸை ஜாக்கிரதையா வெச்சிக்கங்க. ●

**ஊ**றுகாயைக் கிண்ணத்தில் வைத்துக் கொண்டு நக்கிச் சாப்பிடப் பிடிக்கும். கதை – கட்டுரைகள் எழுதுவேன். என் உடலழகு என் சாதனை அல்ல. மாடலிங் ஒரு போதையூட்டும் துறை. நாடகத் துறையில் பட்டம் பெற படித்துக் கொண்டிருக்கிறேன். என் தாத்தாதான் என் சிறந்த நண்பர்...

– ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத இந்த வாக்கியங்களை எப்போதோ படித்தாற்போலிருக்கிறதா?

25.2.96 கல்கியின் அட்டைப் படத்தில் 'உலகப் புகழ் மாடலாக ஒரு தமிழ்ப் பெண்' என்கிற குறிப்புடன் இடம்பெற்ற பத்மா லட்சுமி வைத்தியநாதன் கூறியவை இவை.

நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது மீண்டும் தலைப்புச் செய்திகளில் இடம்பிடித்திருக்கிறார், பத்மா. சாத்தான் புகழ் சல்மான் ருஷ்டியின் சமீபத்திய காதலி!

சென்னையில் பிறந்து வளர்ந்த பத்மாவுக்கு நியூயார்க்கிலும் இத்தாலியிலும் இரண்டு அபார்ட்மென்ட்கள் உண்டு. அண்ணாமலை சைக்கிளாக உலகம் முழுதும் பறந்து மாடலிங் துறையில் நம்பர் ஒன்னாக இன்று விளங்கும் பத்மாவை 'எதிர்கால சோபியா லாரன்' என்று வருணிக்கிறது ஹாலிவுட். விரைவில் சினிமாவிலும் கால் பதிக்கப் போகிறார்.

ருஷ்டிக்கு முன்னதாக பத்மா இரண்டு பேரைக் காதலித்திருக்கிறார். இரு காதல்களுமே தோல்வியில் முடிந்ததுதான் சோகம். இப்போது ருஷ்டி. இது எப்படி?

சென்ற ஆண்டு லண்டனில் நடந்த ஒரு விழாவில் சிறப்பு அழைப்பாளராகக் கலந்து கொண்டார் பத்மா லட்சுமி.

விழா, ஒரு வார இதழின் ஆண்டு விழா என்பதால் நகரின் பிரசித்தி பெற்ற எழுத்தாளரான சல்மான் ருஷ்டியும் வந்திருந்தார். அண்ணலும் அவளும் அங்கே நோக்கியதால், மரியன் விகின்ஸ் வாழ்வில் பிடித்தது அஷ்டமத்துச் சனி!

மரியன்?

சல்மான் ருஷ்டியின் மூன்றாவது மனைவி. இந்த ஜோடிக்கு ஒரு 'வளர்ந்த மகனும்' உண்டு.

ருஷ்டி, தம் படைப்புகளைப் போலவே காதல் வாழ்விலும் சர்ச்சைகள் மிக்கவர். அடுத்தடுத்துக் காதல், திருமணம், குழந்தை, விவாகரத்து என தீராத விளையாட்டுப் பிள்ளையாக இன்று வரை இருக்கும் ருஷ்டி, மரியனுக்குப் பிறகும் எலிசபெத் வெஸ்ட் என்கிற பிரிட்டன் பெண்ணுடன் வாழ்ந்து வந்தார். அவருக்கு 'பிரியாவிடை' கொடுத்து விட்டுத்தான் இப்போது பத்மாவைக் காதலிக்கிறார்.

கொமேனியின் மரண தண்டனை அச்சுறுத்தலுக்கு இன்னமும் ஒரு முடிவு தெரியாத நிலையிலும் நியூயார்க் முழுவதும் பத்மாவுடன் இப்போது கரம் கோத்து, விழா, விழாவாக உலா சென்று கொண்டிருக்கிறார் ருஷ்டி.

பத்மாலட்சுமியை அவர் மணந்தால் நியூயார்க்கிலேயே தங்க வேண்டியிருக்கும். பிரிட்டனில் அடைக்கலம் புகுந்து தலைமறைவு வாழ்க்கை வாழும் ருஷ்டி, நியூயார்க்குக்கு இடம்பெயர்ந்தால், பிரிட்டனுக்கு வருடத்துக்கு 66 கோடி மிச்சமாகும்!

எப்படி?

சல்மான் ருஷ்டியின் பாதுகாப்புக்காக பிரிட்டன் செலவிடும் தொகை இது!

"அச்சுறுத்தலுடனே வாழ்ந்து பழகி விட்டது. அது ஒருபுறம் கிடக்கட்டும். எனக்கு பத்மாவுடன் இருப்பதும் அவரது நட்பும் ரொம்பப் பிடிக்கிறது. கூடிய சீக்கிரம் நியூயார்க்கில் வீடு பார்த்து விடுவேன்" என்கிறார் ருஷ்டி.

நியூயார்க் டைம்ஸ் தொடங்கி அத்தனை அமெரிக்கப் பத்திரிகைகளிலும் இன்று இதுதான் ஹாட் நியூஸ்.

ஐம்பது வயதைத் தாண்டிய ருஷ்டியின் வாழ்வில் நுழையும் ஐந்தாவது பெண் பத்மாலட்சுமி.

தன் மூன்றாவது 'காதலனை'க் கண்டடைந்த பத்மாவின் வயது 29.

**— ஔரங்கசீப்**



# அபிராமி டிராவல்ஸ்ஸின்

**க**லியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் உலகெங்கும் உள்ள பக்தர்களின் உள்ளங்களில் வாசம் செய்யும் வெங்கடேச பெருமாள் திருப்பதி திருமலையில் வீற்றிருக்கிறார்.

சாஸ்திரங்களும் புராணங்களும் சந்தேகமின்றிச் சொல்லும் 108 புண்ணிய தீர்த்தங்கள் இந்த புண்ணிய க்ஷேத்திரத்தில் உள்ளன. மக்களைப் பாவத்திலிருந்து விடுவித்து பரவசமான வாழ்க்கையை பக்தர்களுக்கு இத்திருத்தலம் அளிப்பதாக ஐதீகம். காலங்காலமாக இங்கு வந்து மன அமைதியையும், மகிழ்ச்சியையும் பெற்றுச் செல்லும் பக்தர்களின் வாழ்விலும் என்றென்றும் நீங்காத செல்வம் நிறையும்.

நான்கு சதுர கிலோமீட்டர் பரப்பளவில் வருடம் முழுவதும் ரம்யமான ஒரே சீதோஷ்ண நிலை நிலவும் இந்த வைணவ திருத்தலத்திற்கு வையகமெங்கிலுமிருந்து வந்து குவியும் பக்தர் கூட்டமே இதற்குச் சான்று.

இந்த இன்டர்நெட் யுகத்தில் அறிவியல் புரட்சி மனிதனுக்கு அளித்திருக்கும் வசதி ஏராளம். இன்றைய பரபரப்பான வாழ்க்கை சூழலில் பல புதிய பிரச்னைகள் முளைத்திருப்பது மறுக்க முடியாத உண்மை. அமைதியில்லா மனம் ஆன்மிகத்தில் தான் சரண் அடைகிறது. அறிவியல் வளர வளர ஆன்மிக ஈடுபாடும் வளர்ந்து வருகிறது. இந்த எழுச்சியை இன்றைய இளைஞர்களிடையே காண முடிகிறது. திருப்பதி போன்ற க்ஷேத்திரங்களுக்குச் செல்ல நாளுக்கு நாள் எங்களை அணுகும் பக்தர்கள் கூட்டம் அதிகரித்து வருகிறது என்கிறார் சென்னை பெசன்ட் நகர், அபிராமி டிராவல்ஸின் உரிமையாளர் **திரு. ரமேஷ்** அவர்கள்.



இவர் நம்மிடம் உரையாடும் போது தொடர்ந்து வந்த தொலைபேசி அழைப்புகளுக்குக்கிடையேயும் கனிவாக பதிலளித்தபடியே தம் நிறுவனத்தின் **திருப்பதி பேக்கேஜ் டூர்** பற்றி விவரித்தார். "இன்றைக்கு சென்னை வாசிகளிடம் மிகுந்த வரவேற்பைப் பெற்று வருகிறது எங்களின் டூர் திட்டம். ரூ. **350** கட்டினால் போதும் உங்கள் இல்லத்திற்கே பயணச் சீட்டு வந்தடைவதில் தொடங்குகிறது எங்களது சேவை. தினசரி காலை 5 மணிக்குப் புறப்பட்டு பயணிகளின் இல்லத்திற்கு அருகிலேயே உள்ள முக்கிய சந்திப்பிலிருந்து அழைத்துச் செல்கிறோம். அலுப்பில்லாத பயணம் தரும் நவீன சொகுசு பேருந்து வசதியுடன் உயர் தர சைவ உணவகத்தில் காலை, மதிய உணவு அளிக்கப்படுகிறது.

திருச்சானூர் சென்றடைந்தவுடன்

முன் கூட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் திருமலை பேருந்தில் உடனடி பயணம். திருமலை சென்றடைந்தவுடன் எங்களுடைய கைடுகள் எந்த மொழியினராக இருந்தாலும் அவர்களுடைய ஐயங்களை நீக்கி சிறப்பு தரிசனக் கட்டணத்தில் தாமதமில்லா தரிசனத்திற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்து தரிசனம் முடியும் வரை காத்திருந்து அழைத்து வரும் கனிவான சேவை எங்களது சிறப்பம்சமாகும். திருச்சானூர் அழைத்து வந்து அலுமேலு மங்கையை தரிசனம் செய்து வைக்கிறோம். **திருச்சானூர் தரிசனம் பெறாத திருப்பதி பயணம் முழுமையடையாது.** இது பலபேருக்குத் தெரிவதில்லை" என ஆதங்கப்படும். **ரமேஷ்,**

# ஆன்மீக உலா!

''சஞ்சலத்தில் இருக்கும் மனத்திற்கு திருப்பதி பயணம் மாமருந்து. எமது சேவையில் அது திருப்தியான பயணமாக அமைவது உறுதி'' என்கிறார். இரவு எந்த நேரமானாலும் அழைத்துச் சென்ற இடத்திலேயே திரும்ப இறக்கி விடுகிறோம்.

இது தவிர சுற்றுலா செல்ல 35, 40, 50, 55, இருக்கைகள் கொண்ட குளிர்சாதன வசதி, சாதாரண சொகுசு பேருந்துகள், இந்தியாவில் எங்கு வேண்டுமானாலும் செல்ல கார், வேன், பஸ், சுமோ, Air bus A/c. non A/c மற்றும் உலகில் எந்த பகுதிக்கும விமான பயணச் சீட்டுகள், பாஸ்போர்ட் போன்ற ஏற்பாடுகள் செய்து தரப்படும்.

தமிழகத்தின் பல்வேறு இடங்களுக்கும், கர்நாடகா, ஆந்திரா, கேரளா, பாண்டி உள்ளிட்ட பல மாநிலங்களுக்கும் பயண சீட்டுகள் ஏற்பாடு என இவர்களின் சேவை தொடர்கிறது.

வெளியூர் செல்ல ஆம்னி பஸ்களுக்கு தி.நகர், எழும்பூர், போன்ற குறிப்பிட்ட



இடங்களிலேயே பயணச் சீட்டுகள் கிடைக்கும் என்ற நிலையை மாற்றி தென் சென்னை வாசிகளுக்கு வரப்பிரசாதமாக பெசண்ட் நகரிலேயே இந்த வசதியை அறிமுகப்படுத்தியுள்ளோம். எமது ஏற்பாட்டைப் பாதுகாப்பானதாக உணர்ந்து வெளியூர் பயணங்களுக்கு குழந்தைகளை பெற்றோர்கள் துணையின்றி அனுப்பி வைப்பதையும் பெருமையாக குறிப்பிடும் **'அபிராமி டிராவல்ஸின்'** வாடிக்கையாளர் பலரின் விருப்பத்திற்கிணங்க மேலும் பல வழித் தடங்களில் ஆம்னி பேருந்துகளை இயக்க உள்ளதாகவும் **திரு. ரமேஷ்** தெரிவிக்கிறார்.

இத்தகைய சிறந்த சேவையைப் பெற விரும்பும் பயணிகள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:



**திரு. ரமேஷ்,**
**அபிராமி டிராவல்ஸ்**
**No. 13-A TNHB வளாகம்**
**பெசன்ட் நகர், சென்னை – 90.**
**போன்: 4910209 / 4901188**
**(பெசன்ட் நகர் பிள்ளையார் கோவில் எதிரில்)**



# 8

"**கா**த்தாடியை மல் விடுடா" என்று தெருவில் சிறுவர்கள் கத்துவது கேட்டது.

தன் கேள்விக்கு பதில் சொல்ல பிரசாத் சற்று அவகாசம் எடுத்துக் கொண்டதை, அவன் பதில் சொல்லத் தயங்குவதாகத் தவறாகப் புரிந்து கொண்ட சுவாதி, பேச்சை மாற்றும் முயற்சியாய், "அம்மா வரைந்த படம் போலிருக்கே" என்றாள்.

ஆமாம் என்பது போல் தலையசைத்த பிரசாத், "வெளியிலே பசங்க காத்தாடி விடும் ஆரவாரம் கேட்குதா உங்களுக்கு?" என்றான்.

இப்போது ஆமாம் என்று தலையசைப்பது அவளது முறையானது.

"அந்தக் காத்தாடி போலத்தான் நான் இலக்கில்லாமல் இருந்தேன். கல்லூரிப் படிப்பு முடிந்ததும் ஜமா சேத்துக்கிட்டு தினமும் பீச், மியூசியம், ஆர்ட்ஸ் காலேஜு"ன்னு திரிவேன். வழியிலே எங்காவது குட்டிச் சுவரைப் பார்த்தால் உட்கார்ந்து கொண்டு மணிக்கணக்கில் அரட்டையடிப்போம். இப்போது நினைத்தால் அர்த்தமில்லாமல் படுகிற - ஆனால் அப்போது மிகவும் அர்த்தமுள்ளதாகப் பட்ட - பல விஷயங்களை அலசுவோம். அப்பா அம்மாவின்



உபதேசமெல்லாம் பிடிக்காமல் போனது. அதே சமயம் வேலை தேடாமலுமில்லை. நிறைய விளம்பரங்களைப் பார்த்து விண்ணப்பங்களை அனுப்பினாலும் வேலை கிடைக்கவில்லை. அப்போதுதான் கோமளா ஆன்ட்டியின் பக்கத்துப் போர்ஷனுக்கு உங்க அம்மா குடி வந்தாங்க. அம்மா அவங்க கிட்டே குறைப்பட்டுக்கிட்டாங்களோ அல்லது அவங்களே என் நடவடிக்கையை கவனிச்சாங்களோ தெரியாது. அறிமுகத்தைத் தவிர வேறெந்தவிதத்திலும் பழக்கமில்லாத எனக்கு இந்த ஓவியத்தைப் பரிசளிச்சாங்க."

அவன் மேலும் எதையோ சொல்வதற்கு முன் கொஞ்சம் தயங்குவது தெரிந்தது. சுவாதி அவன் பேச்சை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தாள். அம்மாவின் உருவம் புகைமூட்டத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவடைவது போலிருந்தது.

"எனக்குப் பாக்கெட் மணி கொடுப்பதை அப்பா நிறுத்திட்டதாலே அவர் மேல எனக்கு நிறையக் கோபம். அவரைப் பழிதீர்ப்பதாக நினைச்சுக்கிட்டு, அடுத்த நாள் என் தோழர்களோடு சேர்ந்து நானும் முதல் முறையாக போதை மருந்தை உட்கொள்ளத் தீர்மானித்திருந்த சமயம் அது. அப்போதான் உங்க அம்மா இந்தப் படத்தைக் கொடுத்தாங்க. கொடுத்துட்டு, "இந்தப் படகிலே இருக்கிறவங்க ஒரு சுமாரான வேகத்தில் துடுப்பைப் போட்டாங்கன்னா ஒருநாள் கழித்து எவ்வளவு தூரம் போயிருப்பாங்க? ஒரு கணக்குப் போட்டு நாளைக்குக் காலையிலே சொல்லு"ன்னாங்க. அவங்க சொன்னதன் அர்த்தம் எனக்கு விளங்கல்லே. இருந்தாலும் அந்தப் படத்தை ரொம்ப நேரம் பார்த்துக்கிட்டே இருந்தேன்."

தொண்டையில் கரகரப்பு ஏற்பட அருகிலிருந்த ஜக்கிலிருந்து ஒரு தம்ளர் நீரை அவன் குடிக்க, ஓவியத்தை தீர்க்கமாக ஆராய்ந்தாள் சுவாதி. அம்மாவின் கேள்வி அர்த்தமில்லாததாகத் தோன்றியது அவளுக்கு. முதல் ஐந்து நிமிடங்களுக்குத்தான் இந்த நிலை. பிறகு ஓவியத்தில் காணப்பட்ட அந்த விஷயம் அவள் மனத்தில் சுருக்கென்று தைத்தது.

அவள் முகம் மலர்ந்ததைப் பார்த்தே அவள் விடையை அறிந்து கொண்டதை பிரசாத் யூகித்து விட்டான். "பரவாயில்லையே. அரை மணி நேரம் கழித்துதான் எனக்கு விளங்கியது. உங்களுக்குக் கற்பூர புத்தி"

மீண்டும் ஓவியத்தைப் பார்த்தான் சுவாதி. அந்தப் படகு ஒரு கனத்த கயிறால் கட்டப்பட்டிருந்தது. இந்த நிலையில் படகை

அருண் சரண்யா

என்ன வேகத்தில் ஓட்டினாலும் அது அந்த மரத்தைச் சுற்றிச் சுற்றித்தான் வருமே தவிர, எந்த தூரத்தையும் உருப்படியாகக் கடந்து விட முடியாதே!

" 'உங்க புதிருக்கு விடை கண்டுபிடிச்சுட்டேன்'னு உங்க அம்மாவிடம் சொன்னேன். அவங்க சிரிச்சுக்கிட்டே "லட்சியமில்லாத முயற்சிகளும் இப்படித்தான்"னாங்க நறுக்குன்னு. வருங்காலத்தைப் பற்றிய தெளிவான

குறிக்கோள் எதுவுமில்லாமல் இருந்த நான் யோசிக்க ஆரம்பித்தேன். வெளியிலே சுற்று வதைக் குறைச்சுக்கிட்டேன். வங்கிகளில் சேர எந்தெந்தத் தகுதிகளை வளர்த்துக் கொள்வது நல்லதோ அதையெல்லாம் வளர்த்துக்கிட்டேன். வங்கி நுழைவுத் தேர்வுகளில் எந்த மாதிரி கேள்விகளைக் கேட்பார்கள் என்பது பற்றியெல்லாம் உங்கம்மா எனக்கு விளக்கினாங்க. அதற்கேற்ப புத்தகங்களை ரெஃபர் செய்து படித்தேன். இதையெல்லாம் மறக்கக்கூடாதுன்னு இந்த ஓவியம் என்னை தினம் தினம் ஞாபகப்படுத்தியது.

"ஒரு கயிற்றின் மூலம் வாழ்க்கைத் தத்துவத்தை எனக்கு விளங்க வச்சுட்டாங்க உங்கம்மா. இலக்கில்லாமல் தேர் போலத் திரிஞ்சுக்கிட்டிருந்த என்னைத் தனியொரு ஆளாக வடம் பிடிச்சு வழிக்குக் கொண்டு வந்தாங்க."




"வடக்கயிறா? அல்லது மதயானையை அடக்கிய அங்குசமா?" கேட்டு விட்டுத்தானா இப்படிப் பேசினோம் என்று திகைத்துப் போனாள் சுவாதி. ஏதோ 'பாதுகாப்பான' கூண்டு ஒன்றிலிருந்து வெளியே வந்து கொண்டிருக்கிறோமா?

"சரி நாங்க கிளம்பறோம்" என்றபடி, 'என்னது படகுப் படம்தானா? நிஜ போட் இல்லையா?" என்று கேட்ட முன்னாவையும் இழுத்துக் கொண்டு வெளியேறினாள்.

ஓவியம் தவிர பிரசாத் கூறியதில் இன்னொரு விஷயமும் அவள் மனத்தில் தைத்திருந்தது. கோமளா ஆன்ட்டியோடு அம்மா தங்கியிருக்கவில்லையா? அவள் தங்கியது பக்கத்துப் போர்ஷனில்தானா? இப்போது அங்கே வேறொரு குடும்பம் தங்கியிருக்கிறது போலிருக்கிறதே!

அன்று மாலை முகமெல்லாம் மகிழ்ச்சியோடு கோமளா வீடு திரும்பினாள். "பூச்செண்டின் மேலே ராகவேந்திரரின் படத்தை ஒட்டிக் கொடுத்ததில் அந்த சுந்தராம்பாளுக்கு ரொம்ப சந்தோஷம். போனிலே பாராட்டு மழை" என்றவள் காப்பி கலக்கத் தொடங்கினாள்.

"ஆன்ட்டி, அம்மா ஏதோ பக்கத்துப் போர்ஷனிலே தங்கியதா பிரசாத் சொன்னார். இப்போ அங்கே யாரோ குடிவந்திருக்காங்க போலிருக்கே."

"மண்டு. பக்கத்துப் போர்ஷன்னா வலது பக்கப் போர்ஷனாகத்தான் இருக்கணும்னு கட்டாயமா என்ன?" என்றவள், சுவாதியை வெளிப்புறமாக அழைத்துச் சென்று இடது புறத்தில் இருந்த போர்ஷனைக் காட்டினாள். உள்ளடங்கி இருந்ததாலும், வாசலை ஓரளவு செடி கொடிகள் மறைத்ததாலும், அந்தப் போர்ஷன் சுவாதியின் கண்களுக்குத் தப்பியிருந்தது.

"சாவியை அம்மா கையோடு எடுத்துக்கிட்டுப் போயிட்டாங்களா?"

"இல்லையே. என்கிட்டேதான் இருக்கு. ஏன் பார்க்கணுமா? இந்தாயேன்" என்றபடி இரு சாவிகள் கொண்ட ஒரு கொத்தை நீட்டினாள் கோமளா.

உள்ளே நுழைந்தபோதே ஓர் ஆனந்த அதிர்வு உண்டானது. 'என் தாய் வாழும் இடம் இது'.

மிகக் குறைந்த சாமான்கள். பீரோ ஒன்று பூட்டியிருந்தது. சாவிக் கொத்தில் இருந்த இரு சாவிகளில் ஒன்று அதனுடையதாக இருக்க வேண்டும்!

துணி உலர்த்துவதற்காக பால்கனிப் பக்கம் ஒரு கயிறு கட்டப்பட்டிருந்தது. கயிறு! பிரசாத்தின் வீட்டிலிருந்த படகு ஓவியத்தில் காணப்பட்ட கயிறு!

திடீரென்று தனது லட்சியம் என்ன வென்று யோசிக்கத் தொடங்கினாள். முதலில் புரிபடவில்லை. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக சிறு வயதிலிருந்தே அவள் மனத்தில் மறைந்து மறைந்து கண்ணாமூச்சி காட்டிய ஆசை உருவம் பெற்று வளர்ந்தது.

பறக்க முடிந்தால்...? எப்படிப் பறக்க? இறக்கைகளைக் கட்டிக் கொண்டா? அதுவும் அடிக்கடிப் பறக்க வேண்டுமென்றால் என்ன செய்யலாம்? விமானப் பணிப்பெண்ணாகி விட்டால்?

சுவாதி யோசிக்கத் தொடங்கினாள்

(தொடர்ந்து பறக்கும்)

உ
சிவமயம்



குடவாசல் வட்டம் கருவேலியில் எழுந்தருளி இருக்கும்

# ஸ்ரீ சர்வாங்க நாயகி ஸமேத ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி ஆலயத்தில்

## 23.3.2000 வியாழக் கிழமை அன்று 3-ம் வருட

# சம்வத்ஸராபிஷேகம்

அப்பர் சுவாமிகளால் பாடல் பெற்ற க்ஷேத்திரமான **கருவேலியில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு ஸ்ரீசற்குணேஸ்வர ஸ்வாமி ஆலயத்தின் 3-ம் வருட சம்வத்ஸராபிஷேகம்** நிகழும் பிரமாதி வருஷம் பங்குனி மாதம் 10-ம் தேதி 23.3.2000 வியாழக் கிழமை கீழ்க்கண்ட நிகழ்ச்சி யின்படி அதிவிமரிசையாக நடக்கிறது. அன்று மாலை 5 மணிக்கு அப்பர் சுவாமிகள் அருளிச் செய்த பதிகங்களை (கல்வெட்டு) திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதின கர்த்தர் **ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாச்சார்ய சுவாமிகள்** திருக் கரங்களால் திறந்து வைக்கிறார்கள். ஆஸ்திக மெய்யன்பர்கள் மேற்படி விழாக்களில் கலந்து கொண்டு சிவனருளைப் பெற்றுய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

**பிரமாதி வருஷம் பங்குனி மாதம் 10ம் (23.3.2000) வியாழக் கிழமை**

காலை 8 மணிக்கு ஹோமங்கள் ஆரம்பம்
" 10:30 மணி அளவில் பூரணாஹுதி தீபாராதனை
" 11:00 மணி அளவில் அபிஷேக ஆராதனைகள்
மாலை 5 மணிக்கு அப்பர் சுவாமிகள் அருளிச் செய்த பதிகங்கள் (கல்வெட்டு) திறப்பு விழா.
மாலை 6 மணி அளவில் புஷ்ப அலங்காரம்—தீபாராதனை

சர்வசாதகம் : ஆகமப்ரவீணர் அலங்கார திலகம் சர்வசாதக சிரோமணி சிவஸ்ரீ ப. இராமநாத சிவாச்சாரியார், கும்பகோணம்.
அர்ச்சகர் : ஸ்ரீ.வ.நாகராஜ குருக்கள், கருவேலி.

ஸ்ரீ சற்குணேஸ்வர ஸ்வாமி
கோயில் நிர்வாகக் குழு,
6A வாரன் ரோடு, மயிலை,
சென்னை – 600 004.

இப்படிக்கு,
Dr. V. கிருஷ்ணமூர்த்தி, *பரம்பரை தர்மகர்த்தா*
*மற்றும் ஸ்வாமி சச்சித் ஆனந்தன்*
*நிர்வாகிகள், கிராமவாசிகள்.*

உலக நலனுக்காக 22.3.2000 புதன் கிழமை ஸ்ரீருத்ர ஹோமம் காலை 7 மணிக்கு தொடங்கி மாலை 3 மணி அளவில் பூர்த்தியாகிறது. மெய்யன்பர்கள் கலந்து கொண்டு ஸ்ரீ சற்குணேஸ்வரர் அருளைப் பெற அன்புடன் அழைக்கிறோம்.



பெண்களின் பர்ஸுக்குள் ஒரு மினி ஷாப்பிங் காம்ப்ளக்ஸே இருக்கும் (என்பார்கள்!). பிரத்யேகமான பொருட்கள் என்று அப்படி ஆண்களுக்கு ஏதாவது உண்டா என அறிய சில இளவட்டங்களை அணுகி, 'Men பொருள்' பட்டியல் கேட்டோம்.

மாபெரும் அதிர்ச்சி! ஒவ்வொருத்தருக்குள்ளும் ஒரு பி. வாக இருக்கிறார்!

பிரபு :

எங்கிட்ட பல கெட்ட பழக்கங்கள் இருந்தது. எல்லாத்துக்கும் குட்பை சொல்லிட்டேன். அம்மா, அப்பா சொல்றப்போ கேக்காத நான், சுஜி சொன்னப்போ கேட்டேன். சுஜி என்னோட உயிர். ஆனா சிகரெட்டை மட்டும் என்னால விட முடியலை. பலமுறை சொல்லிப் பார்த்தா... பளார்ன்னு ஒரு முறை அடிச்சுட்டா... அப்பக் கூட நான் அசையலை. ஒருமுறை வழக்கமா நாங்க சந்திக்கிற பார்க்குல அவளுக்காக வெயிட் பண்ணிகிட்டிருந்தேன். சுஜி வந்தவுடனே எதுவும் பேசாம மௌனமா உட்கார்ந்துட்டா. நான் டென்ஷனாகி சிகரெட் எடுத்து பத்த வெச்சேன். ஒரு இழுப்பு தான் இழுத்திருப்பேன். "என்னை விட நீங்க அதிகமா நேசிக்கிற சிகரெட்ல அப்படி என்னதான் இருக்கு"ன்னு சொல்லிட்டு, என் வாயில புகைஞ்சுகிட்டு இருந்த சிகரெட்டை திடீர்ன்னு பிடுங்கி, பக்கு பக்குன்னு, ரெண்டு மூணு இழுப்பு இழுத்துட்டா! ஒரே இருமல்... மூச்சுத் திணறல், சுஜி கண்ணுலேர்ந்து தாரை தாரை கண்ணீர்.... நான் பதறிப் போயிட்டேன். சுதாரிச்சுகிட்டு, அவ கையில் இருந்த சிகரெட்டைப் பிடுங்கி அணைச்சேன். அந்த நேரமே சத்தியம் செஞ்சேன். எந்த சூழ்நிலையிலேயும் இனிமே சிகரெட் கிடையாதுன்னு... பார்க்க விட்டு வரும்போது... சுஜி இழுத்து கஷ்டப்பட்ட அந்த சிகரெட்டை எடுத்துட்டு வந்துட்டேன். அவ ஞாபகமா வெச்சுருக்கிற பல பொருட்கள்ல முக்கியமானது அது!

செல்வநாராயணன் :

இதுவரைக்கும் நான் ஒரு பாக்குக் கூடப் போட்டதில்லே. ஏன்னா என்னோட உயிரைத்தான் நான் முக்கியமான விஷயமா நினைக்கிறேன். அது எந்தவிதத்துலேயும் களங்கப்பட்டுடக் கூடாதுங்கிறதுலே ரொம்பக் கவனமா இருக்கேன். காரணம் இருக்கு! எங்கம்மா உண்டாகியிருந்தப்ப, பல கோளாறுகள்! சில மாத்திரைக் குளறுபடிகள் ஆயிடுச்சாம். ஏதாவது ஊனமுடன் பிறந்துடுவேனோன்னு என் அம்மா கோயில் குளமா ஏறி இறங்கியிருக்காங்க. கடவுள் புண்ணியத்துல நான் நல்லபடியா பொறந்து இப்போ பேட்டி கொடுத்துக்கிட்டு இருக்கேன்! நான் பத்தாவது படிக்கும்போது அம்மா இந்த விவரத்தைச் சொன்னாங்க. அதை எப்போ நினைச்சாலும் சிலிர்ப்பா இருக்கும்!

குரு :

சினிமால பெரிய நடிகனா வரணும்னு கேட்டரிங் படிப்பைப் பாதியிலேயே உதறிட்டு சென்னைக்கு வந்தேன். இங்கே வந்து சினிமா உலகத்தைப் பக்கத்துல பார்த்ததும்தான் தெரிஞ்சுது. அதோட அரிதார மூஞ்சி. லட்சியமன்னு சொல்லிட்டு வந்துட்டதால, வீட்டில காக



# MEN'பொருள் நீமணா!

என்னை மாதிரியே நாலு வயசு குழந்தையோட பிளாக் அண்ட் ஒயிட் போட்டோ அது. அந்த போட்டோவைப் பாத்து நான் பாப்பான்னு சொல் லுவேன். அவங்க சிரிச்சு என்னை அணைச்சுக்கு வாங்க. நான் சாப்பிடாம அடம் புடிக்கும்போ தெல்லாம், பாப்பா போட்டோவை காட்டித் தான் என்னை சமா தானப் படுத்துவாங்க. பாப்பா போட்டோ எனக்கு காலப்போக்குல மறந்து போச்சு. நான் காலேஜ் முடிச்சு ரிசல்ட் வந்தப்போ வீட்ல எல் லார்கிட்டயும் ஒரே பாராட்டு! அப்பா முதன் முதல்ல ஜீன்ஸ் எடுத்துக் கொடுத்தார். லீவு முடிஞ்சு டி.சி. மார்க்ஷீட் வாங் கிட்டு நான் எம்.ஏ. சேர சென்னை புறப்பட்டேன். அப்போ அம்மா ஒரு பாலிதீன் கவரை எடுத் துட்டு வந்து எங் கிட்ட குடுத் தாங்க. திறந்து பார்த்தேன். அதுல அதே பாப்பா போட்டோ! பல வருஷத்துக்கு அப்புறம் பாக்குறேன். அந்த போட்டோல அம் மாவோட சாயல் தெரியுது. கேள்விக்குறியோட அம்மா முகத்தைப் பார்த்தேன். எதுவுமே கேக் கலை!" ஆமாப்பா நான்தான் குழந்தையா இருக் கேன், பத்திரமா வெச்சுக்கோ. கடைசி வரைக் கும் குழந்தை மனசோட இருக்கணும்"ன்னு சொன்னாங்க! என்னோட சூட்கேஸைத் திறந்தா அம்மா குழந்தையா இருக்கிற போட் டோதான்! ஒரு வளர்ந்த பையன், தன்னோட அம்மாவைக் குழந்தையா பார்க்கிற பாக்கியம் எனக்கு கிடைச்சிருக்கு! அந்த போட்டோதான் என் சொத்து.

வாங்க முடியலே! ரொம்பக் கஷ்டம். கூத்துப்பட்டறை, பாதைவாசி கள்ன்னு நவீன நாடகக் குழுக்கள்ல நடிச்சுக்கிட்டு இருந்தேன். நிறைய மௌன நாடக வாய்ப்பும் கிடைக்கும்! போன வருஷம் காமராஜர் அரங்கத்துல கமல்ஹாசன் பிறந்த நாள் விழா நடந்தது. எங்களோட மௌன நாடகக் குழுவையும் கூப்பிட்டிருந் தாங்க. 50 வருஷ இந்தியாவை அஞ்சு நிமி ஷத்துல மௌன நாடகமா செய்து காட்டி னோம். கமல் ரொம்பப் பாராட்டினார். அவர் கையாலேயே எங்க குழுவில் இருந்த ஒவ்வொ ருத்தருக்கும் கேடயம் வழங்கினார். அத்தனை கஷ்டங்களுக்கு இடையில அது பெரிய அவார்ட் மாதிரியிருந்தது. நான் ரொம்பவும் பாதுகாக்குற பொருள் அதுதான்!

**விஜயகுமார் :**

எனக்கு அப்போ நாலு வயசு. என்னோட அம்மா எனக்கு அடிக்கடி ஒரு குழந்தைப் படத்தைக் காட்டி இது யாருன்னு கேட்பாங்க.

**அசோக் :**

எனக்கு நாட்டுப்புற நடனத்துல



''மானேஜர் சார்! நம்ப ஆபீசல ஒரு லைப்ரரி வைக்கணும்னு எல்லோரும் விரும்பறாங்க!''

''எதுக்குய்யா?''

''நிறைய பேருக்கு ஏதாவது ஒரு கதைப் புத்தகம் படிச்சாத்தான் தூக்கம் வருமாம்.''

— மதுரை என். உஷா தேவி

---

ரொம்ப ஆர்வம். ஜாதி கட்டுப்பாட்டையும் மீறி ஒரு கலைஞர்கிட்ட கத்துக்கிட்டேன். அது காலேஜ் கல்சரல் போட்டிகள்ல என்னை ரொம்ப பாப்புலர் ஆக்கிடுச்சு. ஹிமாச்சல் பிரதேஷ் – குலுமணாலியில பல் கலைக்கழகங்களுக்கு இடையில போட்டி நடந்துச்சு. பாரதிதாசன் யூனிவர்சிட்டி சார்பா பத்து பேர் போயிருந்தோம். என்னோட கரகாட்டக் குழுவுக்கு நான்தான் கேப்டன். பத்து நாள் காம்ப்படிஷன். போன இரண்டு நாள்லயே எங்க குழு ரொம்ப பாப்புலர் ஆயி ஃபைனலுக்கு தயார் ஆயிடுச்சி! இதே போட்டிக்கு மணிப்புரி டான்ஸ் ஆட மணிப்பூர் மாணவர்கள் வந்திருந்தாங்க. அதுல மாயான்னு ஒரு பொண்ணு. நம்ம கரகாட்டம் அவளுக்கு ரொம்பப் புடிச்சு போச்சு! எனக்கு தமிழ்தான் தெரியும்; அவளுக்கு இங்கிலீஷ், ஹிந்தி ரெண்டும் தெரியும். தானா வந்து என்கிட்ட அறிமுகப்படுத்திக்கிட்டு, கரகாட்டம் கத்துத் தர முடியுமான்னு கேட்டா...

லாங்குவேஜ் பிரச்னை இருந்தாலும்... அந்த பத்தே நாள்ல கரகாட்டம் நாங்களே கத்துக்கிட்டு அசந்து போற மாதிரி ஆடிக் காட்டினா... என்னை மாஸ்டர் மாஸ்டர்னு வேற கூப்பிட ஆரம்பிச்சுட்டா. கடைசி நாள். 'பெஸ்டிவல் ஃபயர்' பங்ஷன் நடந்துக்கிட்டு இருந்துச்சு. ஏதோ ஒரு இனம் புரியாத காதல் அந்த பொண்ணு மேல. சொல்லிடலாமான்னு முடிவு செஞ்சேன். அப்போ உள் மனசுல ஒரு குரல். மணிப்பூருக்கும் தஞ்சாவூருக்கும் ரொம்ப தூரம். அந்தப் பொண்ணு மனசுல வீணா சலனத்தை உண்டாக்கிடாதேன்னு! அன்னைக்கு ரக்ஷா பந்தன். ட்ரூப்ல இருந்த எல்லா நார்த் இண்டியன் பொண்ணுங்களும் எனக்கு ராக்கி கட்டினாங்க. ஆனா மாயா மட்டும் வரலே! எங்கிட்ட இருந்த ராக்கியை எடுத்துக்கிட்டு மாயாகிட்ட போனேன். அவ மணிக்கட்டுல கட்டினேன். ராக்கி கட்டினா, கட்டினவங்களுக்கு, கட்டிகிட்டவங்க இனிப்பு கொடுக்கணும்கிறது முறை. ''எங்கிட்ட கொடுக்க இப்போ இனிப்பு இல்லே''ன்னு சொல்லிட்டு என் கையைப் பிடிச்சு மாயா மென்மையா முத்தம் கொடுத்தா. அந்த முத்தம் இன்னும் பசுமையா என் மனசுக்குள்ள இருக்கு! எனக்கு ரொம்ப பிரச்னை, கவலை வந்தா அந்த முத்தத்தை நினைச்சுக்குவேன்.

காந்தி சரவணன் :

**நா**ன் பேச்சலர்; ஆனா ரொம்ப பாதுகாக்கிற பொருள் ஒரு தாலி! நான் காதலிச்சவ எதிர்கட்சிய சேர்ந்த ஒருத்தரோட பொண்ணுங்கிற ஒரே காரணத்துக்காக வீட்ல அப்பா எதிர்த்தார். அப்பா சொன்னதால அம்மாவும் மறந்துடச் சொன்னாங்க. ஆனா காதல் ரொம்ப ஆழமா போயிடுச்சி. வீட்டுக்குத் தெரியாம கல்யாணம் செய்துகிட்டு அப்பா அம்மா முன்னாடி போயி நிக்கலாம்னு முடிவெடுத்தோம். எங்கிட்ட தாலி வாங்கக் காசு இல்லே. இதுக்கு ஏன் கலங்குறீங்கன்னு கேட்டுட்டு ஒரு தாலிக் கயித்துல மஞ்சளைக் கட்டி, இதான் நமக்கு தங்கத்தாலின்னு முதல் நாளே அவ கொடுத்துட்டா. மறுநாள் கோலம் போட அவ வெளியே வரும்போது நானும் வெளிய வந்து ஊர்க்கோயில்ல கல்யாணம் செய்துகிறதா பிளான். என் ரூம்ல விடிய விடிய விழிச்சுக்கிட்டு இருந்த நான் திடீர்னு அதிகாலையில தூங்கிட்டேன்! விழிச்சுப் பார்த்தா, மணி ஏழு! அலறி அடிச்சு எழுந்து பார்த்தா, அவ வீட்ல ஒரே கூட்டம். என்னமோ ஏதோன்னு தவிச்சுப் போயிட்டேன். அம்மாதான் விஷயத்தைச் சொன்னாங்க... அவளுக்கு அவங்க அப்பா... அவசர அவசரமா சொந்தக்கார மாப்பிள்ளைக்குக் கோயில்ல தாலி கட்டி கூட்டி வந்துட்டாங்க! அப்போ மெட்ராஸ் வந்த ஆளுதான்...

அவ குடுத்த தாலியத்தான் நான் கல்யாணம் செய்துக்கப் போற பொண்ணு கழுத்துல கட்டுவேன்கிறதுல உறுதியா இருக்கேன்!

— ஆர்.சி. ஜெயந்தன்

படம் : வெங்கடேஷ்

## கே. பாலச்சந்தர் வழங்கும்

# ஊஞ்சல்



பைரவியும் விஷ்ணுவும் எதிரெதிர் வீட்டில் வசிப்பவர்கள். இரண்டு குடும்பங்களும் நல்ல நட்பு. விதவைத் தாயுடன் வசிக்கும் விஷ்ணு ஏர் இந்தியாவின் உயர் அதிகாரி. பைரவியோ மத்திய குடும்பத்தைச் சேர்ந்த டைப்பிஸ்டாக பணிபுரிபவள். அவளை விட குறைவாக சம்பாதிக்கும் தந்தையும், 12 வயதில் ஒரு தம்பியும். பைரவி விஷ்ணுவை மனதாரக் காதலிக்கிறாள். ஆனால் விஷ்ணுவோ, பாடகியான பல்லவியை பெற்றோர் சம்மதத்துடன் காதலித்து நிச்சயதார்த்தமும் நடக்கிறது.

பைரவிக்கு அதிர்ச்சி! விஷ்ணுவை எக்காரணத்திற்காகவும் இழக்கத் தயாராயில்லை அவள்! ஒரு முடிவுக்கு வருகிறாள் — உடனே பல்லவியுடன் நெருங்கிப் பழகி அவளுடைய தீவிர நட்புக்கு ஆளாகிறாள்! இப்பொழுது தன்னுடைய திட்டத்தை செயல்படுத்த தொடங்குகிறாள். பல்லவியையும், விஷ்ணுவையும் பிரிப்பதற்கு!

அநாமதேய கடிதங்கள், நம்பக்கூடிய கிசுகிசு, விஷ்ணுவின் பேச்சுக்கள் அடங்கிய குறிப்பிட்ட கேசட் — இது போல எத்தனையோ முயற்சிகள் மூலம் அவள் விஷ்ணுவை பல்லவியிடமிருந்து பிரிக்க பார்க்கிறாள். ஏனென்றால் அவள் எக்காரணத்திற்காகவும் விஷ்ணுவை இழக்கத் தயாராயில்லை!

ஆனால் பைரவியின் ஒவ்வொரு முயற்சியும் முறியடிக்கப்படுகிறது! யாரால்?

அவள் விஷ்ணுவை அடைந்தாளா? அல்லது விஷ்ணு தடைகளைத் தாண்டி பலலவியை மணந்தானா?

விஷ்ணுவை யார் அடைந்தார்கள்?

இந்த இழையில்தான் கதையின் ஓட்டம்! விறுவிறுப்பு!
இது ஒரு இளமையான சங்கீதக் காதல் கதை!
காணத் தவறாதீர்கள்! உங்கள் விஜய் டிவியில்!
கதை, திரைக்கதை & வசனம் : தேவிபாலா
இயக்கம் : சுந்தர் கே. விஜயன்
நடிகர்கள் : எஸ்.பி.பி., சரண், ஷாலினி & ஸ்ரீதுர்கா.




**விஜய் டி.வியில் ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் இரவு 8.30 மணிக்கு**

- ADVT -

## 60

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பூர்வ காலத்திலெல்லாம் நிலத்தை உழுவதற்கு மாடுகள்தான் பயன்பட்டன. இது யந்திர யுகமாகப் போய் விட்டது. புதிது புதிதாக யந்திரங்கள் தினமும் வந்து கொண்டிருக்கின்றன.

ஒரு காலத்தில் எருதைப் பூட்டி நிலத்தை உழுதார்கள். எருதுகளுடைய குளம்பிலே நெய் இருக்கிறது என்று சொல்வார்கள்! அதனால் அந்த எருது உழுத மண்ணில் விளைந்த அன்னத்தில் ரஸம் இருக்கிறது என்பார்கள். அந்த அரிசியைச் சமைத்து சாதத்தைப் பிழிந்தால் நெய் வரும் என்பார்கள்! அப்படி புஷ்டியாய் இருந்தது!

இப்போதைய யந்த்ர உலகத்தை நாம் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் சாஸ்திரம் சொல்கிற விஷயங்களின் அழகை நாம் பார்க்க வேண்டும். அதிலே வேதம் சொல்கிற அழகு இது - எங்கெல்லாம் கோ ஸ்ம்ருதி (பசுக்கள்) இருக்கிறதோ, அங்கெல்லாம் பகவான் விஷ்ணு வாசம் பண்ணுகிறான்.

பசுவைத் திருப்பிப் பார் என்றது சாஸ்திரம். பசு என்று எழுதி அதைத் திருப்பிப் படித்தால் என்ன...? 'சுபம்'!

பதினான்கு லோகங்களும் பசுவினிடத்திலே இருக்கிறது. பசுவின் திருமேனியிலே பரமாத்மா பரிபூரணமாக வாசம் பண்ணுகிறான்.

சரி, பூர்வகாலத்தில் கொம்பே இல்லாமலிருந்த பசுக்களுக்கு எப்படி கொம்பு முளைத்தது?

பசுக்களெல்லாம் என்ன செய்தனவாம்... நமக்கும் கொம்பு இருந்தால் நன்றாக இருக்குமே என்று நினைத்தனவாம் - ஒரு தற்காப்புக்காக, தங்களை ரக்ஷித்துக் கொள்வதற்காகத்தான். அத்தனையும் மஹரிஷிகளிடம் போய், தங்களுக்குக் கொம்பு வேண்டும் என்று கேட்டனவாம். உடனே மஹரிஷிகளெல்லாம் என்ன பண்ணினார்கள் - பசுக்களுக்கெல்லாம் கொம்பு முளைக்க வேண்டும் என்பதற்காக சம்ரக்ஷர தீக்ஷை - ஒரு வருஷ காலம் அஹோ ராத்ரம் பண்ணக்கூடிய யக்ஞம் அது - அதைப் பண்ண ஆரம்பித்தார்கள். பத்து மாத காலம் அதைப் பண்ணினார்கள். சில பசுக்களுக்குக் கொம்பு முளைக்க ஆரம்பித்தது! யக்ஞம் முடிவதற்குள் எல்லா பசுக்களுக்கும் கொம்பு முளைத்து விட்டது.

யக்ஞத்தினாலே பசுக்களெல்லாம் கொம்பை சம்பாதித்துக் கொண்டன - கோணலான வழியினால் சம்பாதித்துக் கொள்ளவில்லை. யக்ஞத்தினாலே சம்பாதித்துக் கொண்டன. உத்தமமான மார்க்கத்தில் சென்று எதையும் சம்பாதித்துக் கொள்வது சிரேஷ்டமானது.

இப்போது ஒரு பசு கன்றை ஈன்றால் அதற்குக் கொம்பு முளைப்பதைப் பார்க்கிறோம். இப்போது உண்டாகிற பசுக்களெல்லாம் யக்ஞம் செய்தனவா என்றால், இல்லை! அவற்றின் பூர்விகர்கள் பண்ணிய பலனை அவை அனுபவித்துக் கொண்டிருக்கின்றன.

அதுபோன்று நம்முடைய பூர்விகர்களான மஹரிஷிகளெல்லாம் யக்ஞம் பண்ணியதாலே அந்தப் பலனை நாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். இவ்வளவாவது நம்மால் சௌக்கியமாக இருந்து கொண்டிருக்க முடிகிறதென்றால் அது அவர்கள் பண்ணிய யக்ஞத்தின் பலன்தான். அதனால் நமக்காக யக்ஞங்களைப் பண்ணிய மஹரிஷிகளை நாம் மறக்கலாகாது. அவ்வளவு சிரமப்பட்டிருக்கிறார்கள் அவர்கள். மந்திரத்தை நேரே பார்த்தவர்கள்.



ஆகையினால்தான் பசுக்களுக்குக் கொம்பு முளைக்கும்படி அவர்கள் அனுக்கிரஹம் பண்ணினால் அது நடந்தது.

அந்த பசுக்களிடத்திலே பகவான் விஷ்ணு வாசம் பண்ணுகிறான். அதை துஷ்டனான ஹிரண்ய கசிபு தெரிந்து கொண்டிருக்கிறான். அதனால்தான் பசுக்களிருக்கும் இடத்திலே போய் அவற்றை அழிக்கும்படி சொல்கிறான்.

பசுவின் சரீரத்திலிருந்து பெறப்படும் ஐந்து திரவியங்களைச் சேர்ந்தது பஞ்ச கவ்யம் தயாரிப்பார்கள். சரீர சுத்திக்காக அதைத் தருவார்கள். சரீரத்தின் மூலமாக நாம் பாபம் பண்ணியிருந்தால், பஞ்சகவ்யத்தினாலே அது தீரும் என்பார்கள். எப்படி அக்னியானது விறகைப் பொசுக்கி விடுகிறதோ அந்த மாதிரி பாபத்தை நீக்க வேண்டும். பஞ்சகவ்ய ப்ராசனத்தினாலே எல்லா தோஷங்களும் நீங்கி

விடுகின்றன.

பசுவினுடைய சம்பந்தம், கோ சம்ரக்ஷணம் ரொம்ப முக்கியம். அதனால்தான் பரமாத்மா ஆயர்பாடியிலே வளர்ந்து அந்தப் பசுக்களின் பின்னாலே சென்று ஆநிரை மேய்த்தான்.

சூரியனை முதலில் பார்க்கக்கூடியவர்கள் யார் என்று வேதம் சொல்கிறது.

சூரியனை முதலில் பார்க்கக்கூடியவர்கள் ஆநிரை மேய்த்து வாழக்கூடிய அந்த இடைக்குலத்தைச் சேர்ந்தவர்கள்தான் – ஆயர்பாடி மக்கள். இவர்கள்தான் சூரியனை முதலில் பார்க்கும் பாக்கியம் பெற்றார்கள்.

அதன் பிறகு, குளித்துவிட்டு ஜலம் கொண்டு வருவதற்காக சுமங்கலி ஸ்த்ரீகள் கையில் குடத்துடன் போகிறார்கள். அவர்கள் சூரியனைப் பார்க்கிறார்கள். அதன் பிறகு உலகமெல்லாம் பார்க்கிறது.

அதனால்தான் கிருஷ்ணாவதாரத்திலே சூரியனை முதலில் பார்க்கக்கூடிய ஜாதியான ஆயர்பாடி மக்களுடன் கூடி கலந்து திகழ்ந்தான் பரமாத்மா. ராமாவதாரத்திலே சூர்ய குலத்திலேயே பிறந்தான். இந்த இரண்டு அவதாரமும் பெரிய தத்துவத்தை நமக்குக் காட்டுகிறது. ஆகையினால் சூரியனைப் பார்ப்பதென்பது மிகவும் விசேஷம். அதனால்தான் இடைக்குலத்திலே சென்று அவன் ஆனந்தத்தை அனுபவித்தான்.

*'உன்தனோடு உற்றோமேயானோம் உமக்கே*
*நாம் ஆட்செய்வோம்*
*மற்றை நம் காமங்கள் மாற்று'* என்று ஆண்டாள் திருப்பாவையிலே அந்த ஆயர்பாடி மக்களுக்கு இருக்கும்படியான ஏற்றத்தைச் சொல்கிறாள்.

சித்திரைத் தேர்உலா என்று சித்திரை மாசத்திலே விசேஷமாக நடக்கும் – ரதோத்ஸவம். ஆயர்பாடி மக்களெல்லாம் வந்து வடம்பிடித்து இழுப்பார்கள். வித்வத் கோஷ்டி – வேத பாராயண கோஷ்டியிலே நின்று கொண்டிருக்கிற பராசர பட்டர் – ரங்கநாதனுக்கு புரோஹிதர் அவர்... அவர் என்ன பண்ணினார்.... ஆயர்குல கோஷ்டியிலே வந்து நின்று கொண்டு தேர் வடத்தை இழுத்தார். அப்போது இன்னொரு வித்வான் வந்து, "இப்படிக் கூட பண்ணலாமா? இவ்வளவு பெரிய வித்வத் கோஷ்டி இருக்கிறபோது இடக்கை வலக்கை கூட அறியாத சாமான்ய மக்களிடம் சென்று நின்று நீர் வடம்பிடிப்பது முறையோ? தகுமோ?" என்று கேட்டார்.

அதற்கு சுவாமி பட்டர் பதில் சொன்னார் : "அந்த ரங்கநாதனுடைய கடாக்ஷத்துக்கு இங்கல்லவோ பள்ளமடை!" என்றார்.

உடனே அவர்கள் எல்லோரும் கேட்டார்கள் : "வேத வித்வான்களையெல்லாம் ரங்கநாதன் பார்ப்பதில்லையா?" என்று கேட்டார்கள்.

"பார்ப்பதில்லை..." என்றார்.

"ஏன்...?"

"இவர்களுக்கு வேதம் நன்றாகத் தெரியும். தெரியும் என்கிற செருக்கும் இருக்கிறது! ஆனால் ரங்கநாதரைத் தெரியாது. அவர்களுக்கோ வேதம் தெரியாது. ஆனால் ரங்கநாதரைத் தெரியும். இப்போது சொல்லுங்கள் – அது வேண்டுமா? இது வேண்டுமா...?"

'வேதம் தெரியும். ஆனால் ரங்கநாதரைத் தெரியாது என்றால் எதற்கு சுமையான அந்தக் கல்வி?' என்கிறார் சுவாமி தேசிகன். கல்வியே சுமையாகி விடுகிறதாம்!

*பஜகோவிந்தம் பஜகோவிந்தம் கோவிந்தம் பஜ மூடமதே*
*சம்ப்ராப்தே சன்னிஹிதேகாலே*
*நஹிநஹி ரக்ஷதி டுங்ரிஞ்கரணே!*

– ஒரு வியாகரணம் படிக்கிறவரைப் பார்த்து இப்படிச் சொன்னார் ஆதிசங்கர பகவத் பாதாள்! அவர் பாணினி சூத்ரமெல்லாம் மனப்பாடம் பண்ணியவர். அவரிட்டே போய் 'மூடமதே!' என்றார்! இந்த சாஸ்திரங்களெல்லாம் மனப்பாடம் பண்ணினால் பகவான் அனுக்ரஹம் பண்ணுவானா? 'கோவிந்தம் பஜ! கோவிந்தம் பஜ!' – அவனிடத்தில் பக்தி இருக்க வேண்டாமா? பக்தி இல்லாமல் ஆயிரம் கல்விகள் ஆயிரம் வித்யைகள்! வித்யைகளை இந்த உலகத்திலே

## அருள்வாக்கு

நம் கோபம் எதிராளியை மாற்றாது. அவனுக்கும் நம்மிடம் கோபத்தை உண்டாக்குவதுதான் அதன் பலன். இரண்டு பக்கங்களிலும் துவேஷம் வளர்ந்து கொண்டே போகும். ஒருத்தன் தன் தப்பைத் தானே உணர்ந்து திருத்தச் செய்யாமல், நம் கோபத்துக்குப் பயந்து சரியாக நடந்து காட்டுவதில் நமக்குப் பெருமையில்லை. இது நிலைத்தும் நிற்காது. அன்பினாலேயே பிறரை மாற்றுவதுதான் நமக்குப் பெருமை; அதுதான் நிலைத்து நிற்கும்.

ஒருத்தன் பாபம் செய்ய அவனுடைய மனசு, சந்தர்ப்பம் இரண்டும் காரணமாகின்றன. நாம் பல பாபங்களைச் செய்ய முடியாமல் சந்தர்ப்பமே நம்மைக் கட்டிப் போட்டிருக்கலாம். எனவே, ஒரு

பாபியைப் பார்க்கும் போது. "அம்பிகே! இந்தப் பாபத்தை நானும் கூடச் செய் திருக்கலாம். ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் தராமல் நீ கிருபை செய்தாய். அந்தக் கிருபையை இவனுக்கும் செய்யம்மா" என்று பிரார்த்திக்க வேண்டும்.



இரண்டாவதாக, நம்மை ஒருத்தர் துவேஷிக்கிறார் என்றும் கோபம் கொள்ள வேண்டியதில்லை. நாம் எத்தனை தூஷணைக்குத் தக்கவர் என்பது நம் உள் மனசுக்குத் தெரியும். ஒருகால் நம்மைத் தூஷிக்கிறவர் நாம் செய்யாத தவறுக்காக நம்மைத் திட்டிக் கொண்டிருக்கலாம். ஆனால் நாம் செய்த தவறுகள் அதை விடப் பெரியவை என்று நம் அந்தரங்கத்துக்குத் தெரியும். நம் தவறுகளைக் கழுவிக் கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் அம்பாளிடம் பச்சாதாபத்துடன் அழ வேண்டிய நிலையில்தான் இருக்கிறோம். இந்த நிலையில் உள்ள நாம் பிறரைத் தப்பு கண்டு பிடித்துக் கோபிக்க நியாயம் ஏது?

நாம் தப்பே செய்யவில்லை என்றால் அப்போது பிறரைக் கோபிக்கலாமா என்றால் இப்படித் தப்பே பண்ணாத நிலையில் நாம் அன்புமயமாகி விடுவோம். அப்போது நமக்குப் பாவியிடமும் கருணை தவிர வேறு எந்த பாவனையும் இராது. கோபமே உண்டாகாது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

சம்பாதித்தால் மொத்தமும் ஜீவிதத்துக்கு வாழ்க்கைக்குத்தான். அதனால், அவனைத் தெரிவிக்கும்படியான வித்யைதான் வித்யை. மற்றவை வித்யை அல்ல. மற்றவையெல்லாம் வெறும் அஞ்ஞானம் என்று சொல்லி விட்டார் பகவத்பாதாள்.

பகவானை உணர்த்தாத வித்யை அனைத்தும் அவித்யை. அவனை உணர்த்தக் கூடிய வித்யை இருக்கிறதே அதுதான் வித்யை. அதனால், அப்படிப்பட்ட வித்யையுடன் கூடிய பகவத் சிந்தனை மறவாத, உத்தமோத்தமமான, வேதத்தைச் சொல்லக் கூடிய வேதவித்துக்கள், பசுக்கள் இருக்கும் படியான இடங்கள் எங்கெல்லாம் உண்டோ அங்கெல்லாம் போய்த் துன்புறுத்தச் சொன்னான் ஹிரண்யன்.

அதற்கு மேல் என்ன சொன்னான்? குல தர்மம் எங்கெல்லாம் நன்கு நடக்கிறதோ, அங்கு போய் அடியுங்கள், அவர்களைச் சித்திரவதை பண்ணுங்கள் என்றான். "குல தர்மம் நடக்கிற இடங்களிலே விஷ்ணு பூரணமாக சாந்நித்யமாக இருக்கிறான் அவனை அடியுங்கள்!"

ஒரு கதை ஞாபகம் வருகிறது... பூர்வ காலத்திலே சததனு என்று ஒரு ராஜா இருந்தான். அவனுடைய தர்மபத்தினி சைப்யை என்று பெயர். இவர்கள் இரண்டு பேரும் ரொம்ப அந்நியோன்யமான தாம்பத்யம் நடத்தி வந்தார்கள். அந்நியோன்யம் என்றால் அவர்களை மாதிரி ஒரு தம்பதியைக் காட்ட உலகத்திலே எத்தனை முயன்றாலும் முடியாது. அப்படி தர்மத்திலே நிலைத்து நிற்கக்கூடியவர்கள். உத்தம பதிவ்ரதை அவள், சைப்யை.

உத்தம பதிவ்ருதா லட்சணங்களை நூறு சுலோகங்களில் சொல்லியிருக்கிறது.

பானையில் ஒரு சோறு பதம் என்கிற மாதிரி ஒன்றை மட்டும் சொல்கிறேன் :

நல்ல வெயில் காலம் அது. வெளியிலே போன பர்த்தா – கணவர் – திரும்ப கிருஹத்துக்கு வருகிறார். வந்தவர் நன்றாகச் சாப்பிட்டார். சாப்பிட்ட உடனே தூக்கம் வந்து விட்டது! பத்னி உட்கார்ந்திருந்தாள். அவள் மடியிலே தலை வைத்துக் கொண்டு தூங்கி விட்டார்.

அந்தண்டை, நேரே எதிரே சமையல் கட்டு. அடுப்பு திகுதிகுவென்று எரிகிறது. அதிலே தண்ணீர் கொதிக்கிறது.

இவர்களுக்கு எத்தனையோ விரதங்களெல்லாம் அனுஷ்டித்து ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. அதற்கு இன்னும் ஆண்டு நிறைவு ஆகவில்லை. எட்டு மாதம் ஆகிறது. அது திடீரென்று எழுந்து அழுதுகொண்டே போய் விட்டது – சமையல்கட்டுக்கு உள்ளே. உள்ளே போனவுடனே பார்த்தால் அடுப்பு திகுதிகுவென்று எரிகிறது. அடுப்பைப் பார்த்ததும் சிரிக்கிறது குழந்தை! நேரே அதிலே கை வைக்கப் போகிறது.

இவள் பர்த்தாவுக்கு விசிறிக் கொண்டிருக்கிறாளே – எழுந்தால் அவர் தூக்கம் கெட்டுப் போய்விடும். எழுந்து போகவில்லையானால் குழந்தை எரிந்துவிடும்!

ஆதிசங்கர பகவத்பாதாள் ஒரு வாக்யம் எழுதினார்கள் ப்ரும்ம சூத்ர பாஷ்யத்திலே: 'ஒரு வஸ்துவிலே இருக்கிற சக்தியானது எதிரேயிருக்கிறவர்களுடைய புத்தியை எதிர் பார்ப்பதில்லை' என்பதே அந்த வாக்யம்!

இயற்கையாக அக்னிக்கு என்ன குணம்...? சுடுதல் என்கிற குணம். குழந்தை தொட்டாலும் சுடும். ஞானி தொட்டாலும் சுடும்! குழந்தை தொடுகிறதே அதற்குச் சுட்டு விடுமே என்று அக்னி யோசிக்குமா என்ன...?

குழந்தை கையை வைக்கப் போயிற்று....

(தொடரும்)




# தவித்தது சுமி மட்டுமா?

✉ 'வாக்காளர்களின் வெற்றி' தலையங்கம் படித்தேன். இடைத்தேர்தல் முடிவுகள், அ.தி.மு.க. தலைவிக்கும், புதிய கூட்டாளி மூப்பனாருக்கும் நல்லதொரு பாடத்தை வழங்கியிருக்கிறது. மக்களை ஏமாற்ற முடியாது என்பதை இவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த வெற்றியை அடுத்து தி.மு.க.வும் ஏனோதானோ என்று இல்லாமல் மாநிலப் பொதுத் தேர்தலுக்கு முனைப்புடன் இப்போதே செயல்பட வேண்டும். உங்களின் அறிவுரையைக் கருத்தில் கொண்டு அக்கட்சி நடந்து கொள்வது புத்திசாலித்தனம்.

மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.

✉ பிஞ்சுக் குழந்தைகளின் முதுகில் கிலோ கணக்கில் லோடு ஏத்தும் மெட்ரிகுலேஷன் பள்ளிகளுக்கு மத்தியில் சேலம், வித்யா பீடம் ரொம்பவும் வித்தியாசம் காட்டுகிறது.

புனே, ஜே. ரஜினிராம்கி.

✉ ஒருவேளை பிக்காஸோ உயிரோடிருந்திருந்தால் அசந்துதான் போயிருப்பார், அந்த 60 இளைஞிகளின் திறமையைப் பார்த்து. கவர் ஸ்டோரி சூப்பர்!

விஜயவாடா – 1, தெனாலி ராஜன்.

✉ ஜே ஜே என்றால் ஊழல் என்று அர்த்தம் கொண்டிருந்தவர்களை வியப்பில் ஆழ்த்தி விட்டார் 'ஜே ஜே' விட்டல். ஊழல் திமிங்கலங்களை உலகறியச் செய்வதற்கு விட்டல் பின்னிய வலையை அவருக்குப் பின் வருபவர்கள் பாதுகாத்துப் பராமரிக்க வேண்டும்.

தஞ்சாவூர், வளர்மதி ஆசைத்தம்பி.

✉ சேலம் மோகன் குமாரமங்கலம் மருத்துவக் கல்லூரி மருத்துவமனை பற்றிய செய்திக்கு 'கூடை நிறையக் குறைகள்; வாரி நிறைய சமாளிப்புகள்' என்று தலைப்பிட்டிருக்கலாம். அவை பதில்களாகவே தெரியவில்லையே?

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ பணம் ஒரு மோகினிதான். வித்தியாசமான கோணத்தில் சிறுகதை புனைந்து (மோகினியாட்டம்) வாசகர்கள் மனங்களில் நீங்காத இடம் பெற்று விட்டார் பா. ராகவன். அருமையான கரு – தீர்க்கமான வசன நடை.

விழுப்புரம், வை. வெங்கடேசன்.

✉ 'ஹே ராம்' படத்தைப் பார்த்தவுடன் 'கல்லுக்குள் ஈரம்' நாவல் நினைவுக்கு வராத கல்கி வாசகர்கள் நிச்சயம் இருந்திருக்க முடியாது. அதை எப்படிச் சொல்வது என்று தவித்துக் கொண்டிருந்தவர்களுள் நானும் ஒருவன். உரிய சமயத்தில் சுமி அந்த விவரத்தைக் குறிப்பிட்டதோடு, ர.சு. நல்லபெருமாள் புகைப்படத்தையும் வெளியிட்டு கௌரவப்படுத்தியது நல்ல விஷயம்.

பெங்களூர், ஏ. குமார்.

✉ 'சுமி' அவர்களின் 'ஹே ராம்' படம் பற்றிய கருத்தைப் படித்தேன். 'ஹே ராம்' படத்தில் 'கல்லுக்குள் ஈரம்' நாவலின் அடிப்படைக் கருத்து பறிபோயிருப்பது பற்றிய சுமியின் ஆதங்கம் புரிகிறது. வாசகர்கள் பலர் என்னிடம் தொடர்பு கொண்டதிலிருந்து இதன் பாதிப்பையும் உணர்கிறேன்.

எழுத்தாளர்களின் எழுத்தும், கருத்தும் கடத்தப்படும்போது குரல் எழுப்ப எழுத்தாளர்களுக்கு வலுவான அமைப்போ, அரசின் துணையோ இல்லை என்பது பரிதாபத்துக்குரியது.

பாளையங்கோட்டை, ர.சு. நல்லபெருமாள்.

அட்டையில் : ஆர். சீதா
வண்ணப்படம் : ப்ரவீண்குமார்

# ஸ்ரீ டிராவல்ஸ்

194-A, முதல் மாடி, அண்ணாசாலை, சென்னை - 600 006.
12/a, ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 600 099.
போன் : 5568620, பேக்ஸ் : 5564866
பேஜர் : 9632-701579 இ-மெயில் :sritrave@satyam.net.in

**கோடை விடுமுறையை உங்கள் குடும்பத்துடன் மகிழ்ச்சியுடன் கழித்திட ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் அருமையான சுற்றுலாக்கள்!**

அனல் பறக்கும் கோடையில் ஹிமாசல பிரதேசத்தின் பனிப்பொழிவுகளில் உங்கள் குடும்பத்துடன் குதூகலித்து மகிழ்ந்திடுங்கள்!



ரோடங் பாஸில் எமது சுற்றுலா குழுவினர்

புறப்படும் தேதிகள் : 30-04-2000
மற்றும் 13-05-2000

**சென்னை-டில்லி-குருசேத்திரா-சண்டிகார்-சிம்லா-குலு-மணாலி-ரோடங்பாஸ்-டில்லி-விருந்தாவன்-மதுரா-ஆக்ரா-சென்னை.**

பயணத்தொகை : ரூ.6,500/-
பயணநாட்கள் : 13 நாட்கள்

## ST - 16 கோவா சுற்றுலா

புறப்படும் நாள்: 15.04.2000

**சென்னை-கோவா-மும்பாய்-நாசிக்-திரியம்பகம்-பஞ்சவடி-ஷீரடி-அவுரங்காபாத்-அஜந்தா-எல்லோரா-சனி சிங்கானப்பூர்-சென்னை.**

பயணநாட்கள் : 9 பயணத்தொகை : ரூ.4,800/-

## ST - 17 அந்தமான் சுற்றுலா

அந்தமான் தீவுக்கூட்டங்களின் இயற்கையழகு காட்சிகள்

புறப்படும் தேதி: 21.04.2000

**சென்னை-போர்ட் பிளேர்-சென்னை**

பயணநாட்கள் :12 பயணத்தொகை : ரூ.6,500/-

**(கப்பலில் உயர்வகுப்பு பயணம் மற்றும் விமானப் பயணம் வேண்டுவோருக்கு பிரத்தியேக வசதி உண்டு)**

## ST - 20 நேபாள சுற்றுலா

கொளுத்தும் வெயிலில் குளுகுளு மலைப் பிரதேசங்கள்

புறப்படும் தேதி : 22.05.2000

**சென்னை-கல்கத்தா-கேங்டாக்-டார்ஜிலிங்-காத்மாண்டு-போக்ரா-கோரக்பூர்-வாரணாசி-சென்னை**

பயணநாட்கள் :12 பயணத்தொகை :ரூ.6,900/-

- மிகவும் தரமான ஹோட்டல்களில் பிரத்தியேகமான தங்கும் அறைகள். [கலர் டி.வி., போன், ஹீட்டர், கார்பெட் மற்றும் பாத்டப் வசதிகளுடன்]
- பிராமண சமையல்காரர்களால் தயாரிக்கப்படும் தரமான தென்னிந்திய சைவ உணவு.
- வழக்கம்போல் விருந்து மற்றும் இன்னிசை நிகழ்ச்சியும் உண்டு.
- வெளியூர்களில் இருந்து கலந்து கொள்பவர்களுக்கு எமது செலவிலேயே ரயிலில் டிக்கெட் வசதி செய்து தரப்படும்.
- **16 பேர் கொண்ட குழுவினராக வருபவர்களுக்கு பிரத்தியேக தள்ளுபடி உண்டு.**

அனைத்து கிரெடிட் கார்டுகளும் கமிஷன் இன்றி ஏற்றுக் கொள்ளப்படும்.

L.T.C. வசதி உண்டு.

ஏமாற்றத்தை தவிர்க்க உடனே முன்பதிவு செய்யுங்கள்!



''சும்மா எப்புக் கொட்டாதே! அவங்க ஒரு புது 'மவுஸ்' வாங்கினதா பேசினது நீ நினைக்கிற அர்த்தத்திலே இல்லை.''



''அவர் தீவிர நாகேஷ் ரசிகர்!''

''ஓ அதான் தன் கம்ப்யூட்டரின் சர்வருக்கு 'சுந்தரம்'னு பேர் வச்சிருக்காரா?''



''ஜாவா கத்துக்கணும்னு சொன்னதும் எங்கம்மா அழுதுட்டாங்க.''

''ஏன்?''

'' 'இந்தோனேஷியா போக ஜம்மிதியே. உன்னை எப்படிப் பிரிஞ்சிருப்பேன்?'னு புலம்பறாங்க.''






''ரொம்ப அட்வான்ஸ்ட் கம்ப்யூட்டர்களாக்கும்.''




— குல்லூ



மகிழ்ச்சி பெருக வரவேற்போம்...

# அக்வேரியஸ் ஆண்டுகள்

## சிறுதுளி பெருவெள்ளம்

நாம் இதுவரை கண்டிராத மறுமலர்ச்சியை அள்ளித்தரும் பொற்காலம் மலர்ந்து வருகிறது. அமைதியும், வளமையும், அறிவியலும் ஆட்சி புரிய இருக்கும் புதுயுகம் – அக்வேரியஸ் ஆண்டுகள். இது வெறும் கால மாற்றம் அல்ல. மாற்றங்களின் காலம். இப்போது முதல் கி.பி. 4150 வரை அக்வேரியஸ் ஆண்டுகள் . பிரமிக்க வைக்கும் கண்டுபிடிப்புகள், முன்னேற்றங்கள் என சாதனைகள் மடை திறந்த வெள்ளமாகப் பரவும் காலம்.

### அறிவே அச்சாணி



வரும் ஆண்டுகளில் அறிவியல், தொழில் நுட்பம் ஆகிய துறைகளில் நிகழும் மாற்றங்கள் நம் வாழ்க்கைத் தரத்தை வெகுவாக உயர்த்தும். இன்டர்நெட், ஈ–காமர்ஸ் போன்ற தகவல் முறைகள் வர்த்தக முறைகளையும், பொதுத்துறை அலுவல்களையும் மிக எளிதாக்கி, விரைவாக்கும்.

தூய்மையான சிந்தனைகள் உணர்வு ரீதியாக நம்மை உயர்த்தும். நவீன மருத்துவ விஞ்ஞானத்துடன் இயற்கை வைத்திய முறைகள் கை கோர்த்து, புதிய சிகிச்சை முறைகள் தோன்ற வழி வகுக்கும். கல்வியின் நன்மையிலும் கணிசமான புதுமைகள் உருவாகும்.

மார்ச்12–ஏப்ரல்13, 2000

பாய்ந்து வரும் புதுமை வெள்ளம் புதிய கோட்பாடுகளைக் கொண்டு வரும். இப்புதிய யுகத்தில் நமக்கு ஏராளமான தேவைகளும், அவற்றைப் பூர்த்தி செய்யத் தாராளமான வாய்ப்புகளும் உருவாகும். தெளிந்த நல்லறிவுதான் புதுயுகத்தில் நம்மை வழி நடத்தும் ஆதார சக்தி.

வருங்காலத்தைப் பயன் தரும் வகையில் வடிவமைக்கவும், புதிய சவால்களைச் சமாளிக்கவும் அறிவு ரீதியாக, உணர்வு ரீதியாக, பொருளாதார ரீதியாக நாம் தயாராக வேண்டாமா?

### புதிய சாதனைகளுக்குத் துவக்க விழா !

புதிய மாற்றங்களையும், சவால்களையும், சாதனைகளையும் வரவேற்கும் வகையில், ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்ப்புத்தாண்டு பண்டிகையுடன் அக்வேரியஸ் ஆண்டுகளின் துவக்க விழாவையும் மார்ச் 12 முதல் ஏப்ரல் 13 வரை கொண்டாடுகிறது.




ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள். ஒருங்கிணைந்து புதுயுகத்தில் புதிய சாதனைகள் புரியத் துவங்குவோம்!

ஸ்ரீராம் சிட்ஸ், 1974ல் எளிமையாகத் துவங்கி, இன்று வருடத்திற்கு 1,800 கோடிக்கும் மேல் பணம் பட்டுவாடா செய்யும் அளவுக்கு வளர்ந்துள்ளது. 400க்கும் மேற்பட்ட கிளைகள் மற்றும் 25,000 முகவர்கள் மூலம் அரும்பணியாற்றி, 18.5 லட்சம் குடும்பங்கள் செழிக்க உதவியுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு சேவை புரியக் காத்திருக்கிறது.

ஸ்ரீராம் சிட்ஸ்



கையளவு சேமிப்பு, கடல் அளவு செழிப்பு.

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்**

சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு

சென்னை 600 002. போன்: 8514833-40

Wordcrafts

# சா...பாஷ்!

பிப்ரவரி கடைசி வாரத்தில், ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவும், கர்நாடக முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணாவும் ஈ மெயிலில் தொடர்பு கொள்ளுவது என்று தீர்மானித்தார்கள். மற்ற மாநில முதலமைச்சர்களைப் போல அல்லாமல், தங்கள் மாநிலங்களில் அதிக அளவு கம்ப்யூட்டர் உபயோகத்தில் இருப்பதையும் ஒருவருக்கு ஒருவர் காட்டிக்கொண்டார்கள்.

முந்திக்கொண்டவர் கர்நாடக மாநில முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணாதான்.

''கர்நாடகாவைப் போலவே ஆந்திராவும் எல்லா வகைகளிலும் செழித்து முன்னேற விரும்புகிறேன்!'' என்று ஏதோ தாங்கள் அதிகம் சாதித்துவிட்ட மாதிரி செய்தி அனுப்பினார்!

ஐ.டி. சமாசாரத்தில் எங்கேயோ போய்விட்ட சந்திரபாபு நாயுடு சும்மா இருப்பாரா? பதிலடி கொடுத்தார்:

''ஆந்திர பிரதேசத்தில் நாங்கள் ஆரம்பித்து வைத்த நல்லதை எல்லாம், கர்நாடகாவும் முன்னுதாரணமாக எடுத்துக்கொண்டு செயல்படுத்தி வருவதைப் பார்த்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்!''



துவக்கம் என்னவோ இப்படி இருந்தாலும், ''இரு மாநிலங்களுமே ஒருவரிடமிருந்து இன்னொருவர் என்ன கற்றுக்கொள்ளலாம் என்ற முனைப்போடு இருப்போம். கூடவே, உலகின் பல பாகங்களிலிருந்தும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியவை அத்தனையையுமே அறிந்துகொள்ள முயலுவோம்'' என்றார் நாயுடு.

''தொழில்நுட்பத்தை மக்களின் வீட்டு வாசலுக்கே எடுத்துச் சென்று கொடுத்து விட வேண்டும்'' என்று எஸ்.எம். கிருஷ்ணா எழுத, ''முன்னேற்றத்துக்குப் புதிய பாதையை அமைத்தாக வேண்டும்'' என்று பதில் எழுதினார் நாயுடுகாரு. அத்தோடு நிற்காமல், தம் மாநிலத்தை SMART ஆக உருவாக்கப் போவதாக ஒரு வரியும் சேர்த்தார்! (Simple, Moral, Accountable, Responsive, Transparent – எல்லா முதல் எழுத்துக்களும் சேர்ந்ததுதான் SMART)

முடிக்கும் முன்னால், 'வித் வார்ம் பெர்சனல் ரிகார்ட்ஸ்' என்று கையெழுத்திட்டார் – அதாவது பெயரைப் பொறித்தார் எஸ்.எம். கிருஷ்ணா.

நாயுடு வெறுமனே 'வித் ரிகார்ட்ஸ்' என்று முடித்துக்கொண்டார்!

இருவரையும் ஈ மெயிலில் தொடர்பு கொள்ளத் தூண்டிய ஸ்டார் டி.வி இதை வேடிக்கை பார்த்தது.

விஷயம் இத்தோடு முடியவில்லை.

தம் ஈமெயிலுக்குப் பதில் வரவில்லையே என்று தம் கடிதத்தை ரிபீட் செய்தார் கர்நாடகாவின் எஸ்.எம். கிருஷ்ணா.

ஏற்கெனவே பதில் அனுப்பி விட்ட ஆந்திர முதல்வரின் அலுவலக அதிகாரி, குட்டு வைக்க இன்னொரு சந்தர்ப்பம் என்று, 'பதிலைத்தான் அனுப்பியாச்சே? பார்க்கலியா? பரவாயில்லை. இன்னொரு தடவை அனுப்பறேன்' என்று பதிலை இணைத்துவிட்டு, சும்மா இருக்கவில்லை.

''உங்க முதல்வரோட சர்வர் சரியா இயங்கலே போலிருக்கே? எதுக்கும் நல்லா செக் பண்ணிடுங்க'' என்றார்!

நம் தமிழக முதல்வர் கிருஷ்ணா நீர் பிரச்னைக்கு நாயுடுவுக்கு ஈமெயிலும், காவிரி பிரச்னை எழுகிற சமயத்தில் கிருஷ்ணாவுக்கு ஓர் ஈ மெயிலும் அனுப்பினால் சுவாரசியமாகத்தான் இருக்கும். ஆனால் அதற்கு

முன், இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி எனப்படும் கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் துறையில் ஆந்திராவும் கர்நாடகமும் எந்த நிலையில் இருக்கின்றன?

## ஆந்திர பிரதேஷ் Vs கர்நாடகா

ஆந்திர மாநிலத் தலைநகர் ஹைதராபாதில், இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி (IT)யைக் கொண்டு வந்து, அரசு நிர்வாகத்தில் கம்ப்யூட்டர் அறிமுகப்படுத்திய முதலமைச்சர் என்ற பெருமையை சந்திரபாபு நாயுடு அடைந்திருக்கிறார். (இவரை ஆந்திராவின் 'முதல்வர்' என்பதைவிட CEO என்றே எல்லாரும் குறிப்பிடுகிற அளவுக்கு கம்ப்யூட்டரை நிர்வாகத்தில் கொண்டு வந்து விட்டார்!)

கைக் குழந்தை மாதிரி சுமக்கும் லேப்-டாப் கம்ப்யூட்டரில் எல்லாத் தகவல்களையும் வைத்திருக்கிறார் நாயுடு. எந்த அயல்நாட்டுப் பிரதிநிதி வந்தாலும் லேப்டாப்பில் சடசடவென்று விரல்களைத் தட்டி கடகடத் தகவல்கள் தந்து வியப்பில் ஆழ்த்தி வருகிறார்! சமீபத்தில் வியந்தவர் சிங்கப்பூர் பிரதமர்!

மைக்ரோசாஃப்ட் அதிபர் பில் கேட்ஸ் ஹைதராபாதில் இவரைச் சந்தித்த பிறகு, தங்கள் ஆராய்ச்சி மையத்தை நிறுவ பெங்களூரைவிட ஹைதராபாதே நல்லது என்று தீர்மானித்தார்! கர்நாடகத்துக்கு விழுந்த முதல் அடி இதுதான்! 'சிலிகான் வேலி அஃப் த சவுத்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்த கர்நாடகத்தின் தலைநகர் பெங்களூர், பௌன்சர் பந்து வீசப்பட்ட மாதிரி 'டபக்'கென்று குனிந்தது! அமெரிக்காவுக்கு வெளியே மைக்ரோஸாஃப்ட்டால் நிறுவப்பட்ட முதல் ஆராய்ச்சி நிறுவனம் ஹைதராபாத்தில் அமைந்து, பெங்களூரிடமிருந்து பறித்துக்கொண்டது!

சந்திரபாபு நாயுடு இதோடு நிற்கவில்லை. அதி நவீன பிஸினஸ் ஸ்கூல் - (ஹார்வர்டு மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்கள்) - ஒன்றை நிறுவும்படி இந்தியத் தொழிலதிபர்களிடம் கேட்டுக்கொண்டார். பென்சில்வேனியா யூனிவர்சிடியையும் நார்த்வெஸ்டர்ன் யூனிவர்சிடியையும் இந்த பிஸினஸ் ஸ்கூல் படிப்புக்கு உதவ டை-அப் செய்து, 'இப்ப என்ன சொல்றீங்க?' என்று சவால் விட்டார். பெங்களூர் வாயை மூடிக் கொண்டுவிட்டது!

ஆனால் பெங்களூரில்தான் இந்தியாவின் புகழ் பெற்ற கம்ப்யூட்டர் நிறுவனங்களான 'விப்ரோ'வும் 'இன்ஃபோஸிஸ்' நிறுவனமும் இன்ன பிற குட்டி சாஃப்ட்வேர் ராட்சசர்களும் இருக்கிறார்கள். பங்குச்சந்தையில் இந்த கம்பெனிகளின் ஷேர்கள், உச்சத்தை அடைந்து, மருந்து கம்பெனிகளின் ஷேர்களைப் போல, அல்லது அவற்றை விடப் பலமடங்கு மதிப்புள்ளவையாக, உயர்ந்து நிற்கின்றன. நியூயார்க் பங்குச் சந்தையில்கூட இந்தப் பங்குகளை வாங்கவும் - விற்கவும் பதிவு செய்கிற அளவுக்கு இந்த நிறுவனங்கள் சர்வதேச முத்திரை பெற்றன!



# சரியான போட்டி!

**கொ**ஞ்சம் லேட்டாக முதல்வர் ஆன கர்நாடகாவின் எஸ்.எம். கிருஷ்ணா, சென்ற அக்டோபரில்தான் ஐ.டி.யின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். ஈமெயில், இன்டர்நெட் என்று குறுகிய அவகாசத்திலேயே தம் ஆட்சியின் கடிதப் போக்குவரத்துகளை கம்ப்யூட்டரில் நுழைத்தார். மாவட்டத் தலைமை நிர்வாகிகளுடன் வீடியோ கான்ஃபரன்சிங் என்று

ஒரு படி தாண்டினார். (சந்திரபாபு நாயுடுவுக்கு கலெக்டர்களுடன் கடிதப் போக்குவரத்தே கம்ப்யூட்டரில்தான் என்பது கிருஷ்ணாவை ரொம்பவே உசுப்பி விட்டு விட்டது!)

பெங்களூரிலுள்ள பெரிய பெரிய கம்ப்யூட்டர் கம்பெனிகளின் தலைவர்களை அழைத்துப் பேசினார். "இன்ஃபோஸிஸ் நாராயணமூர்த்திக்கு நேரம் இல்லை என்றால், நானே அவர் ஆபீசுக்குப் போய்ப் பார்த்துப் பேசுவேன்!" என்றார் பதவி ஏற்ற முதல் நாளே! இன்டர்நேஷனல் டெக்னாலஜி பார்க் லிமிடெட் என்று ஒரு கூரையின் கீழேயே சகல ஐடி சமாசாரங்களும் கிடைக்கிற மாதிரி, ஒரு பிரும்மாண்டமான அமைப்பைத் திறந்து வைத்தார்.

"நீங்க ரொம்ப லேட். நாயுடு உங்களைத் தாண்டிப் போய் விட்டார்!" என்றார்கள் கிருஷ்ணாவிடம்.



**"உன் காதலி எழுதற லவ் லெட்டரையெல்லாம் அவங்கப்பாவே கொண்டு வந்து தருவாருன்னு சொல்றியே, எப்படிடா?"**

**"அவர்தானே எங்க ஏரியா போஸ்ட்மேன்!"**

**— சூரம்பட்டி சத்யா முருகவேல்**

"அதனால் என்ன? பெங்களூரும் ஹைதராபாத்தும் போடுகிற போட்டி ஆரோக்யமான போட்டிதான். யார் வென்றாலும் இந்தியாவே வென்ற மாதிரிதான்!" என்று ஒரு போடு போட்டார் கிருஷ்ணா. "இன்னமும் பல ஐடி கம்பெனிகளுக்கு பெங்களூர்தான் முதல் சாய்ஸாக இருக்கிறது!" என்றார் சமாதானமாக. (ஒரு புள்ளி விவரப்படி சாஃப்ட்வேர் நிறுவனங்கள் கர்நாடகாவில் மட்டும் 240 இருக்கின்றன. ஹைதராபாத்தில் 110. சென்னையில் 70தான்.)

**ஹை**தராபாத் - மும்பை நெடுஞ்சாலையில் உள்ள மாதாபூரில் சைபர் டவர்ஸ் (Cyber Towers) என்ற பலமாடி சாஃப்ட்வேர் தயாரிப்பு மையத்தை ஹைடெக் சிடியாக அமைத்தார் நாயுடு. தமது தொலைநோக்குப் பார்வையில் - விஷன் 2020 - ஹைதராபாத் நகரம்தான் இந்தியாவின் இன்ஃபோடெக் தலைநகராக இருக்கப்போகிறது என்று அப்போது அறிவித்தார்.

சாஃப்ட்வேர் துறையில் பெரிய புள்ளிகள் எனப்படும் ஆரகிள், பான், டாடா ஐபிஎம், மெடமார், க்ளோபல் சொல்யூஷன்ஸ், சத்யம், விப்ரோ, விஷுவல் சாஃப்ட் என்று எல்லாருமே ஹைதராபாத்தில் இடம் பிடித்துக் கொண்டு விட்டார்கள்.

நேஷனல் அசோசியேஷன் அஃப் சாஃப்ட்வேர் அன்ட் சர்வீஸ் கம்பெனி (சுருக்கமாக NASSCOM), சமீபத்தில் ஒரு சர்வே செய்தது:

கம்ப்யூட்டர் துறையில் விஷயம் தெரிந்த ஆட்கள் என்று எடுத்துக்கொண்டால், 4க்கு 3.80 மார்க் ஹைதராபாதுக்கு. அத்துறைக்கு அரசு ஆதரவு: 4க்கு 3.70 மார்க். தெளிவான கருத்துப் பரிமாற்றமா? 4க்கு 3.80

ஒவ்வொரு மாதமும் 8ஆம் தேதி அன்று தொழிலதிபர்களைச் சந்திக்கிறார் சந்திரபாபு நாயுடு. ஏதாவது குறைகள் இருக்கிறதா என்று கேட்கிறார். மின்சாரம், மாசுக் கட்டுப்பாடு என்று எதாக இருந்தாலும் சரி. பிறகு அவரே தலையிட்டு வழி கண்டு பிடிக்கிறார். தாமதம் என்பதே சுத்தமாக இல்லை!

"இன்ஃபோடெக் இண்டஸ்ட்ரிதான் அதிவேக வளர்ச்சி கண்டு வருகிறது. நம் சாஃப்ட்வேர் இளைஞர்களின் திறமை உலகம் முழுக்கப் பரவி வருகிறது. இதை நான் ஏன் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது? போக்குவரத்து, வேலை வாய்ப்பு, பொதுமக்கள் பெரிதும் பயன்படுத்தும் விஷயங்கள் எல்லாவற்றிலுமே கம்ப்யூட்டர்தான் மக்களுடன் பிணைப்பை ஏற்படுத்தும் என்று நம்புகிறேன். அந்த வழிகளில்தான் இனி என் முயற்சிகள் அமையும்!" என்று சொல்லிவிட்டார் நாயுடு.

**ச**ந்திரபாபு நாயுடு வெங்கடேசுவரா பல்கலைக் கழகத்தில், பொருளாதாரத்தில் பிஜி பட்டம் பெற்றவர். எஸ்.எம். கிருஷ்ணாவோ சர்வதேசச் சட்டத் துறையில் சதர்ன் மெத்தடிஸ்ட் யூனிவர்சிடியில் பி.ஜி பட்டம் பெற்றவர். அதி புத்திசாலிகளுக்கு மட்டுமே கிடைக்கும் ஃபுல்பிரைட் ஸ்காலர்ஷிப் பெற்று அமெரிக்காவிலும் படித்தவர்.

- சந்திரபாபு நாயுடுவுக்கு ஈமெயில் அனுப்புகிறீர்களா? இதோ முகவரி: cmap@ap.nic.in அல்லது cm@ap. gov.in
- எஸ்.எம். கிருஷ்ணாவின் ஈமெயில் முகவரி : smkrishna@bangaloreit.com அல்லது cmk@bangaloreit.com.

**— சித்தார்த்**



• வீட்டுக்கு வீடு கார்கில்!

போரடிக்கறதை மட்டும் விட்டுட்டா தேவலை. (பார்க்க: ஸ்டில்)

இதைவிட நல்ல ட்ராமாக்களை வரதராஜனே குடுத்திருக்கார். இருந்தாலும் பெரிய சந்தோஷம் என்னன்னா, அபத்தமான கடி ஜோக்ஸுக்குத் தொடர்ந்து 144 போட்டுட்டே வர்றதுதான் இந்த ட்ரூப்பை வித்தியாசமா காட்டுது.

• • •

ஃபிடல் காஸ்ட்ரோவை அநேகமா எல்லாருக்கும் தெரிஞ்சிருக்கும். க்யூபாவோட அதிபர்.

காப்ரியல் கார்ஸியா மார்க்யூஸ்?

மார்க்யூஸ், நோபல் பரிசு பெற்ற லத்தீன் அமெரிக்க ரைட்டர். கொலம்பியாகாரர். (கொஞ்ச நாள் முன்னால இவரை கேரக்டரா வெச்சே கல்கில ஒரு ஷார்ட் ஸ்டோரி வந்தது ஞாபகமிருக்கா?)

இந்த மார்க்யூஸும் காஸ்ட்ரோவும் பெஸ்ட் ஃப்ரெண்ட்ஸ். மார்க்யூஸோட கதைகளைப் படிச்சே அவரோட ரசிகராகி, ஃப்ரெண்டாகவும் ஆனவர், ஃபிடல்.

ஒரு நாட்டு அதிபர்னா லேசுப்பட்ட விஷயமா? எத்தனை வேலை, தலைவலி, பாலிடிக்ஸ், மண்ணாங்கட்டி!

பட், மார்க்யூஸ் க்யூபா வந்திருக்கார்னு கேள்விப்பட்டா, ஃபிடல் நடுராத்திரியானாலும் ஓடி வந்துடுவாராம், அவர் தங்கியிருக்கற ஹோட்டல் ரூமுக்கு!

மணிக்கணக்கா இலக்கிய விவாதம் பண்றதுல ஃபிடல்,

நியூஸ் வரதராஜனோட ஸ்டேஜ் ப்ளே ஒண்ணு பார்த்தேன். லாஸ்ட் வீக் கல்கில சீரியஸ் நாடகங்களுக்கும் காமெடி நாடகங்களுக்கும் நடுவுல இருக்கற 'கேப்'பை ஃபில் பண்ற மாதிரி இடைநிலை நாடகங்கள் வரணும்னு இ.பா. சொல்லியிருந்தது ஞாபகத்துக்கு வந்தது. வரதராஜன் கொஞ்சம் ட்ரை பண்ணினா, அந்த 'கேப்'பை நிரப்ப முடியும்னு தோணிச்சு. கோமல் போனதுக்கப்புறம் காலியாவே இருக்கற ப்ளேஸ் அது.

காம்ப்ரமைஸ் பண்ணிக்காம வாழ முடியாதுங்கறதுதான் இந்த 'வீட்டுக்கு வீடு கார்கில்' ப்ளேவோட நாட். இதுல வரதராஜனுக்கு சிறுமை கண்டு பொங்கற கேரக்டர். நல்லா பொங்கறார். ஷர்ட் பாக்கெட்ல பிடி அரிசி போட்டா, பத்து நிமிஷத்துல சாதம் ஆயிடும் போல அத்தனை உணர்ச்சிமயம். சரியான ஜோடியா, நித்யா. உலகம் புரியாத புருஷனைக் கட்டிக்கிட்டு அவஸ்தைப்படற கேரக்டர்ல பிரமாதமா செய்யறாங்க.

# ஏர்போர்ட்டில் ஏன்னு

என்ன பிராப்ளம்னா, எவ்வளவுதான் இயல்பான வசனங்கள், நடிப்புன்னாலும் இது ட்ராமாதான்னு செகண்டுக்கு செகண்ட் ஃபீல் பண்ண வெச்சிடறாங்க. மைக் முன்னால வந்து நின்னு 'சாரே ஜஹா(ன்)ஸே அச்சா' பாடற மாதிரி ஆடியன்ஸைப் பார்த்தே பேசி

மார்க்யூஸுக்குச் சளைச்சவரேயில்லை.

சில வருஷம் முன்னால அப்படித்தான் ஒரு தடவை மார்க்யூஸ் அங்கோலாவுக்குப் போயிட்டு, வழில க்யூபால இறங்கி, ஒரு லாட்ஜுல தங்கியிருக்கார்.

நியூஸ் கேள்விப்பட்டு காஸ்ட்ரோ ஓடி வந்துட்டார். லாட்ஜ் ரூம்ல ரெண்டு பேரும் பேசிட்டிருந்தப்ப, வெளில ப்ரெஸ்காரங்க நிறையப் பேர் சேர்ந்துட்டாங்க.

# சுமி சூப்பர்மார்க்கெட்



மார்க்யூஸ் அவரோட நாவல்களைப் போலவே, அரசியல் கட்டுரைகளுக்காகவும் வேர்ல்டு முழுக்கக் கொண்டாடப்படறவர். அங்கோலால உணவுப் பஞ்சம். அங்க போயிட்டு வர்றவர், வழில காஸ்ட்ரோவோட மணிக்கணக்கா பேசறார்னா, இதுக்கு ஒரு அரசியல் முக்கியத்துவம் இல்லாம எப்படிப் போகும்?

இதுதான் ப்ரெஸ்காரங்க யோசனை.

ஆச்சா? லாட்ஜ்லேருந்து கிளம்பி, மார்க்யூஸ் ஏர் போர்ட்டுக்கு வரார். பார்த்தா, ஃபிடலும் கூடவே ஏர்போர்ட்டுக்குப் போறார், பேசிக்கிட்டே.

அப்படி என்னய்யா மகா பெரிய டிஸ்கஷன்? விடலை, பத்திரிகைக் காரங்க.

துரத்திக்கிட்டே அவங்களும் ஏர்போர்ட் போனாங்க.

அதிபர் கூட பேசிட்டிருக்கற பேசஞ்சர் வரலையேன்னு விமானம் கிளம்பத் தாமதமாகுது! இது இன்னும் சந்தேகத்தைக் கிளப்ப, 'ஏதோ ரொம்பப் பெரிய சமாசாரம். அங்கோலா நாட்டு விவகாரம் பத்தி மார்க்யூஸ், நம்ம அதிபருக்குப் படு முக்கியமான நியூஸ் ஒண்ணு கொண்டு வந்திருக்கார்'னு அத்தனை பேரும் முடிவு பண்ணிட்டாங்க.



• கோபால்

ஒருவழியா மார்க்யூஸ் கிளம்பிப் போனார். காஸ்ட்ரோ வீட்டுக்குப் போனார்.

# ரகசியம்?

என்னதான் அப்படிப் பேசினீங்கன்னு ரெண்டு பேரையும் வாட்டிட்டாங்க, ரெண்டு நாட்டுலயும்!

ஆக்சுவலா அவங்க பேசிட்டிருந்த விஷயம் என்ன தெரியுமா?

கடல் ஜீவராசிகள்ல எதெதெல்லாம் டேஸ்டா இருக்கும், எதை எப்படி சமைச்சா, சுவை கூடுதலா இருக்கும்ங்கறதைப் பத்தி!

இந்தச் சம்பவத்தை விவரிச்சி மார்க்யூஸ் ஒரு பேட்டில சொல்லியிருக்கறதோட தமிழ் ட்ரான்ஸ்லேஷன் 'கல்குதிரை' மார்க்யூஸ் சிறப்பிதழ்ல வந்திருக்கு. ரீஸன்டாத்தான் எனக்குப் படிக்கக் கிடைச்சது.

உலகின் சக்திவாய்ந்த தலைவர்கள்ல ஒருத்தர்னு வர்ணிக்கப்படற பிடல் காஸ்ட்ரோ இப்படி மணிக்கணக்கா உட்கார்ந்து பேசறார்னா, அந்த இலக்கிய நண்பரோட எழுத்து எவ்ளோ சக்தி வாய்ந்ததா இருக்கும்னு ஒரு செகண்ட் யோசிச்சுப் பாருங்க.

மார்க்யூஸோட சில ஒர்க்ஸ் தமிழ்ல வந்திருக்கு. தேடிப் பிடிச்சி படிச்சுட்டு எனக்கு எழுதுங்க.

* * *

நக்கீரன் கோபாலோட 'சேலஞ்ச்' - சமீபத்துல நான் படிச்சி பிரமிச்ச ஒரு வொர்க். எந்த ஒரு பத்திரிகைக்கும் பத்திரிகை ஆசிரியருக்கும் நடக்காத பல கொடுமைகள் (அரசால!) கோபாலுக்கு நடந்திருக்கு.

எத்தனை பிராப்ளம்ஸ்! எத்தனை மிரட்டல்! எத்தனை டார்ச்சர்! எவ்ளோ இழப்பு!

அத்தனையையும் மீறி 'நக்கீரன்' எழுந்து நின்ன வரலாறுதான் இந்தப் புத்தகம்.

மாத நாவல்களும் மர்மக் கதைகளும் தர முடியாத விறுவிறுப்பையும் சுவாரஸ்யத்தையும் ஒரு நிஜக்கதை தருதுங்கறது ஒரு பக்கம் ஆச்சர்யம்னாலும், இத்தனை வலி தாங்கற சக்தி, ஒரு தனி மனுஷனுக்கு எப்படி வந்ததுங்கற உணர்வும் கூடவே வருது.

போன ஏடிஎம்கே கவர்ன்மெண்ட்டை கோபால் சமாளிச்ச விதத்தைப் படிக்கிற போது, அவர் வீரப்பனை சந்திச்சுட்டு வந்தது ஒரு பெரிய அட்வெஞ்சரே இல்லைன்னு தோணுது.

ஒண்ணு சொல்லணும். கற்பனைக்கும் நிஜத்துக்கும் உள்ள இடைவெளி, நாம நினைச்சிட்டிருக்கறதை விட ரொம்பக் குறைவு. கோபால் இதுல வருணிச்சிருக்கற பல சம்பவங்கள் மேஜிக்கல் ரியலிஸமா இருக்கு. ஆனா எல்லாமே ரியலா நடந்தவை! (ஒவ்வொரு இன்ஸிடன்ட்டுக்கும் ஃபோட்டோ எவிடென்ஸ் தரார்.)

இந்தப் புத்தகத்தை அப்படியே ஃபிலிமாக்க முடியும்னு தோணுது. அது தமிழக அரசியல்ல ஒரு குறிப்பிட்ட காலகட்டம் பத்தின சரியான டாகுமென்டரியாகவும் அமையும்.

— சுமி

**'த.மா.காவுக்குத் தன்னம்பிக்கையில்லை' என்று சென்ற இதழில் பேட்டியளித்த சொக்கருக்கு பதில் கொடுக்கிறார் சட்டமன்ற உறுப்பினரும் த.மா.காவின் பொதுச் செயலாளருமான கே.எஸ். அழகிரி.**

# ஏமாற்றம் இல்லை! தன்னம்பிக்கை!

நண்பர் சொக்கர் த.மா.கா.கார ராகவோ, நடுநிலையாளராகவோ நின்று கருத்துக்களைத் தெரிவித்திருந்தால் நான் மகிழ்ச்சியடைந்திருப்பேன். ஆனால் அவ்வாறில்லாமல் இருந்திருப்பது துர திர்ஷ்டமே!

காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சிகள் மற்றும் மதச்சார்பற்ற கட்சிகளைத் த.மா.கா. தமது நட்பாகக் கருதுகிறது. தமிழகத்தைப் பொறுத்தவரை தி.மு.க., மற்றும் அ.தி. மு.க.வை மதச்சார்பற்ற அரசியல் சக்திகளாகத் த.மா.கா. கருதுகிறது. அதில் இருவேறு கருத்துக்கு இடம் இல்லை. இந்த இரு கட்சிகளும் வெவ்வேறு காலகட்டங்களில் பா.ஜ.க.வோடு சேர்ந்திருந்தாலும் அவற்றின் மதச்சார்பற்ற போக்கைப் பற்றி எங்களுக்கு எந்தச் சந்தேகமும் கிடையாது. தி.மு.க. தற்போது பா.ஜ.கவோடு அரசியல் உறவு வைத்திருக்கிற ஒரே காரணத்தால் தான் அதனுடன் த.மா.கா. இணைந்து அரசியல் பயணம் செய்ய முடியவில்லை என்பதே உண்மை. வேறெந்தக் காரணமும் கிடையாது. மகாத்மா காந்தி வழியில், காங்கிரஸ் பாரம்பரியத்தில் வந்ததால் எந்தக் கட்டத்திலும் எங்களால் பா.ஜ.க.வுடன் நட்பு கொள்ள முடியாது; அல்லது அது இருக்கும் அணியில் இருக்க முடியாது. கம்யூனிஸ்ட் இயக்கங்கள் பா.ஜ.கவைப் பார்க்கும் பார்வை வேறு; நாங்கள் பார்க்கும் பார்வை வேறு. எங்களுக்கு மத நம்பிக்கை உண்டு; மதவெறி கிடையாது. இந்தக் கருத்துடைய வோட்டு வங்கியைக் கொண்டது அ.தி.மு.க. என்பது எங்கள் கருத்து.

தமிழகத்தைப் பொறுத்தவரை தலைவர் மூப்பனாரால் உருவாக்கப்பட்ட மூன்றாவது அணி என்பது ஒரு அற்புதமான முயற்சியாகும். இரண்டு திராவிட இயக்கங்களுக்கும் மாற்றாக ஒரு அரசியல் சக்தியை உருவாக்கும் எங்கள் முயற்சிக்குப் போதுமான ஆதரவு கிட்டவில்லை என்பது உண்மையே!

இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளும் கொள்கைரீதியாக எங்களது இந்த நிலையை ஆதரித்தாலும், "பா.ஜ.க. எதிர்ப்பு வாக்குகள் சிதறிவிடக் கூடாது என்பதிலே அவர்கள் கவனமாக இருந்தார்கள். அதை காங்கிரஸும் ஆதரித்தது. அந்த அடிப்படையில்தான் அ.தி.மு.க. அணியை இடைத் தேர்தலில் நாங்களும் ஆதரித்தோம்.

அடுத்து, மூன்றாவது அணி அல்லது திராவிட இயக்கங்களுக்கு மாற்று என்ற அரசியல் சித்தாந்தத்திற்கு மக்கள் தயாராகும் முன்பே த.மா.கா. தயாராகி விட்டது என்பதுதான் நிஜம். மக்களும் தயாராகும் வரை த.மா.காவும் பொறுமை காக்க வேண்டும் என்பதே நிதர்சனமாகும்.

"நாம் சோர்ந்து போய் விடக்கூடாது; தொடர்ந்து முயற்சிக்க வேண்டும்" என்ற கூற்றை ஏற்றுச் செயல்படுவோமேயானால், தி.மு.க. அல்லது பா.ஜ.க. அணிக்கு சாதகமாகப் போய்விடுகிற அபாயச் சூழல் ஏற்பட்டு விடுகிறது. எங்களைப் பொறுத்தவரை த.மா.கா. அணி வெற்றி பெற வேண்டும். அல்லது அது முடியாமல் போனால் பா.ஜ.க. அங்கம் வகிக்கும் அணி வெற்றி பெறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதனை நாங்கள் செய்யவில்லையென்றால் கடமை தவறியவர்கள் ஆவோம்.

அ.தி.மு.க.வைப் பொறுத்தவரை அது



ஆளும் கட்சியாக இருந்தபோது செய்த தவறுகளை, சட்டமன்றத்திற்கு உள்ளேயும் வெளியேயும் மிகக் கடுமையாகக் கண்டித்துள்ளோம். தமது கடந்த காலத் தவறுகளுக்காக ஜெயலலிதா வருத்தம் தெரிவித்துள்ளார். "பா.ஜ.க.வுடன் மீண்டும் உறவு இல்லையென்று" உறுதி அளித்துள்ளார். இது தவிர 1996 தேர்தலில் மக்களும் தண்டனை கொடுத்து விட்டார்கள். தி.மு.க.வும் கடந்த காலங்களில் ஊழல் குற்றச்சாட்டுக்களால் சிதிலமடைந்த கட்சி என்பதை யாரும் மறுக்க முடியாது.

இதைப் பற்றி நண்பர் சொக்கருக்கு நன்றாகவே தெரியும்.

"தி.மு.க. அரசைக் கலைக்கச் சொன்னார் ஜெயலலிதா. ஆனால் பா.ஜ.க. அரசு அதைக் கேட்கவில்லை. எனவே, பா.ஜ.க. - தி.மு.க. உறவு இயல்பாக ஏற்பட்டது" என்கிறார் சொக்கர்.

உண்மை என்னவென்றால், நீதிமன்ற scrutiny மற்றும் பாராளுமன்றத்தின் இரு அவைகளின் ஒப்புதல் போன்ற கடுமையான பின்பரிசீலனை இருப்பதால் 356 ஐப் பயன்படுத்த யாருமே யோசிப்பார்கள்! ராப்ரி அரசைக் கலைத்து விட்டு பின்னர் வாபஸ் வாங்கினார்களே? எனவே தி.மு.க. பா.ஜ.கவோடு சேர வேறு பல காரணங்களும் இருக்கின்றன. சொக்கருக்கும் அவை தெரியும். இடஒதுக்கீடு, மதச்சார்பற்ற நிலை, இந்தி எதிர்ப்பு, சமுதாயச் சீர்திருத்தம் என்று தி.மு.க. கொள்கைகளுக்கு எதிர்ப்பாக இருக்கும் பா.ஜ.கவோடு அது கொண்டிருக்கும் தோழமை எப்படி இயல்பான ஒன்றாக இருக்கும்?

த.மா.காவும் தலைவர் மூப்பனார் அவர்களும் எடுக்கக்கூடிய எந்த முடிவும் தனி மனிதர்கள் லாபம் கருதி எடுக்கும் முடிவல்ல! கட்சியின் நலன், நாட்டின் நலன் கருதியே எடுக்கப்படும் முடிவாகும். அவருடைய தலைமையின் கீழ், அவரது முடிவுகளை ஏற்று எதிர்காலத்தை நம்பிக்கையுடன் பார்க்கும் உறுதி எங்களுக்கு இருக்கிறது. ஆனால் சொக்கருக்கு அது கேள்விக்குறியானதுதான் வியப்பளிக்கிறது.

சந்திப்பு : **ப்ரியன்**

---

**"அந்த டாக்டர் பயங்கர பீஸ் வாங்குவார் போலிருக்கு...?"**

**"எப்படிச் சொல்றே?"**

**"பீஸ் கொடுக்க லோன் ஏற்பாடு செய்யப்படும்னு கிளினிக்கிலேயே போர்டு போட்டிருக்கே."**

**— சாயம் வெ. ராஜாராமன்**



அமெரிக்க கம்ப்யூட்டர் கம்பெனிகளுக்கு 'சாஃப்ட்வேர்' உருவாக்க H-1B என்ற திட்டத்தின் மூலம் அனுபவசாலிகளை வரவழைக்கப் பத்து ஆண்டுகளுக்கு முன் ஏற்பாடாகியது. அப்போது ஆண்டுக்கு 65,000 பேர் H-1B விசாவில்அமெரிக்காவுக்கு வரலாம் என்று சட்டம் அனுமதித்தது; Y2k பிரச்னையை சமாளிக்க இந்த எண்ணிக்கை 115,000 ஆக்கப்பட்டது. இந்த ஆண்டுக்குப் பின் இது 107,000 குறைக்கப்பட்டு, 2002–ல் மீண்டும் 65,000 ஆக சமன்படுத்தப்படும்.

இதில் பெரும்பாலான சாஃப்ட்வேர் துறையினர் இந்தியாவிலிருந்து வருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்க விவரம்.

இந்தியாவில் சில கன்சல்டன்சி கம்பெனிகள் அமெரிக்க கம்பெனிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, இந்திய சாஃப்ட்வேர் இன்ஜீனியர்களை அமெரிக்காவுக்கு அனுப்புகிறது. யப்பா– இனி செம லைஃப்தான் என்ற 'அமெரிக்கக் கனவு'டன். ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டு அமெரிக்காவில் வந்து இறங்கியதுமே அதிர்ச்சிதான் காத்திருக்கும் – சாஃப்ட்வேர் இன்ஜினீயர் பலருக்கு!

இதோ ஒரு சு(ச)ாட்சி–

மும்பை பத்திரிகை ஒன்றில் ஒரு விளம்பரம் : 'அமெரிக்காவில் கம்ப்யூட்டர் துறையில் வேலை! கைநிறைய பணம்! அமெரிக்கப் பிரஜையாக விருப்பமா? உடனே மனு போடுங்கள்!'

இதைப் பார்த்துவிட்டு ஒருவர் உடனே மனு போட்டார். ஓட்டல் ஒன்றில் 10 நிமிட இன்டர்வியூ நடந்ததுமே 'நியூஜெர்சி'யில் உனக்கு வேலை, விசாவுக்கு நாங்களே ஏற்பாடு செய்கிறோம். இதைவிட வேறென்ன வேண்டும்? என்றனர்.

அமெரிக்காவில் நியூஜெர்சிக்கு வந்தார். ஒரு வீட்டில் மற்ற 14 கம்ப்யூட்டர் புரோக்ராமர்களுடன் இருக்க இடம் தரப்பட்டது. மாதம் 1000 டாலர் சம்பளத்தை எதிர்பார்த்தவருக்கு 500 டாலர் மட்டுமே கையில் கிடைத்தது; 200 டாலர் வீட்டு வாடகை என்று சொல்லப்பட்டது. பாக்கி 300 டாலர் என்ன ஆயிற்று? இதையும் விட பெரிய இடி... இந்தியாவில் H-1B விசாவுக்கு மனு போட்டபோது, தான் கொடுத்த தன்னைப் பற்றிய விவ



ரங்கள் பல மடங்கு அதிகமாக குறிக்கப்பட்டிருந்தது. அமெரிக்கா வந்த பின்தான் அவருக்குத் தெரிந்தது. 'ஐயோ! எனக்கு இதில் எழுதியிருக்கிற சாஃப்ட்வேர் டிரெயினிங் எல்லாம் கிடையாதே' என்று கூவினால் 'உன்னை அமெரிக்கா வரவழைக்க நாங்க தான் கொஞ்சம் பளபளக்க வைச்சோம்; கவலைப் படாதே சகோதரா!' என்று சமாதானப் படுத்தினார்கள்.

நியூஜெர்சியிலிருந்து இன்னொரு இடம். பிறகு அடுத்த இடம். இப்படி மாறி மாறி வந்த பிறகு, அவர் செய்து கொண்டிருந்த பிராஜக்ட் வேலை சட்டென முடிந்தது. அவரை 'பெஞ்ச்' செய்தார்கள் – அதாவது 'கொஞ்ச நாளைக்கு உனக்கு எந்த பிராஜக்ட்டும் இல்லை; வேறு ஏதாவது உருப்படியாக செய்து கொண்டிரு' என்று சொல்லி விட்டார்கள். சொன்னது மட்டுமா? சம்பளத்திலும் கை வைத்தார்கள்



# அமெரிக்காவில் இந்திய அடிமைகள்!

(இந்த நிலையில் சிலருக்கு சம்பளமே நிறுத்தப்படுகிறதாம்!). தன்னுடைய மேலதிகாரியை இதுபற்றிக் கேட்டபோது, 'நீ சும்மா இருக்கியா? இல்லை, இந்தியாவுக்குத் திரும்பிப் போறியா?' என்று பதில் வந்தது. இந்த நிலை பொறுக்க முடியாமல், பல மாதங்கள் கஷ்டப்பட்டு வேறொரு வேலையைத் தேடிக் கொண்டார். புது வேலை என்பதால் விசாவுக்குப் புது மனு போட வேண்டும் என்கிற தலைவலி வேறு. தான் வேலை செய்த முந்தின கம்பெனி மீது 10,000 டாலர் நஷ்டஈடு கேட்டு லேபர் டிபார்ட்மெண்டில் மனு தாக்கல் செய்துள்ளார். இதில் தீர்ப்பு எப்போது வரும் என்பது தெரியவில்லை...!

இதைவிட அதிர்ச்சியான நிகழ்ச்சிகளும் உள்ளன. அமெரிக்காவுக்கு விமானம் ஏறுவதற்கு சில நிமிடங்களுக்கு முன்பாகத்தான் ஒப்பந்தக் கையெழுத்து சடங்கு நடக்கிற தாம்! அமெரிக்கா புறப்படும் அவசரத்தில் ஒப்பந்தத்தை யார் படிப்பார்கள்? அமெரிக்கா வந்தபின் ஒரு கம்பெனியை விட்டு மற்ற கம்பெனிக்கு சுலபமாகத் தாவிவிட முடியாது. அப்படித் தாவினால், முதல் கம்பெனிக்கு உடனடியாக 10,000 டாலராவது நஷ்டஈடு தரவேண்டும்!

சில கம்பெனிகள் வேறுவிதத்திலும் பணம் குவிக்கின்றன. கம்ப்யூட்டர் கம்பெனிகளிடம் மணிக்கு 110 டாலர் என்று வாங்கி விட்டு, அந்த வேலையைச் செய்யும் சாஃப்ட்வேர் இன்ஜினீயருக்கு மணிக்கு 26 டாலரை மட்டுமே சம்பளமாகத் தருகிறதாம்! இது போல செய்வது கன்சல்டன்சிகளுக்கு சர்வசாதாரணம்.

அமெரிக்காவுக்கு H-1B விசாவில் வரும் சாஃப்ட்வேர் துறையினருக்கு மற்ற பிரச்னைகளும் உண்டு. அவற்றில் குறிப்பிடத்தக்கவை :

தினமும் 8 மணி நேர வேலை என்ற கணக்கைத் தாண்டி, 5 நாட்களில் 50 – 55 மணி நேரம் வேலை வாங்கும் கம்பெனிகள் இருக்கின்றன; 'நாங்கள் ஏன் அதிக நேரம் வேலை செய்ய வேண்டும்?' என்று கேட்டால் 'அப்படின்னா இந்தியா திரும்புகிறாயா?' என்ற பழைய கேள்வியே பதிலாக வருகிறதாம். கம்பெனிகளில் வேலை செய்யும் அமெரிக்கர்களுக்கு வேறு விதமான வேலை ஒப்பந்தம் இருப்பதாகவும் தெரிகிறது.

ஒரு குறிப்பிட்ட கன்சல்டன்சியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு அமெரிக்கா வரும் திருமணமான பெண்கள் குழந்தை பெற்றுக் கொள்வதை அந்தக் கன்சல்டன்ஸி விரும்பாது. குழந்தை பெற்றுக் கொண்டால் பிரசவ செலவுகளைத் தராது என்பதும் சில தம்பதிகளின் குடும்ப வாழ்வை பாதிக்கிறது.

வெளிநாட்டில் கன்சல்டன்சிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு அமெரிக்காவுக்கு ஆசையுடன் வரும் ஆயிரக்கணக்கானவர்கள் இப்படி 'அடிமைகள்' போல ஆவார்கள் என்று H-1B விசா முறையை ஆதரித்தவர்கள் நினைத்துக் கூடப் பார்க்கவில்லையாம்.

— வாஷிங்டன் ஸ்ரீதர்

ஆதாரம் : 'பால்டிமோர் சன்' செய்தித்தாள்



# பதுக்கலை எதிர்த்த பெண் புலி!

இரண்டாம் உலகப் போர் முடியும் நிலை. உணவு மற்றும் மண்ணெண்ணெய் போன்ற அத்தியாவசியப் பொருட்கள் போர் முனைக்குத் திருப்பி விடப்பட்டதால் நாடு முழுவதும் ரேஷன் கடைகளில் 'நோ ஸ்டாக்' போர்டுகள் தொங்கிக் கொண்டிருந்தன. தட்டுப்பாடு நிலையை பயன்படுத்திக் கொண்டு சில வணிகர்கள் உணவுப் பொருட்களைப் பதுக்கி வைத்துக் கொள்ளை லாபம் அடித்தனர். இந்த அட்டூழியத்தைக் கண்டு பொங்கி எழுந்தார் அந்தக் கல்லூரி மாணவி! ஐக்கிய வங்காள மாணவர் அமைப்பின் தலைவியான அந்த மாணவியின் பின்னால் மாணவர் சமுதாயம் அணிவகுத்தது! கல்கத்தா நகரில் தெருத் தெருவாகப் போய் எங்கெங்கே உணவுப் பொருட்கள் பதுக்கப்பட்டிருக்கிறதோ அவற்றை வெளிக் கொணர்ந்து ரேஷன் விலைக்கு மக்களிடம் விற்றார்கள் மாணவர்கள்.

தடுத்த போலீஸாரிடம் "மக்கள் கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது. உங்களால் முடிந்ததைச் செய்து கொள்ளுங்கள்'' என்று எதிரடி கொடுத்தார் அந்தத் தலைவி. ஏராளமான வழக்குகள் அவர் மீது பதிவு செய்யப்பட்டன.

இந்த வீரம் செறிந்த சம்பவத்தின் கதாநாயகிதான் சமீபத்தில் மரணமடைந்த இந்திய கம்யூனிஸ்ட் தலைவரும், எம்.பியுமான கீதா முகர்ஜி!

"அந்தக் கலவரங்கள் முடிந்த சில மாதங்களுக்குள் குண்டூரில் அகில இந்திய மாணவர் மாநாடு ஒன்று நடந்தது. கீதா முகர்ஜியின் தலைமையில் ஆயிரம் மாணவ, மாணவிகள் வங்காளத்திலிருந்து வந்திருந்தார்கள். நான் தமிழ்நாட்டிலிருந்து சென்றிருந்தேன். குண்டூர் ரயில்வே ஸ்டேஷனில் கீதாமுகர்ஜிக்கு கொடுக்கப்பட்ட வரவேற்பு இன்றும் செழுமையாக என் நினைவில் இருக்கிறது'' என்கிறார் ஜனசக்தி பத்திரிகையின் ஆசிரியர் ஏ.எம். கோபு.

கீதா முகர்ஜியின் குடும்பமே விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட குடும்பம். பெரிய ஜமீந்தார் குடும்பம் என்றாலும், ஏழை மக்களிடம் அளவு கடந்த பாசம். குடும்பச் சொத்தில் தனக்கு வந்த நிலங்களை, விவசாயிகளுக்கே கொடுத்து விட்டவர்.

தனது வாழ்நாளில் கிட்டத்தட்ட ஐந்து வருட காலம் சிறையில் இருந்திருக்கிறார் கீதா. ஒரே பாராளுமன்றத் தொகுதியிலிருந்து எட்டு முறை தேர்ந்தெடுக்கப்பட்டவர். மத்திய அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் தாய்வழி தாத்தாவின் அண்ணன் மகள்தான் கீதா!

கணவர் பிஸ்வனாத் முகர்ஜியும் அரசியல்வாதிதான். பின்னாட்களில் அமைச்சராகவும் இருந்தவர். கணவன்-மனைவி இருவருமே அரசியலில் இருந்ததாலும் மக்கள் சேவையை முதன்மையாகக் கருதியதாலும் குழந்தைகள் வேண்டாம் என்று முடிவெடுத்து விட்டார்கள்.

**1996**ல் ஐக்கிய முன்னணி அரசு பதவிக்கு வந்த போது இந்திய கம்யூனிஸ்ட் சார்பில் யாரை அமைச்சராகப் போடலாம் என்று விவாதிக்கப்பட்டபோது கட்சி ஒருமித்து சிபாரிசு செய்த பெயர்: கீதா முகர்ஜி. ஆனால், அமைச்சர் பதவியை மறுத்து விட்டார் அவர். "என்றைக்குப் பெண்களுக்கு பாராளுமன்றத்தில் 33 சதவீதம் இட ஒதுக்கீடு அமுலுக்கு வருகிறதோ அதன் பின்னரே இது போன்ற வாய்ப்புகளை ஏற்பேன்'' என்று சொல்லி விட்டார் கீதா!

— ஸ்ரீநிவாசன்

# சுதந்திரம்



'குலாம்' என்ற ஹிந்தி படத்தின் ரீ-மேக் என்பதால் கதை - திரைக்கதை குடைச்சலிலிருந்து டைரக்டருக்கு விடுதலை. கதைப்படி ஹீரோ, ஆக்ஷன்-பேஸ்டு ஆசாமி. அர்நால்டு ஸ்வாஷ்நேகராக 'யாமிருக்க பயமேன்?' என்று டைரக்டரின் காலை நேரக் கனவில் வந்து, தன்னுடைய உடற்கட்டை அர்ஜுன் எக்ஸ்போஸ் செய்ய, உருவாகி விட்டது 'சுதந்திரம்'.

கட்டடத் தொழிலுக்கு முதல் போடப் பணம் இல்லாததால் தாதாவாக மாறி பண வசூல் செய்து, போதிய பணம் சேர்ந்தவுடன் முழு நேர பிஸினஸ்மேனாக மாறி விடுவாராம் வில்லன். டைரக்டர் ஸார்(களே) தொழிலதிபராக மாறிவிட்ட பிறகு, வொர்க்கிங்-காபிடல்-ஷார்ட்டேஜ் வரும்போதெல்லாம் தாற்காலிக தாதாவாக வில்லன் மாறிக் கொண்டே இருப்பாராக்கும்!

ராணி முகர்ஜி போட்டுக் கொண்ட ஆடைகளையே வெள்ளாவியில் வைத்து ரம்பாவுக்குப் போட்டு விட்டிருக்க வேண்டாம். உடல்வாகு- உடைப் பொருத்தம் பூஜ்யம் பூஜ்யம் பூஜ்யம்!

ரயிலின் வேகத்தோடு போட்டி போட்டுக் கொண்டு தண்டவாளத்தில் ஓடும் ஸீனில் அர்ஜுன் 'டூப்'பை யூஸ் பண்ணியது போல் தெரியவில்லை. நம்முடைய 'கெஸ்' கரெக்டாக இருக்கும் பட்சத்தில், அர்ஜுன் எடுத்திருக்கும் 'ரிஸ்க்'குக்கு ஒரு சல்யூட்!

பாக்ஸிங் போட்டியில், டிராக்-ஸூட்டில் பொன்னம்பலத்தை பாக்ஸ் பண்ண விட்டிருப்பது எரிச்சலாக இருக்கிறது.

'மச்சம் எபெக்ட்'க்காக ஸ்டிக்கர் பொட்டை ஒட்டிக் கொள்ளும் ஸ்மால்-ஸ்கேல் தாதாவாக விவேக்! ஆட்டோ டிரைவர் 'போட்டுக் குடு ஸார், போட்டுக் குடு ஸார்' என்று தொல்லைப்படுத்த, "போட்டுக் குடுக்கணும், அவ்வளவு தானே?" என்று அவன் மனைவிக்கும் 'ஸோ-அண்டு-ஸோவிற்கும் கனெக்ஷன்' என்று போட்டுக் கொடுக்க, டிரைவர் 'ஷாக்'காகி சிலையாக நின்றுவிட, கதையின் நிஜ தாதாவை ஓவர்டேக் செய்து விடுகிறார் விவேக்!

மிகப் பெரியதொரு வெற்றிக்குப் பின் மிகப் பெரிய சரிவு என்பது நீண்ட நெடுநாட்களாக அர்ஜுனைத் தொடரும் குட்டிப் பிசாசு. முதல்வனுக்குப் பிறகும் அது தொடர்ந்திருக்கிறது.

— கிருஷ்ணா சிதம்பரம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)



# இரத்த அழுத்தம், கொலஸ்ட்ரால், மாரடைப்பு, இருதய வால்வு குறைபாடு, இருதய ஓட்டைகள் போன்றன வராமல் தடுக்க - தெய்வீக மூலிகை மருத்துவம்



இதயம் என்பது பிறப்பிலிருந்து இறப்பு வரை இடைவிடாது மற்ற உறுப்புகளுக்கு இரத்தத்தை பாய்ச்சும் ஒரு பம்ப் Pump) ஆகும். இதயம் வேலை செய்வதற்கு, அதற்கும் இரத்தம் தேவைப்படுகிறது. இவ்வாறான இதயத்தில் நம்முடைய வறான வாழ்க்கை முறையால் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை இதய வால்வுகள், ASD, VSD என்று சொல்லக்கூடிய தய அறைகளில் ஓட்டைகள், இரத்தக் குழாய்களில் அடைப்பு போன்ற குறைபாடுகளால் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். வ்வாறான நோய்கள் ஏன் ஏற்படுகின்றன என்பது பற்றி நாம் தெரிந்துக் கொண்டு, அதற்குத் தகுந்தாற்போல், எவ்வித ன் விளைவுகளும் இல்லாத தெய்வீக மூலிகை மருந்துகள், இயற்கை உணவுகள், வாழ்க்கை சீரமைப்பு, மூலம் குணம் பறலாம்.

**இதய நோய்க்கான காரணங்கள்**:- கர்ப்ப காலத்தில் தாய் உட்கொள்ளும் வீரிய மிக்க இரசாயன மருந்துகள், க்தியான உணவுகள் கிடைக்காமை, அடிக்கடி நோய்வாய்ப்படுதல், x - ray எடுத்தல் போன்ற காரணங்களால், ழந்தைகளுக்கான – பிறவி குறைபாடுகளும், புகைத்தல், மது வகைகள், B.P., Sugar போன்றவற்றால் இதய தசைகளில் காளாறுகளும், அதிக எடை, தொப்பை, Tension & Stress உள்ளவர்கள், வாழ்க்கையில் நிதானம் அற்றவர்கள், சோம்பேறிகள், அதிகம் கோபப்படுபவர்கள், கொழுப்பு சத்துள்ள உணவுகள் உட்கொள்பவர்களுக்கு மற்றும் Lipo Protein 'A' என்கின்ற காழுப்புச்சத்து ஜீன்களினால் மாரடைப்பும், எதிர்ப்பு சக்தி இல்லாத காரணத்தாலும், சக்தியான உணவுகள் கிடைக்காததாலும் ட்ரெப்டோகாக்கஸ் என்னும் கிருமிகளால் இதய வால்வுகளும் – பாதிக்கப்படுகின்றன.

**இதய நோய்க்கான அறிகுறிகள்**:- நெஞ்சுவலி, மூச்சிரைப்பு, படபடப்பு, வியர்த்தல் போன்றவை இதய நாயின் பொதுவான அறிகுறிகள் என்றாலும், அவை பாதிப்புக்குள்ளான பகுதியை பொறுத்து அதன் அறிகுறிகள் தெரிய ஆரம்பிக்கும். மூச்சுத்திணறல், உடலெல்லாம் நீல நிறமாக மாறுதல் போன்றவை பிறவி குறைபாடுகளிலும், மூட்டுக்களில்வீக்கம், ட்டுவலி, கை, கால் வலி, காய்ச்சல், வறட்டு இருமல் போன்ற அறிகுறிகள் இதய வால்வுகள் பாதிக்கப்படும் போதும், மார்பு பகுதியில் எரிச்சல், நெஞ்சுவலி, வியர்த்தல், நெஞ்சு படபடப்பு, இடது தோள்பட்டையில் வலி, மூச்சுத் திணறல், உடல்சோர்வு, திடீர் மயக்கம், நாடி துடிப்பு மற்றும் இரத்த அழுத்தம் குறைதல் போன்ற அறிகுறிகள் மாரடைப்பு ஏற்படும்போது காணப்படும்.

**இதய நோய்க்கான தெய்வீக மூலிகைகள்**:- வேப்பிலை, வில்வம், துளசி, அத்தியிலை, அருகம்புல், வெந்தயம், நெல்லிக்காய், கடுக்காய், ஆவாரம்பூ, தூதுவளை, தும்பை, செம்பருத்தி, வெண்தாமரை, மருதம்பட்டை போன்றவைகள் பொடி செய்து, பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒருபாட்டலில் வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து ஒரு ஸ்பூன்தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினம் காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் சுமார் மூன்று மாதம் முதல், ஆறு மாதம் வரை உட்கொள்ளவும். இந்த மூலிகைகளில் உள்ள சக்திகள் இதயம் நன்றாக சுருங்கி விரியவும், இதயத்தை தொற்று நோய்களில் இருந்து காப்பாற்றவும் உதவுகின்றன.

**இதய நோய்க்கான உணவு முறைகள்**:- இந்நோயாளிகள் தினம் காலை அல்லது இரவு ஒரு வேளை பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கறிகள் தேவையான அளவு பழ ஜூஸ்கள், Vegetable Salads, Fruits Salads போன்றனவாக உட்கொள்ளவேண்டும். மற்ற இரண்டு நேரம் வழக்கமான சமைத்த சைவ உணவுகளை மட்டும் உட்கொள்ள வேண்டும். சமைத்த உணவுகளிலும் வறுத்த, பொறித்த உணவுகளையும், ஊறுகாய், அப்பளம், வனஸ்பதி, நெய், Ice Cream, சாக்லேட், தயிர் போன்றவைகள் தவிர்க்க வேண்டும், சமைத்த உணவுகளையும், சமைக்காத உணவுகளையும் சேர்த்துண்ணக் கூடாது. 2 அல்லது 3 மணி நேர இடைவெளிகளில் தான் உட்கொள்ளவேண்டும்.

**உடற்பயிற்சிகள்**:- இந்நோயாளிகள் தினம் காலை மாலை 20–நிமிடம் இயன்ற வரை எளிய உடற்பயிற்சிகள் செய்தல் வேண்டும். நடத்தல், கை கால் விரல்களை நீட்டிமடக்குதல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், முடிந்தால் சைக்கிள் ஓட்டுதல், மூச்சுப்பயிற்சிகள் போன்றன செய்தல் வேண்டும்.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.M.குருபரன், Dr.M.சபாபதி, & Dr.M.சிவசக்தி, S/o.Dr.C.K.மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638

**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589**

**9-ந் தேதி - பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிராட்வே, கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374**

**18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆: 5717126, 5723651**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

# ஹை-டெக் இசை!

"காத்து எங்கெல்லாம் போக முடியாதோ அங்கெல்லாம் கம்ப்யூட்டர் வந்துட்ட மாதிரிதான் சினிமா இசையிலயும் நுழைஞ்சது... ஆனா கீ போர்ட் இசைதான் இங்க எல்லாம்ங்கிற மாயை எப்படியோ பரவிடுச்சி. இன்னைக்கு மட்டுமில்ல, இன்னும் எத்தனை யுகமானாலும், லைவ் வாசிப்புல கிடைக்கிற ஜீவனும், மனிதக் குரல்ல கிடைக்கிற நேர்த்தியும் வேற எதுலயும் கிடைக்காதுங்கிறது என்னோட கருத்து... அதேநேரம் கம்ப்யூட்டர், கீ போர்ட் மாதிரியான ஹை-டெக் இசை இருக்கு. புதுமைகள் பண்ண முடியுதுங்கிறதையும் மறுக்கிறதுக்கில்லே" என்கிறார் திரைப்பட இசையமைப்பாளர் ரமணி பரத்வாஜ். ஹைடெக் இசையின் குறுக்குவெட்டுத் தோற்றத்தை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்:

சினிமா இசையைப் பொறுத்த வரைக்கும் கம்ப்யூட்டர் தொழில் நுட்பம் இரண்டு வகையில பயன்படுது... ஒண்ணு, கீபோர்ட் மூலமா நாம க்ரியேட் செய்து உருவாக்குற பலவிதமான ஒலிகள். இதைத்தான் நாங்க 'பிட்ஸ் அண்ட் பைட்ஸ்'ன்னு சொல்றோம். அடுத்து, உருவாக்கின இசையை ஒலிப் பதிவு செய்யுற ரெக்கார்டிங் மீடியம்.

இப்போ ஒரு பாட்டுல வயலின், பியானோ, புல்லாங்குழல்.... தபலா இப்படி பல இசைக் கருவிகளைப் பயன்படுத்துவோம்... இந்த மாதிரி இசைக் கருவிகளோட 'ஃபினாட் சவுண்ட்' கீ போர்டுல இருக்கிற, சிப்ல இருக்கு... இது எலக்ட்ரானிக் சமாசாரம்னு வெச்சுக்கிட்டாலும் மெமரி, சிப் இதெல்லாம் கம்ப்யூட்டர்ங்கிற கான்செப்ட் லேர்ந்து எடுத்துக்கிட்ட விஷயம்தான்.

ஆரம்ப காலக் கீ போர்டுல ஒவ்வொரு வாத்தியத்துக்கும் ஒரு நம்பர் இருக்கும். நம்பரைப் போட்டு வாசிக்கலாம். ஆனா இந்த ஃபீட் பண்ணப்பட்ட வாத்திய ஒலிகள் ரொம்ப செயற்கையா இருந்தது. அப்புறம் 'சிந்தசைசர்'ங்கிற அடுத்தக்கட்ட 'சிப்' வந்தது. இரண்டு வெவ்வேற கருவிகளோட ஒலியைக் கலந்து புது ஒலியைக் கொண்டு வர, இந்த சிஸ்டம் பயன்பட்டுச்சு. பழைய இசைக் கருவிகளைக் கேட்டுக் கேட்டு பழக்கப்பட்ட ஜனங்களுக்கு, சிந்தசைஸ் செய்த சவுண்ட் புதுசா தெரிஞ்சது. உடனே ஏத்துக்கிட்டாங்க. இந்த கீ போர்ட் இசையில நம்மைப் பொறுத்தவரைக்கும் ராஜஸ்தான் காரங்கதான் முன்னோடி. நிறைய வசதிகள், சீக்கிரம் வேலையை முடிக்கிறது, நிறைய புதுமைகள் செய்ய முடிஞ்சது. இதெல்லாம் கீ போர்ட் கல்ச்சர் வேகமா பரவ காரணமாச்சு... தொடக்கத்துல

இசைக் கலைஞர்களோட வேலை வாய்ப்பை இது பாதிச்சதுகூட உண்மைதான்... ஆனா அந்த நோக்கத்துல இ போர்ட் வரலை!

இ போர்ட்ல மிகப் பெரிய மாற்றம் 1985க்கு பிறகு வந்ததுதான். குறிப்பா 'சீக்வன் சரை'ச் சொல்லணும்... ஒரு பாட்டுக்கு பின்னணியா வர்ற முழு இசையையும் இதுல ப்ரோகிராம் செய்யலாம். இப்போ எலெக்ட்ரானிக் டைப்ரைட்டர் இருக்கு. ஒரு லெட்டரை டைப் பண்றோம். அப்புறம் எழுத்துப் பிழை ஏதாவது இருக்கான்னு பார்த்து செக் பண்ணி, திருத்திட்டு பட்டனைத் தட்டினா - முழு லெட்டரும் வெளிய வந்துடும்.

அதே மாதிரி வாத்தியங்களை வாசிக்கும் போது இந்த இடத்துல பர்பெக்ஷன் வரல, தப்பா வாசிச்சிட்டாங்கன்னா அந்த இடத்துல ஈஸியா சரி செய்துடலாம்... இதுக்கு 'சீக்வென் சர்ல உள்ள 'மல்டி டிராக் ரெக்கார்டிங்' பெரிய வரப் பிரசாதம். இந்த வசதி மூலமா எந்தெந்த இடத்துல லைவ் வாசிக்க போறோமோ... அந்த இடத்தை காலியா விட்டுட்டு ப்ரோகிராம் செய்துடலாம். அப்புறம் காலி இடத்தை கேப்பை ஃபில் பண்ணிடலாம்.

அடுத்து 'சேம்ப்லர்'. இது நேரடியான கம்ப்யூட்டர் தொழில் நுட்பம். ஜப்பானியர்களோட உழைப்பு. வெவ்வேறு ஒலி அளவுகள்ல - அதாவது பிட்ஸ்ன்னு சொல்றோம் இல்லியா... இசை ஒலிகள் ஹார்டு டிஸ்க்ல பதிவு செய்யப்பட்டிருக்கு. இதை லைவ்வா வாசிக்க வெச்சு அவங்க பதிவு செஞ்சு, அப்புறம் ஹார்டு டிஸ்க்ல ஃபீட் செய்துருக்காங்க. வெவ்வேற பிட்ஸ்ல இருந்தாலும் ஒலி பிளாட்டாதான் இருக்கும். அதை நம்மோட க்ரியேட்டிவிட்டிக்கு தகுந்த மாதிரி நமக்குத் தேவையான மாதிரி இதுல மாடுலேட் செய்துக்கலாம். பிரஸ்காரங்க ஒரு மேட்டருக்குத் தேவையான எழுத்துக்களை தனித் தனியா எடுத்து அச்சுக் கோத்து அதை அழகு படுத்தி ஒரு முழுமையான தகவலா மாத்துற மாதிரிதான் இதுவும்! சேம்ப்லரைப் பயன்படுத்தும்போது, ஒரு இசைக் கலைஞனோட க்ரியேட்டிவிட்டிக்கு வேலை வந்துடுது.

என்னைப் பொறுத்தவரைக்கும் சினிமா இசை ஒரு மெக்கானிக்கல் விஷயமில்லை... ஒரு படத்துல வர்ற ஒவ்வொரு பாட்டும் ஒரு பாத்திரத்தோட வெளிப்பாடு, எக்ஸ்பிரஷன்... அதுல உணர்வுதான் அடிப்படை. அதுக்கு லைவ் வாசிப்புதான் இதயம்! இதுல ஊறுகாய் மாதிரி இல்ல, கறிகாய் மாதிரி கம்ப்யூட்டர் இசையைப் பயன்படுத்தலாம்... கம்ப்யூட்டர் இசைய முதல்முதல்ல பயன்படுத்திய ஐரோப்பாகாரங்க இப்போ லைவ் பக்கம் வந்துட்டாங்க... நான் லைவ் கலைஞர்களையும் அதிகம் பயன்படுத்துறேன். இபோர்ட் விஷயங்களைக்கூட குறைச்சு பயன்படுத்தறேன்.

அமர்க்களம் படத்துல 'உன்னோடு வாழாதவாழ்வென்ன வாழ்வோ' பாட்டுல, தொண்ணூறு அஞ்சு சதவீதம் லைவ்தான். அதே படத்துல அஜித் ரொம்ப கோபமா பாடற '... கேட்டேன்' பாடல் முழுக்க ஹை-டெக்தான். கம்ப்யூட்டர்ல இருக்கற மெலடியான பீட்கள்தான் என்னோட மனசுக்குப் புடிக்குது. எலக்ட்ரானிக் இசையில இருக்கிற குறைகள் தெரியாத மாதிரி ஒரு இசை அமைப்பாளர் அதை பயன்படுத்தணும்.

அடுத்து, ரெக்கார்டிங் துறையில கம்ப்யூட்டர் ஒரு காட்ஃபாதர் மாதிரி பெரிய சக்தியா மாறிடுச்சி. முன்பெல்லாம் 'மோனோலாக்'ங்கிற ஒரே டேப்தான்...மேக்னெட்டிக டேப்புல ரெக்கார்ட் செஞ்சு, தப்பு வந்துட்டா வெட்டி ஒட்டி பெரிய தலைவலி. ரொம்ப அனுபவம் உள்ள நிபுணர்கள்தான் அந்த வேலையைச் செய்ய முடிஞ்சுது. இப்போ எல்லாம் டிஜிட்டல் ரெக்கார்டிங்தான்... ரொம்பத் துல்லியமா எல்லா ஒலிகளையும் பதிவு செய்ய முடியும். எத்தனை டிராக் தேவையோ செய்து, ஒன்றாக இணைக்கக் கலாம். ரொம்ப சீக்கிரம் வேலை நடக்குது.

— ஜெயந்தன்



"லேடீஸ் குடையை இரவல் வாங்கிட்டுப் போய், ஜென்ட்ஸ் குடையைத் திருப்பிக் கொடுத்தால் எப்படி?"

"இதுவும் உங்க குடைதான். போன மழைக்கு இரவல் வாங்கினது..."

— பர்வதவர்த்தினி




# ஏமாந்த கலைமாமணிகள்!

● வருடத்தில் ஒருமுறை கலைமாமணி விருது வழங்கப்படும்போதுதான் தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம் ஒன்று இருப்பது நமது கவனத்துக்கு வரும். இப்போது அந்த மன்றத்தில் சுசமுசா. கடந்த ஒரு வருடமாக மன்ற செயற்குழுக் கூடவில்லையாம். "கூட்டினால் உறுப்பினர்களுக்குப் பயணப்படி தரக்கூட பணம் இல்லை. அதனால்தான் கூட்டவில்லை" என்கிறார்களாம். சினிமாவில் பிஸியாக இருக்கும் தலைவரும், தேர்தலில் தோற்றுப் போன நடிகர் - செயலாளரும் மன்றத்தின் பக்கம் எட்டிப் பார்ப்பதில்லையாம். இந்த நிலையில் 1991 - 96ம் ஆண்டுகளில் நடைபெற்ற ஊழல்கள் - முறைகேடுகள் ஆகியவை பற்றி விசாரிக்கவிடாமல் ஒரு சக்தி தடை போடுகிறதாம். குறிப்பாக, கலைமாமணிகளுக்கு ஐந்து பவுன் என்று கணக்கெழுதி இரண்டு பவுன் தங்கச் சங்கிலி போட்ட விவரமும், தஞ்சை உலகத் தமிழ் மாநாட்டின்போது போட்ட நாடகங்களுக்குக் கொடுக்கப்பட்ட பண விவகாரத்திலும் பெரிய அளவு ஊழல் நடந்துள்ளதாகவும் கிசுகிசுக்கப்படுகிறது.

● சி.எம்.டி.ஏ விவகாரங்களுக்கென்று தனிப் பக்கமே ஒதுக்கலாம் போலிருக்கிறது. அது ஒரு காமதேனு நிறுவனம். ஆதலால் சில பதவிகளுக்குக் கடும் போட்டி. காலியாக உள்ள உறுப்பினர் - செயலாளர் பதவிக்கு இப்போது முதல்வர் வரை முட்டி மோதுகிறார்கள். எப்படியெல்லாம் பணம் பண்ணுகிறார்கள்! இதோ ஒரு சாம்பிள்:

சென்னை - எழும்பூர் கென்னட் லேன். 24 அடி குறுகிய சந்து. பொதுவாக மூன்றடுக்கு மாடி கட்டுவதானால் தெருவின் அகலம் 33 அடியாக இருக்க வேண்டும். ஆனால் அப்பாவிகளான பொதுமக்களிடம் வேண்டுமானாலும் சட்டத்தைக் காட்டி சி.எம்.டி.ஏ முரண்டு பிடிக்கலாம். கனமான பர்ஸ் உடையவர்களிடம் அது சாத்தியப்படுமா? "மிச்ச சொச்சமுள்ள ஒன்பது அடி அகலத்தை மனுதாரர் தன் வளாகத்திலேயே தெருவை ஒட்டி விட ஒப்புக்கொண்டு இருப்பதால், பிளானை அங்கீகரிக்கலாம்" என்று எழுதி ஒப்புதல் கொடுத்து விட்டார்களாம். மிச்ச இடம் எதிர்காலத்திலும் தனியார் ஆளுகையின் கீழ்தான் இருக்கப் போகிறது என்பது சி.எம்.டி.ஏ.வுக்குத் தெரியாதாம்! நம்புங்கள்!

● "நெல்லிக்குப்பம் இடைத்தேர்தலில் தி.மு.க. வென்றதற்கு பா.ம.க.வுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்" என்கிறார்கள் பா.ம.க பிரமுகர்கள். கிராமம், கிராமமாகச் சென்று டாக்டர் பிரசாரம் செய்ததால் இது சாத்தியமாயிற்றாம். இந்த உற்சாகத்தில் அடுத்து வரும் மாதங்களில் மாவட்ட வாரியாக மாநாடுகள் போட இருக்கிறதாம் பா.ம.க. இறுதியாக சட்டமன்றத் தேர்தலையொட்டி 2001ல் மதுரையில் பிரம்மாண்டமான மாநில மாநாடு நடத்த இருக்கிறதாம். "வட மாவட்டங்களில் மட்டுமல்ல, தெற்குப் பக்கமும் எங்களுக்குச் செல்வாக்கு உண்டு என்று நிரூபிக்கும் அந்த மாநாடு. யார் மீண்டும் ஆட்சிக்கு வந்தாலும் எங்களுக்கும் பங்கு கொடுக்க வேண்டிய கட்டாயம் உருவாகும்" என்று அடித்துச் சொன்னார் பிரமுகர் ஒருவர். இதற்கிடையில் அடுத்த சட்டமன்றத் தேர்தலுக்குள் பா.ம.கவை அ.தி.மு.க. அணிக்குக் கொண்டு வரும் அஸைன்மெண்டை தினகரனுக்குக் கொடுத்திருக்கிறாராம் அம்மா!

— சஞ்சயன்

'ஜீன்ஸ்' திரைப்படத்தில் வரும் எலும்புக்கூடு டான்ஸிலிருந்து, 'முதல்வன்' படத்தில் வரும் 'டிராபிக் ஜாம்' வரையிலான ஸ்பெஷல் எபெக்ட்ஸ் மாயாஜாலங்களுக்குக் காரணம் நம்மூர் பென்டஃபோர் நிறுவனம் தான்!

"லொகேஷன் தேவையில்லாத, நடிகர்களின் கால்ஷீட்டுக்குக் கால்கடுக்க நிற்கும் அவசியமில்லாத, செட்டுகளுக்குக் கூட 'டாடா' சொல்கிற காலத்தை பென்டஃபோர் விரைவிலேயே உருவாக்கும் என்கிறார்கள் இங்கு பணிபுரியும் மல்டி மீடியா இன்ஜினியர்கள்.

சென்னை அருகிலுள்ள கேளம்பாக்கத்தில் பரந்து விரிந்து அமைந்திருக்கிறது பென்டஃபோர் சாப்ட்வேர் டெவலப்மெண்ட் பார்க் நிறுவனம். முதலீடு 300 கோடி ரூபாய்; ஆயிரம் கம்ப்யூட்டர்களில் 1200 பேர் பணியாற்ற 24 மணி நேரமும் இயங்குகிறது பென்டஃபோர் பார்க். பணியாளர்களுக்கான சகல வசதிகளுடன் கூடிய ஒரு மினி நகரமாகவே இருக்கிறது.

* முதல்வன்: டிராஃபிக் ஜாம் காட்சி

ஆரம்பத்தில் (1992-ம் ஆண்டு) உலகின் நம்பர் ஒன் கம்ப்யூட்டர் கம்பெனியான ஐபிஎம்மின் (IBM) அதிகாரபூர்வமான ட்ரெய்னிங் சென்டராகத்தான் செயல்பட்டது பென்டஃபோர். 96-ல் சிலிக்கான் கிராபிக்ஸ் யுஎஸ்ஏ என்ற நிறுவனத்தின் துணையோடு மல்டி மீடியாவுக்குள் குதிக்க... இன்று கனவுத் தொழிற்சாலையின் தவிர்க்க முடியாதச் சக்தியாகி விட்டது இந்நிறுவனம்.

இந்திய பங்குச் சந்தையில் இடம்பெற்ற முதல் சாஃப்ட்வேர் நிறுவனம் இது. இனி அமெரிக்க பங்குச் சந்தையிலும் இதன் பங்குகள் விலைக்கு வரும்! ஜப்பானிய சுமிடோமோ நிறுவனம் தனது உலக வியாபாரம் மொத்தத்தையும் கம்ப்யூட்டர்மயமாக்கும் பொறுப்பை பென்டஃபோரிடம் விட்டுள்ளது.



* மருதநாயகம்

செயல்பாட்டின் அடிப்படையில் இம்மையத்தை மூன்றாகப் பிரிக்கிறார்கள்.

1. பிஸினஸ் சாஃப்ட்வேர் டெவலப்

# சாஃப்ட்வேர்

# சோலை!

• பென்டஃபோர்

மென்ட். இது வங்கி, தொழிற்சாலை, ரயில்வே, துறைமுகம், டெலிகாம் போன்றவற்றுக்கு தேவையான சாஃப்ட்வேரை தயாரிக்கிறது!

தூத்துக்குடி, கொச்சின் துறைமுகங்களின் செயல்பாடு பென்டஃபோர் தயாரித்த சாஃப்ட்வேரில்தான் நடக்கிறது!

ஈ.ஆர்.பி. (Enterprise Resource Planning) எனப்படும் தொழில் நிர்வாகத் திட்டமிடலை ஒரு கலையாக்கி, கச்சிதப்படுத்தி சாஃப்ட்டவேர் வடிவத்தில் தருவதில் SAP என்ற அயல்நாட்டு நிறுவனத்தார் கில்லாடிகள். SAP உடன் கைகோத்து இந்த ஈஆர்பி ரக சாஃப்ட்வேர்களை இந்தியத் தேவைக்கு ஏற்ப உருவாக்கும் பணியில் கொடிகட்டிப் பறக்கிறது பென்டஃபோர்.

2. மல்டிமீடியா/டிஜிட்டல் இமேஜிங் சென்டர். ஸ்பெஷல் எபெக்ட்கள் கார்ட்டூன், அனிமேஷன், 3-டி படங்கள். இதன் மூலம் தயாரிக்கப்படுகின்றன. 2டி., 3டி அனிமேஷன்களுக்கென்று தனித்தனி ஸ்டுடியோக்கள் உள்ளன. டாம் அண்ட் ஜெர்ரி போன்ற புகழ்பெற்ற கார்ட்டூன்களைத் தயாரித்த வால்ட் டிஸ்னி நிறுவனம் Key Framed Technique எனப்படும் 2டி அனிமேஷன்களைத்தான் பயன்படுத்தியது. இதற்கு ஆகும் நேரம்தான் எரிச்சல் தரும் விஷயம்! ஒரு நொடியில் தெரியும் படத்திற்கு 24 பிரேம்கள் வரைந்து குவிக்க வேண்டியிருக்கும்! இந்த முறையில் முழு நீள கார்ட்டூன் படம் எடுப்பதற்கு வருடக்கணக்காகும்! (உதாரணத்திற்கு பயன் கிங்)

இதை உடைத்தெறிய Motion Capture என்ற டெக்னிக்கை உருவாக்கியது பென்டஃபோர். இதில் நிஜ மனிதர்களின் அசைவுகள், (சிரிப்பது, ஆடுவது உட்பட) மார்க்கர்கள் எனப்படும் ஒளியைப் பிரதிபலிக்கும்



பொருட்களின் உதவியுடன் படம் பிடிக்கப்படுகிறது. தலையில் ஆரம்பித்து கால் வரை பொருத்தப்பட்டிருக்கும் மார்க்கர்கள் அவரின் அசைவுகளை ஒளி புள்ளிகளாக காமிராவுக்குக் கொடுக்க, அங்கிருந்து கம்ப்யூட்டர் திரைக்கு மாற்றப்படுகின்றன. வெறும் புள்ளிகளாக இருக்கும் இதை, இப்போது நமக்குத் தேவையான எந்த உருவத்தையும் புகுத்தி அசைய வைக்கலாம். இப்படி எலும்புக்கூடு கூட சுப்புடு பாராட்டும் வகையில் பரதநாட்டியமாட முடியும்!

இதன் மூலம் முப்பரிமாண அசைவுகளை உருவாக்க முடியும் என்பதால் முழுநீள அனிமேஷன்; கார்ட்டூன் படங்கள் தயாராயின! எடுத்துக்காட்டாக சிந்துபாத்; மற்றும் இப்போது தயாரிப்பிலிருக்கும் மகாபாரதம்; அலிபாபாவும் நாற்பது திருடர்களும்!

சினிமாவில் சாதனை படைத்துக் கொண்டிருக்கும் பென்டஃபோர் இப்போது நம் டீவி (Num. T.V.) என்ற இன்டர்நெட் சேனலையும் துவக்கியுள்ளது. இதில் வெளிநாட்டில் இருக்கும் நம்மூர்க்காரர்கள் கச்சேரிகள், நாடகங்களையும் காண முடியுமாம்!

3. சி.டி. ரோம் ப்ளாண்ட்

ஒரு நாளைக்கு 30 ஆயிரம் ஆடியோ, வீடியோ சி.டி.க்களை இங்கு தயாரிக்கலாம். உள்நாடு மட்டுமின்றி பல வெளிநாட்டு ஆடியோ வீடியோ சிடிக்கள் இங்கு தயாரிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இந்த மூன்று பிரதான பிரிவுகள் தவிர கல்வித் துறையிலும் கணிசமாக வேலை செய்து வருகிறது பென்டஃபோர். கம்ப்யூட்டர் பேஸ்டு டுடோரியல்ஸ் (CBT) என்று கம்ப்யூட்டர் வழி பாடங்களையும் புத்தகங்களையும் உருவாக்கி பல்கலைக்கழகங்களுக்கு சப்ளை செய்து வருகிறது.

பணியிடமும் சரி, பென்டஃபோர் சுற்றுவட்டாரமும் சரி, ஒரு தனி உலகத்தில் நாம் இருப்பது போன்ற பிரமையை ஏற்படுத்துகின்றன. பிரமிப்புடன் சுற்றிப் பார்த்து விட்டு வெளியே வந்தால் மனத்தில் மீண்டும் மீண்டும் மின்னலடிப்பது அந்நிறுவனத்தினர் சொன்ன வார்த்தைதான் :

"எது உயரே செல்கிறதோ அது கீழே இறங்கியே தீரும் என்ற நியூட்டன் விதியை நாங்கள் மாற்றி அமைக்க முற்படுகிறோம்" என்றார்கள் அவர்கள்.

அந்த உயரத்தை நாம் அண்ணாந்து பார்க்க வசதியாக ஏதேனும் விசேஷ சாஃப்ட்வேர் தந்து உதவுவார்களா!

— நரசிம்மன்

படங்கள் : ஸ்ரீஹரி

**கோடம்பாக்கத்துல ஆப்பம் விக்கிற பாப்பாயி பாட்டிக்கும், சந்து பொந்தெல்லாம் நடக்குற சாஃப்ட்வேர் புரட்சிக்கும் சம்பந்தம் இருக்கா?**

**அட இருக்கு சார்...!**

**நடந்தது இதுதாங்க. கம்ப்யூட்டர் சொசைட்டி ஆஃப் இந்தியாவும் மீரா டைனமிக் கம்பெனியும் இணைஞ்சு நடத்தின ஏழாவது கம்ப்யூட்டர் கண்காட்சி, சென்னை ராணி மெய்யம்மை திருமணக் கூடத்துல மார்ச்–3ம் தேதி தொடங்கி நாலுநாள் நடந்துச்சு. நடந்துச்சா? மத்திய பட்ஜெட்ல விலை குறைஞ்ச சமாச்சாரங்களில் கம்ப்யூட்டரும் சாஃப்ட்வேரும் உண்டு. சரி நம்ப ஆயா வாங்குற மாதிரி ஏதாவது இருக்கும்னுட்டு ப்ளான் பண்ணினோம்.**

**"எச்சுபிசன் போலாம் வாரியா பாட்டின்னு" கேட்டதும்... ஆப்பக் கடைய அப்படியே போட்டுட்டு ஆட்டோல தாவி ஏறிகிச்சு ஆயா.**

**அப்புறம்? கண்காட்சில நடந்த கலாட்டா இதோ!**



கண்காட்சி நடந்த ஹாலுக்கு ஆட்டோ வந்து சேர்ந்தபோது காலை 11.30 மணி. கீழே இறங்கிய பாட்டிக்கு ஒரு சந்தேகம்.

''இன்னாப்பா! தீவுத் திடலுக்கு போவாம இங்க இட்டுகினு வந்துட்டியே... இன்னா மேட்டரு?'' என்றதும்... திருதிருவென்று விழித்து எச்சில் விழுங்கினோம்...!

"அது பாட்டி... இது வந்து... இது வந்து..." என்று தர்மசங்கடமாக இழுக்க.... பாட்டி முகத்தில் ஒரு பரிவு.

"சரி சரி, நடந்தது நடந்துபோச்சு... ஒன்ன நம்பி(!?) வந்துட்டேன். நல்லதோ, கெட்டதோ, இனிமே எனக்கு எல்லாமே நீதான் ராசா" என்று Y2k மாதிரி பெரிய குண்டைத் தூக்கிப்போட்ட பாட்டி, நமது பதிலுக்குக் காத்திராமல் எக்ஸிபிஷன் கவுண்டரில் நுழைந்தார்.

ரிஷப்சனில் இருந்த இளைஞர் பாட்டிக்கும் நமக்கும் தடை விதித்தார்.

''சார் இப்போ பிஸினெஸ் அவர்ஸ். பிற்பகல் மூன்று மணிலேர்ந்துதான் பப்ளிக் அவர்ஸ். இப்போ பிஸினெஸ் மென்னை மட்டும்தான் உள்ளே விடுவாங்க. நீங்க மூணு மணிக்கு மேல் வாங்க..'' என்றார்.

பாட்டிக்கு வந்துச்சே கோபம்!

''ஏம்பா நானு பிசினெஸ் பண்லை லேன்னு யார் சொன்னது? பலபேருக்கு வயிறார பசியாத்துறவ நான்! ஆப்பம் விக்கிறவன்னா அவ்ளோ இளப்பமா?'' என்று பொறிய...

"மைக்ரோ வேவ் ஓவன்ல ஆட்டோமெட்டிக் ஆப்பம் சுட சாஃப்ட்வேர் வந்திருக்கான்னு பாக்கத்தான் வந்தோம் சார்" என்று நேரத்துக்கு நாமும் அவிழ்த்து விட, அதற்குள் நம் பின்னால் பெரிய க்யூ

# கம்ப்யூட்டர்

நம்மை நெருக்கித் தள்ள, பாட்டியும் நாமும் முதலாவதாக இருந்த ஸ்டால் வாசலில் போய் விழுந்தோம்!

கம்ப்யூட்டர் கலர் மானிட்டர்களை பல்வேறு அளவுகளில் தயாரித்து வரும், எல்.ஜி. நிறுவனத்தின் ஸ்டால் அது. ஸ்டாலில் வைக்கப்பட்டிருந்த மானிட்டர்

களில் வி.சி.பி. மூலம் மடோனா ஆல்பம் படமாக ஓடிக் கொண்டிருக்க, "என்ன, டீவி. பொட்டி விக்கிற எச்சிபிஷனா?" என்று பாட்டி கேட்க... நாம் பதில் சொல்வதற்குள் ஸ்டாலில் இருந்த எக்ஸிக்யூடிவ் முந்திக் கொண்டார்.

"பாட்டி, இது டீ.வி. இல்ல. ஆனா டீ.வி. மாதிரி" என்றதும், யாரை ஏமாத்த பாக்குற, போப்பா நீயும் உம் பொட்டியும்" என்பது மாதிரி கோபத்துடன் அடுத்த ஸ்டாலுக்கு இடம் பெயர்ந்தார்.

இந்திய அரசு நேரடியாக நடத்தி வரும் கம்ப்யூட்டர் பயிற்சி நிறுவனமான டி.சி.ஐ.எல்லின் ஸ்டால் அது!

உடனடி வேலைவாய்ப்பு கிடைக்கற மாதிரி 60 கம்ப்யூட்டர் கோர்ஸ் நடத்து றாங்களாம். கட்டணம் ரொம்ப குறைவுன்னு சொல்றாங்க. பாப்பாயி பாட்டி மாதிரியான ஆளுங்களுக்கு 30 நாள் அடிப்படைப் பயிற்சி தர்றாங்களாம். நாம் எவ்வளவோ வற்புறுத்தியும்... பாட்டி பயிற்சி எடுத்துக்க டைம் இல்லேன்னு அடிச்சு சொல்லிடுச்சி...!

ஒரு நாள் கடை போடலேன்னாலும் வாடிக்கைகாரங்க வீடு முன்னாடி தர்ணா பண்ணிடுவாங்களாம்!

"**யோவ்** ஓரமா நில்லுய்யா" என ஒரு டை கட்டின ஆசாமி இடித்துத் தள்ளி னார். உணர்வு வந்து பார்த்தபோதுதான் தெரிந்தது பாட்டியைக் காண வில்லை என்று.





## லேட்டஸ்ட்!

ஹார்டுவேர், சாஃப்டுவேர், உதிரி பாகங்கள், கன்சல்டன்சி, கடனுதவி, இன்டர்நெட் என்று கம்ப்யூட்டர் உலகின் எல்லா சமாசாரங்களும், கண்காட்சியில் அணிவகுத்திருந்தன. நமது பார்வையில் புதிதாகத் தெரிந்த சில லேட்டஸ்ட் வரவுகள்: அமெரிக்காவைச் சேர்ந்த டிராகன் சிஸ்டம் என்ற கம்பெனி அறிமுகப்படுத்தியிருக்கும் ஹெட்போனுடன் கூடிய வாய்வழி உத்தரவு மூலம் செயல்படும் நோட்புக் கம்ப்யூட்டர். அடுத்து 'மேப்லே'என்கிற பிராண்ட் பெயரில் வந்திருக்கும் ரிமோட் கன்ட்ரோல்.... நீங்க ஹாயா கட்டில்ல படுத்துக்கிட்டு ரிமோட் மூலமா கம்ப்யூட்டரை இயக்கலாம்... இன்டர்நெட் ஓபன் பண்ணலாம்... 24 அடி வரைக்கும் வசதி. அப்புறம் 'சைபர்வேவ்'ன்னு ஒரு கம்பெனி- கேபிள் மூலமா இன்டர்நெட் கனெக்ஷன் கொடுக்கிற நிறுவனம்- வருஷத்துக்கு 12 ஆயிரம் கட்டினா 24 மணிநேரமும் நீங்க எவ்வளவு வேணுமானாலும் பயன்படுத்தலாம்... ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் பயன்படுத்தினா ஒரு மணி நேரத்துக்கு 1 ருபா 37காசுதான் வருமாம். அடுத்து 'கவிதா கணினி' நிறுவனம் அறிமுகப்படுத்தி இருக்கும் 'தமிழ்ச் சொல்லாளர்' என்ற லேட்டஸ்ட் DTP சாஃட்டுவேர். 18 வசதிகள் கொண்ட இது ரொம்ப வேகமா இயங்கற சாஃப்ட்வேராம். இப்படிப் பல புது விஷயங்களுக்கு மத்தியில பல பிஸினஸ் சாஃப்ட்வேர்களைப் பல கம்பெனிங்க இலவசமா கொடுக்கறாங்க!

அலறியடித்து தேடினால் ஒரு பத்து பதினைந்து ஸ்டால்களைக் கடந்து போய் 'டிக்மெயில்.காம்' என்ற ஸ்டாலில் நின்று கொண்டிருந்த மூன்று தேவதைகளோடு அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்!

மாயா மச்சிந்திரா குள்ளர்கள் மாதிரி மெள்ள மெள்ள பதுங்கிப் போயி பார்த்தோம்...

"பாட்டி. நீங்க நினைக்கிற மாதிரி இது டீ.வி. பெட்டி இல்ல. இதுக்குப் பேரு கம்ப்யூட்டர். வரவு செலவு கணக்குப் போடுறதுல ஆரம்பிச்சு, சமையல்கட்டு வரைக்கும் கம்ப்யூட்டர் வந்து மனுசங்க வேலைய சுலபமாக்கிடுச்சு. நீங்க கட்டி இருக்கிற சேலையைக் கூட இப்ப கம்ப்யூட்டர்தான் டிசைன் செஞ்சது..." என்று காயத்ரி கதைக்க, ஏதோகொஞ்சம் புரிந்த மாதிரி தலையாட்டினார் பாட்டி.

அடுத்து, பாட்டியிடம் அறிவை விதைத்தவர் கவிதா.

''பாட்டி உங்களுக்கு வெளிநாட்டுல யாராவது இருக்காங்களா?''

"சிலோன்ல எம்பேரன் இறான்.... ஆனா ஊருபக்கமே வர்றதில்ல... என்ன பிரச்னையோ.''

''உங்கப் பேரனுக்கு இங்க இருந்து கிட்டே நீங்க ஈ.மெயில்ல லெட்டர் அனுப்பலாம் இண்டர்நெட்ல இந்த வசதி இருக்கு. இங்க பாருங்களேன்... 'டிக்மெயில்.காம்' என்று நாங்க ஒரு வெப்சைட் வெச்சிருக்கோம். இதுல நீங்க மெயில் அனுப்ப லாக்இன் தேவையில்லை. பாஸ்வேர்டு தேவையில்லை. பத்து நிமிஷத்துல மெயில் அனுப்பிடலாம். ஆனா இதுல அனுப்ப மட்டும்தான் முடியும்! மத்த 'மெயில்' மாதிரி ரிசீவ் பண்ண முடியாது!'' என்ற கவிதாவிடமிருந்து பாட்டியை மீட்டவர் மூன்றாமவரான அர்ச்சனா.

"பாட்டி இந்த சேர்ல உட்காருங்க.. ஒரு நிமிஷம் கம்ப்யூட்டரை ஆபரேட் பண்றதப் பாருங்க!" என்றதும் பாட்டி உட்கார்ந்து கொண்டார்.

''இதோ இந்த மௌஸ்ல கைவெச்சு அமுத்துங்க.''

"மௌசா அப்படீன்னா இன்னாமா?"

"தமிழ்ல எலின்னு சொல்லுவாங்க."

"இது வெள்ளையாக்கிதே?"

''அப்படீன்னா வெள்ளை எலினு வெச்சுக்கோங்க''.

தலையாட்டி விட்டு, மௌசை அர்ச்சனா உதவியுடன் க்ளிக் செய்து, பக்கங்கள் படக் படக் என்று மாறுவதை ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டிருந்த பாட்டியை நாம் 'உலுப்பி' மீட்டு அடுத்த ஸ்டாலுக்கு அழைத்துப் போக பெரும்பாடு பட

வேண்டியதாயிற்று!

கண்காட்சி முழுக்க பெரிய பெரிய கம்ப்யூட்டர்களைப் பார்த்த பாட்டிக்கு, எச்.சி.எல்காரங்க ஸ்டாலில் இருந்த நோட் புக் கம்ப்யூட்டர்கள் மேல் பார்வை பட்டுச்சு.

"பாட்டி இது லேட்டஸ்ட் நோட் புக் கம்ப்யூட்டர். ஃபிங்கரிங் வராத வங்க, ரொம்ப பிசியான பிஸினெஸ் மென் இந்த ஹெட்போனைத் தலையில மாட்டிக்கிட்டு டிக்டேஷனை வாயால் சொன்னா போதும்! கம்ப்யூட்டர் ஆடியோ சிக்னல் மூலமா உத்தரவுகளை உடனே கன்வர்ட் செய்துகிட்டு செயல்படும்.

"அதெல்லாம் சரிப்பா! இதோட விலையச் சொல்லு"என்ற பாட்டி. விலையைக் கேட்டு அதிர்ச்சியில் திறந்த வாயை நாம்தான் கஷ்டப் பட்டு மூட வேண்டி இருந்தது!

"75 ஆயிரம் ரூபாயா?" என்ற பாட்டியை அழைத்துக் கொண்டு ஒவ்வொரு ஸ்டாலாக ஏறி இறங்க... எக்ஸிபிஷனை விட பாட்டியைப் பார்த்து... ஏதும் புதுவகை கம்ப்யூட்டரோ என்பது மாதிரி வாய் பிளந்தவர்கள்தான் அதிகம்!

கடைசியாக டி.வி.எஸ். நிறுவனத்தின் ஸ்டாலுக்குள் பாட்டி நுழைந்தார். தமிழ் கீ போர்டுகளை அங்கு புதிதாக அறிமுகப்படுத்தியிருந்தார்கள்.

"வந்தது வந்துட்டோம்... ஏதாவது ஒண்ணு வாங்கிட்டுப் போகணும்... இங்க பாரு இந்த பல்லாங்குழி கட்டையில தமிழ் எழுத்தெல்லாம் போட்டுருக்கு. இதுக்கு காசு குடுத்துடு" என்றபடி ஒரு கீ போர்டை அலட்சியமாகத் தூக்கி கூடையில் வைத்துக் கொண்டு புறப்பட, நமக்கு தர்மசங்கடமாகி விட்டது! "இதுல பல்லாங்குழி விளையாட முடியாது பாட்டி! வேற வாங்கித் தரேன்" என்று ஒருவழியாக பாட்டியை சமாளித்து அவசர அவசரமாக எக்ஸிபிஷனில் இருந்து எஸ்கேப் ஆனோம்!

**— ஆர்.சி. ஜெயந்தன்**

அட்டை வண்ணப்படம், படங்கள்: **வெங்கடேஷ்**

# 'நெட்' அடிமைகள்!

மது அடிமைகள், போதைப் பொருள் அடிமைகள் பற்றி நமக்குத் தெரியும். 'நெட்' அடிமைகள் தெரியுமா? அமெரிக்காவின் பிரபல பத்திரிகையாளர்களுள் ஒருவரான Maia szalavitz சமீபத்தில் 'நியூஸ் வீக்'கில் தான் 'இன்டர்நெட் அடிமை'யானது பற்றி



ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார்.

"ஒன்பது வருடங்களாக இன்டர்நெட் உபயோகிக்கிறேன். அதனுடன் குடித்தனம் செய்கிறேன் என்று சொன்னாலும் தவறில்லை. ஒரு நாளின் பெரும்பாலான நேரத்தை கம்ப்யூட்டர் திரையின் முன்னால்தான் கழிக்கிறேன்.

"என் காதலன் இங்கிலாந்தில் இருக்கிறான். அவனோடு நேரில் பேசுவதைவிட ஈ.மெயில் மூலம் செய்தி அனுப்புவதும் பெறுவதும்தான் பரம சுகமாக இருக்கிறது.

"என் அனுபவத்தில், இந்த 'நெட்' பழக்கம் ஒரு லிமிட்டில் இல்லா விட்டால் பெரிய சிக்கல்தான்! மனித உறவுகளே வேண்டாம், நெட்டில் புழங்குவதே போதும் என்று தோன்றும் அளவுக்கு நம்மை 'அடிக்ட்' ஆக்கி விடுகிறது இது.

"ஒரு ஈ.மெயில் அனுப்பும்போதோ, ஏதாவது 'ஸைட்'டில் மேய்ந்து கொண்டிருக்கும்போதோ- அதிகமில்லை- ஒரு டெலிபோன் மணிச் சப்தமும் சாலையில் கடக்கும் மோட்டார் சப்தமும் கூட, ஒட்டுமொத்த மனித சமுதாயத்தின் மீதே வெறுப்பேற்படும்படி செய்து விடுகிறது" என்கிறார் மய்யா!

– ஔரங்கசீப்

# இந்த வீட்டு மனையை வாங்கச் சரியான நேரம்

## (கீழே கொடுத்துள்ள 5 காரணங்களுக்காகவே)

# சிந்து நகர், சென்னை–600 056

பூந்தமல்லி பை-பாஸ் அருகே – CMDA அப்ரூவ்டு மனைகள். (நெ. 65/99.)

- அமைந்துள்ள இடம் ✔
- மாநகருக்கு மிக அருகில் ✔
- பாதுகாப்பு ✔
- முதலீடு செய்யும் பணத்துக்கு தகுந்த மதிப்பு ✔
- வேகமாக உயரும் நில மதிப்பு ✔



## சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை. அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்சினியரிங், கேட்டரிங், ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிகுதியான நிலத்தடிநீர். ● சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம். ● உடனடி பத்திரப் பதிவு.

## BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி.) ● வீடு கட்டும் பட்சத்தில் தரமான எஞ்சினியர்களை கொண்டு BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

**மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும் காலை 7.00 மணி, 11.00 மணி மற்றும் மாலை 3.00 மணி**

**PH : 4357721 / 4357731 / 4353183 ● CELL : 98400-44018**




# BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai, Teynampet, Chennai - 18. (Behind Apollo Cancer Hospital)

**R. BHASKAR** - Managing Director

**வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு**

முடியாததை முடித்துக் காட்டுவதுதான் லீடர் ஷிப் என்று நிமிர்ந்து எழுந்த மூர்த்தியின் பேச்சைக் கேட்ட அடுத்த நொடியே நண்பர்கள் மனம் மாறினார்கள். அனைவரும் சேர்ந்து ஒரு முடிவெடுத்தார்கள்.

# இவரது டிரைவரின் சொத்தே 2 கோடி!

அந்தப் பள்ளிக்கூட ஆசிரியரின் எட்டுப் பிள்ளைகளில் அந்த இளைஞன் ஐந்தாவது!

அவனுக்கு ஐ.ஐ.டி.யில் படிக்க ஆசை. ஸ்காலர்ஷிப்பும் கிடைத்தது. ஆனால் அந்தப் பணம் ஆண்டு இறுதியில்தான் கைக்கு வரும். அதுவரை...?

அப்பாவின் 250 ரூபாய் சம்பளம் அவனை ஏமாற்றி ஐ.ஐ.டி. படிப்பை வெறும் கனவாக்கியது. வேறு ஒரு என்ஜீனியரிங் கல்லூரியில் படித்து பட்டம் பெற்ற பின் ஐ.ஐ.டியில் மீண்டும் கிடைத்தது சான்ஸ்! இந்தமுறை ஸ்காலர்ஷிப் விதிகள் தளர்த்தப்பட்டதால் பணம் முன்பே கைக்குக் கிடைக்க, கான்பூர் ஐ.ஐ.டியில் எம்.டெக் முடித்தார்.

அந்த இளைஞர்தான் இந்தியாவின் நம்பர் ஒன் கம்ப்யூட்டர் நிறுவனமான இன்ஃபோஸிஸ் டெக்னாலஜி லிமிடெட்டின் நிறுவனர் என்.ஆர். நாராயணமூர்த்தி!

ஐ.ஐ.டியில் படித்து முடித்த பின் பல முன்னணி நிறுவனங்களிலிருந்து வேலைக்கு அழைப்பு வந்தது. எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு, அகமதாபாதில் உள்ள இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் மானேஜ்மென்ட்டில் கம்ப்யூட்டர் ப்ரோக்ராமராக வேலையில் சேர்ந்தார். அங்கே மூர்த்தியின் குருவாக வாய்த்தவர் பேராசிரியர் கிருஷ்ணய்யா. சீசா என்ற ப்ரெஞ்ச் நிறுவனத்தில் நாராயணமூர்த்தியை சிபாரிசு செய்தார் கிருஷ்ணய்யா. ப்ரெஞ்ச் கற்றுக்கொண்டு பிரான்சுக்குப் போனார். கான்ட்ராக்ட் முடிந்

நாராயணமூர்த்தி



தது. சம்பாதித்த 450 டாலர்களுடன் தரை வழிப் பயணமாக இந்தியா திரும்பிக் கொண்டிருந்தார். பல்கேரியாவின் எல்லையிலுள்ள ஊரான நீஸ் நகரத்தில் யாரோ என்று நினைத்து போலீஸ்காரர்கள் இவரைப் பிடித்து விட்டார்கள்! மூன்று நாள் சிறைவாசம்! பின்னர் ஒருவழியாகச் சமாளித்து பூனா வந்து சேர்ந்தார்.

இங்குதான் தமது வருங்கால மனைவியான சுதாவை சந்தித்தார் மூர்த்தி. 1978-ஆம் ஆண்டு திருமணம் செய்துகொண்டார்கள்.

பின்னர் பி.சி.எஸ். என்ற மும்பை நிறுவனத்தில் சாஃப்ட்வேர் தயாரிக்கும் பொறுப்பு கிடைத்தது. நிலேகானி, எஸ். கோபாலகிருஷ்ணன், அசோக் அரோரா, கே. தினேஷ், ஷிபுலால் என்ற இளைஞர்களைத் தமது குழுவாக்கிக் கொண்டார் மூர்த்தி! இவர்களுடன் 1981-ல் இன்ஃபோஸிஸ் கன்சல்டன்ஸியை தொடங்கினார். ஆளுக்கு 10 ஆயிரம் ரூபாய் போட்டார்கள். (எல்லோரும் அவரவர் மனைவியிடமிருந்து கடன் வாங்கினார்களாம்!)

ஆனால் அந்த நாட்களில் இந்தியாவுக்கு ஒரு கம்ப்யூட்டரை வரவழைப்பதே சிரமமான வேலையாக இருந்தது. திணறிப்போன மூர்த்தி அமெரிக்காவுக்கே போய் ஏதேனும் செய்ய முடியுமா என்று யோசித்தார். ஆனால் அங்கும் ஏற்றுமதி விஷயத்தில் குளறுபடிகள்தான்.

ஒரு விமானப் பயணத்தின்போது கர்நாடக அரசின் தொழில் வளர்ச்சி நிதி வாரிய தலைவரிடம் கம்ப்யூட்டர் இறக்குமதியிலுள்ள சிக்கல்களை விளக்கியிருந்தார் மூர்த்தி. அடுத்த 15 நாட்களுக்குள் இவர்கள் கம்பெனிக்கு முதல் கம்ப்யூட்டர் வாங்க 52 லட்ச ரூபாய் நிதி உதவி கிடைத்தது! ஆனால் மறுபடியும் சங்கடங்கள். ஒரு போனுக்கு விண்ணப்பித்தால் கனெக்ஷன் கிடைக்க வருடக்கணக்கில் காத்திருக்க வேண்டியிருந்தது. வெளிநாட்டு நிறுவனங்களுடன் போனின்றி எப்படி பிசினஸ் செய்வது?

1990-ல் எல்லாவற்றையும் யாருக்கேனும் விற்று விட்டு தலைமுழுகி விடலாமா என்று நினைத்தார். அந்தளவிற்கு கெடுபிடிகள். நண்பர்களும் சோர்ந்தார்கள்.

முடியாததை முடித்துக் காட்டுவதுதான் லீடர்ஷிப் என்று நிமிர்ந்து எழுந்த மூர்த்தியின் பேச்சைக் கேட்ட அடுத்த நொடியே நண்பர்கள் மனம் மாறினார்கள். அனைவரும் சேர்ந்து ஒரு முடிவெடுத்தார்கள். வருமானத்தைப் பெருக்குவது, கூடுமான வரை அதை மறுபடி கம்பெனி வளர்ச்சிக்கு கொடுப்பது என்பதுதான் அது!

பொருளாதார தாராளமயமாக்கல் கொள்கை அறிவிக்கப்பட்டதும் 1991-ல் ஐந்து கோடி ரூபாய்க்கு வியாபாரம் செய்து வந்த இன்ஃபோஸிஸ் நிறுவனத்தின் பிஸினஸ் நூறு மடங்கு பெருகியது. கம்ப்யூட்டர் இறக்குமதி கெடுபிடிகள் தளர்த்தப்பட்டன.

பிறகு தம் நிறுவனத்தின் ஊழியர்களுக்கு கம்பெனி பங்குகளைக் கொடுக்க முன்வந்தார் மூர்த்தி. அதிகம் பேர் வாங்க முன்வரவில்லை.

ஆனால் இன்று...?

இன்ஃபோஸிஸில் பங்குகள் வாங்கியுள்ள நூறுக்கும் மேற்பட்ட ஊழியர்கள் கோடீசுவரர்கள்! 1800 பேர் மில்லியனர்கள்! தமது பூனா வீட்டைக் கட்ட ஒரு லட்சம் ரூபாய் கடன் வாங்கிய நாராயண மூர்த்தியின் ஷேர் மதிப்பு மட்டும் இன்று 2500 கோடி ரூபாய். அவர் கார் டிரைவர் கண்ணனின் பங்கு மதிப்பு 2 கோடி ரூபாய்!

இந்தியாவில் மட்டும் 11 சாஃப்ட்வேர் டெவலப்மெண்ட் சென்டர்கள். 13 வெளிநாட்டு அலுவலகங்கள். 97 சதவீத வருமானம் ஏற்றுமதியிலிருந்து. இதுதான் இன்றைய இன்ஃபோஸிஸ்!

இத்தனைக்கும் பிறகு பெங்களூர் ஜெய்நகரில் மூர்த்தி வசிப்பது சாதாரண மூன்று பெட்ரூம் வீட்டில்! இரண்டு, மூன்று கார்கள் இல்லை. ஒரே ஒரு கார்தான்.

இன்ஃபோஸிஸ் பவுண்டேஷன் தனது வருமானத்தில் 5 சதவிகிதத்தை ஏழை எளியவர்களின் முன்னேற்றத்திற்காகச் செலவிடுகிறது.

ஒரு தனிமனிதர் திறமையை மட்டுமே வைத்து இந்தியாவின் நெம்பர் 1 சாஃப்ட்வேர் நிறுவனமாக இன்ஃபோஸிஸை கொண்டு வந்திருப்பது நம்ப முடியாத கதையாக இருக்கலாம். ஆனால் பல வெற்றிக் கதைகள் அப்படித்தான் இருக்கின்றன.

**- சாருகேசி**

படம் - நன்றி : **பிசினஸ் இந்தியா**

# பில்ராத்
## மருத்துவமனை

**முதன்முதலில்**
அதிநவீன லேசர் கருவியுடன்
**லேப்ராஸ்கோப்பி**
**சிகிச்சை**






**BILLROTH HOSPITAL**
24 HOURS SERVICE

## வயிறு
சம்பந்தப்பட்ட அனைத்து
நோய்களுக்கும் ஓர் முழுமையான
## தீர்வு

- அல்சர்
- அபண்டிஸைடிஸ்
- குடல் இறக்கம் (Hernia)
- பித்தப்பை கற்கள் (Gall Bladder Stones)
- கர்ப்பப்பை நோய்
- ஓவரியில் கட்டி எடுத்தல் (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை

சிறப்பு அம்சங்கள்
- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்

♦♦♦

**அறுவை இல்லா**
## மூல வியாதி
**சிகிச்சை**

---

சிறப்பு சிகிச்சை :
- ❊ லேசர் சிகிச்சை
- ❊ கிரையோ சிகிச்சை
- ❊ கதிர் வீச்சு சிகிச்சை

43, லட்சுமி டாக்கீஸ் சாலை, செனாய் நகர், சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

பாரதிக்கு எல்லாம் வித்தியாசமாக இருந்தது. ஆனால், மகிழ்ச்சியாகவும் இருந்தது. இதை அரவிந்தனுடன் பகிர்ந்து கொண்டாள்.

"பெண்கள் ஆண்களுடன் பேதம் இல்லாமல் பழகுகிறார்கள். ரொம்ப ஆரோக்கியமான விஷயம் இது. பாருங்கள், அரவிந்தன். ஒரு பையன், சிநேகிதன் என்று சொல்லிக் கொண்டு வருகிறதும், பழகறதும்... ஜன்னல்கள், கதவுகள் எல்லாம் திறந்து வச்சாச்சு. ஆரோக்கியமான காத்து உள்ளே வருது. இதெல்லாம், எதிர்காலப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் நல்லதா அமையப் போறதுங்கறதுக்கு அறிகுறி."

"நிச்சயமா, இது நல்லதுதான். இப்படித்தான் ஒரு காலத்துல இருந்திருக்கணும்."

"எனக்கெல்லாம் அந்த வாய்ப்பு இல்லை."

வைத்தியநாதன், ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். மதிய வெயில் காயவைத்த வேட்டி மாதிரி வெளுத்துப் போயிருந்தது. வெக்கையும், குமுறிக் கொண்டு அவ்வப்போது வீசும் காற்றும், கோடையை அறிவித்தன.

"ஒரு முக்கியமான விஷயம்."

"சொல்லுங்க, அரவிந்தன்."

"நியூயார்க்கில் உங்களைப் பாடக் கூப்பிட்டிருக்காங்க. அப்படியே பாரிசிலும், கல்ஃப் நாட்டுக்கும் போக வேண்டியிருக்கும். இன்னிக்குக் காலையில, நியூயார்க் நடராஜன் ஃபோன் செய்தார். கூடவே கடிதமும் வந்துடுச்சு."

அரவிந்தன் கடிதத்தை எடுத்துக் கொடுத்தான். பாரதி படித்தாள்.

"மரியாதைக்குரிய திருமதி பாரதி அவர்களுக்கு, வணக்கம்.

நலமாக இருப்பீர்கள் என்று நம்புகிறோம்.

சண்முகா பவனில், தங்கள் கச்சேரியைக் கேட்டு, நான் தங்களிடம் பாராட்டிப் பேசியது தங்கள் நினைவில் இருக்கும் என்று நினைக்கிறேன்.

தங்கள் கேசட்டுகளை இங்குள்ள தமிழர்கள் மற்றும் அமெரிக்கர்கள் கேட்டனர். கவிஞர் தேவியின் வார்த்தைகளில் சொன்னால், கிறுகிறுத்துப் போனார்கள்.

சங்கீதத்தில் மட்டும் அல்ல, எல்லாத் துறையிலுமே, சத்தம் அதிகமாகி விட்டது. நிறையப் பேசுகிறார்கள். வாயைத் திறக்கும் நேரத்தில் காதுகளைத் திறந்தால் வளரலாம். மேலும், சர்க்கஸ் வித்தையாகி இருக்கிறது, சங்கீதம். ஆத்ம அனுபவம் என்பது எல்லாம், திண்ணைப் பேச்சாகி விட்டது. இளம்பிள்ளைத் துணிச்சலைக் குழந்தைப் பருவத்தில் சகிக்கலாம். பெரியவர் ஆன பிறகும், குழந்தைத்தனம் செய்தால் சகிக்க முடிவது இல்லை.

தங்கள் பாட்டு, அமைதியும் சுகானுபவமும் லயிப்பும் கொண்டதாக இருக்கிறது. எல்லா ஆட்டத்துக்கும் விதிகள் இருக்கின்றன. அந்த விதிகளுக்குள் இருந்து ஆடுவது உத்தமம். நீங்கள் அதைச் செய்கிறீர்கள்.

தாங்கள் அடுத்த மாதத்துக்குள்ளாவது இங்கே, அமெரிக்காவுக்கும் பாரிசுக்கும் வருகை தர வேண்டும். உலகத் தமிழர்களும், மற்றவர்களும் உங்களைக் கேட்க வேண்டும்...

நிறைய எழுதியிருந்தார் நடராஜன்.

மடித்து அவனிடமே கொடுத்தாள், அவள்.

"உங்களுக்குத்தான். நாளைக்குள் பதிலைச் சொல்லிவிட வேணும்."

பாரதி யோசித்தபடி இருந்தாள்.

"அப்பா எழுந்திருக்கட்டும். அவரையும் கலந்து கொள்ளலாம்."

பாரதி, அரவிந்தனிடம் தொடர்ந்தாள்.

"எனக்கு வெளிநாடு போவதில் பெரிசாக ஆர்வம் இல்லை. பயணம் பண்ணுவது எனக்குப் பிடிக்கும். உள்நாட்டிலேயே நிறைய இடங்களுக்குப் போக வேண்டும். எங்கே முடிகிறது?"

**20 முதல்**

"உள் நாட்டைப் பார்க்க வேண்டும் என்பது முக்கியம்தான் பாரதி. அதுக்காக வெளிநாடு போகக் கூடாது என்று

**பிரபஞ்சன்**

இல்லை."

பாரதி சிரித்தபடி, 'சரிதான்' என்று ஒப்



# மழைக்குளி

புக் கொண்டான்.

அப்பா எழுந்து வெளியே வந்து, அரவிந்தனை விசாரித்தார்.

பாரதி எழுந்து போய், மூவருக்கும் காப்பி போட்டுக் கொண்டு வந்தாள்.

அரவிந்தன், பாரதிக்கு வந்திருந்த வெளிநாட்டு வாய்ப்பைச் சொன்னான். அவர் மகிழ்ச்சியடைவது வெளிப்படையாகவே தெரிந்தது.

"ரொம்ப சந்தோஷம்" என்றார் அவர்.

"ஒப்புக் கொள்ளலாமாப்பா?" என்று கேட்டாள் பாரதி.

"கண்டிப்பாய். அவசியம் வெளிநாடு போக வேணும். அதுவும் ஒரு அனுபவம் தானே?"

மகள், வெளிநாடுகளுக்குப் போய் வருவதில் அவருக்குப் பெருமை புலப்பட்டது. கூடவே, அவர் சொன்னார் :

"அவள் புருஷன் விவாகரத்து வழக்கு போட்டிருக்கான். அது கோர்ட்டுக்கு வந்து, இவளை நீதிபதி அழைக்கலாம். நாம் வாய்தா கேட்டுக் கொள்ளலாம். மற்றபடி, பணப் பிரச்னை எழாது. டிக்கெட் எல்லாம் அவர்களே கொடுக்கப் போகிறார்கள். அப்புறம் என்ன பாரதி?"

"யோசிக்கிறேம்பா."

"யோசிப்பது என்ன? உடனடியாக முடிவெடு."

அவர், தன் அனுபவங்களில் மூழ்கினார்.

"என் குருநாதருடன், வெளிநாடு போயிருக்கேன். லண்டனிலும், கனடாவிலும் பாடியிருக்கோம். அங்கத்திய ரசிகர்கள், வித்தியாசமாக இருக்கிறார்கள். சங்கீதத்தின் அடி நாதத்தைப் புரிந்து கொள்ளவும் அனுபவிக்கவும் ஆசைப்படுகிறார்கள். கேட்கிறபோதே, தங்கள் தேசத்துச் சங்கீதத்து அக உலகத்தையும், அதன் வெளியையும் நம்முடன் ஒப்பிட்டு விளங்கிக் கொள்ள முயற்சிக்கிறார்கள். நம்முடைய சிரத்தைக்கு அவர்கள் மதிப்பு அளிக்கிறார்கள். அங்கே போகிற வித்வான்கள், அவர்கள் சங்கீதத்தையும் கேட்க வேணும். அவர்களுடைய ராக், அதன் தோற்றம், பரவல் பற்றியும் கொஞ்சமாவது தெரிந்து கொள்ள முயற்சிக்க வேணும்."

"ஆனால், பக்தியும் சிருங்காரமுமே அதிகம் ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது நம் சங்கீதத்தில்."

அப்பா சொன்னார்.

"புராதன கலைகளில் அப்படித்தான் இருக்கும். ஏன், நீங்கள் புதுசாக வந்தவர்கள் புது சங்கீதத்தை உருவாக்குவதுதானே?"

"உண்மைதான்" என்றாள் பாரதி.

"சங்கீதத்தின், நம்முடைய ராகங்களின் முழு வெளியையும் நாம் இன்னும் பயன்படுத்தி விடவில்லை. நவீன உள்ளடக்கம் சேர்ந்தால், அதன் முகம் மாறக்கூடும்."

"உருவமோ, உள்ளடக்கமோ, ஏதேனும் ஒன்று மாறும்போது, இரண்டும் மாறித்தானே ஆக வேணும்?"

"யோசிக்கலாம்" என்றாள் பாரதி.

அந்த வாரத்தின் இறுதியில், ஒரு

> **"பத்திரிகைல வர்ற தொடர்கதை, அந்த ஆசிரியருக்கே புடிக்கலை போல!"**
>
> **"எதை வச்சு சொல்றே?"**
>
> **" 'தொடரும்'னு போடுற இடத்துல 'தொடரணுமா' என்று போட்ருக்கார்!"**
>
> **– அம்பை தேவா**

பஞ்சாயத்தைச் சந்திக்க வேண்டியிருந்தது, பாரதிக்கு. அவள் கணவன், அவன் உறவினர்களில் இருவரை வைத்தியநாதனிடம் அனுப்பியிருந்தான்.

"ஒரு பக்கம் கோர்ட்டுக்கும் போகிறீர்கள். மறுபக்கம், பஞ்சாயத்து கூட்டுகிறீர்கள். இதுக்கெல்லாம் அர்த்தம் என்ன?" என்று கேட்டார் அவர்.

வந்தவர்கள், வயதால் பெரிய மனிதர்கள். முகம், அனுபவஸ்தர்களாகவும் காட்டியது. சிரத்தையோடுதான் வந்து இருக்கிறார்கள் என்பதைக் காட்டியது, அவர்களின் நடவடிக்கைகள்.

"குழந்தைகள் தனித்தனியாக இருக்கக் கூடாது. அவர்களைச் சேர்த்து வைக்க வேண்டும் என்பதுதான் நம் முன்னுள்ள யோசனையாக இருக்கணும்" என்றார் ஒருவர்.

மதியம் சாப்பிட்டு அவர்கள் உட்கார்ந்தார்கள். அவர்களுக்கு எதிராக அப்பா. சற்றுத் தள்ளி பாரதியும் அவள் அருகில் வைதேகியும். வைதேகிக்கு எல்லாம் ஆச்சர்யம். அதோடு அருவருப்பு.

"உங்கள் மாப்பிள்ளை சொன்னதைச் சொல்றேன். பாரதி என்ன யோசனையில் இருக்கிறாள் என்பது தெரிய வேணும்."

பாரதி சொன்னாள்.

"நான் முறித்துக் கொள்வது என்கிற தீர்மானத்துக்கு முதல் முதலில் எப்போதுமே வந்ததில்லை. அவர்தான் சண்டை போடுவார். போய் விடுவார். இப்போ, கோர்ட்டுக்கும் போயிருக்கிறது அவர்தான்."

பஞ்சாயத்துக்காரர் சொன்னார்.

"சரிம்மா. அவர் சொல்றதைச் சொல்றேன்."

"சொல்லுங்க."

"முதல்ல, நீ பாடக் கூடாதுன்னு அவர் சொல்றார். பாடினா, அவர் சம்மதத்தோட, அவர் சொல்ற இடத்துல பாடணும்."

அப்பா அவள் முகத்தைப் பார்த்தார்.

"உன் பதிலைச் சொல்லிடும்மா."



"என் பதில் இதுதான். பாடாமல் என்னால இருக்க முடியாது. பாட்டு என்னோட உயிர்."

அவர்கள் மௌனமாக, ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"இப்படிச் சொன்னா என்னம்மா அர்த்தம்?"

"என் பதிலைக் கேட்டதால் சொன்னேன்."

"ஒரு பெண்ணுக்குப் புருஷன் முக்கியமா, பாட்டு முக்கியமா?"

"புருஷன் வர்றதுக்கு முன்னால, எனக்குப் பாட்டு வந்துட்டுது. அதோடு, புருஷனை விடவும் எனக்குப் பாட்டு மேல, அதிக இஷ்டம்."

அவர்கள் திகைப்பது, நேராகவே தெரிந்தது.

"குடும்பம் முக்கியம் இல்லையா? புருஷன் கூட சேர்ந்து வாழுறது முக்கியம் இல்லையா?"

அப்பா இப்போது தலையிட்டார்.

"கல்யாணத்துக்கு முன்னாலேயேதான் சொன்னேனே... என் பெண் பாடும்னு. அப்போ மறுக்கலையே அவங்க."

"அப்போ அப்படிச் சொன்னது வாஸ்தவம். ஆனா, இப்போ வேணாம்னு சொல்றதும் நிஜம்."

"நாளைக்கு எது நிஜம்?" என்றார் அப்பா.

அவர்கள் அமைதியாக இருந்து விட்டுத் தொடர்ந்தார்கள்.

"சரி. உன் குடும்பம் ஒண்ணா சேர வேணாமாம்மா? குடும்பப் பெண்ணா இரேன்."

கொந்தளித்தாள் வைதேகி. அவளை அடக்கி விட்டு பாரதி சொன்னாள்.

"குடும்பப் பெண்ணா இருக்கிறதுன்னா, எல்லாத்தையும் இழந்துட்டு, வெறும் பொம்பளையா இருக்கிறது இல்லை. எனக்குப் பிரதானம்னு நினைக்கிற எதையும் நான் இழக்க முடியாது."

"அப்புறம் உங்க மாப்பிள்ளை சொல்ற அடுத்த விஷயம்?"

"சொல்லுங்க."

"அனாவசியமா செலவு பண்ற விஷயம்."

பாரதிக்குக் கண்களில் நீர் திரண்டது.

"கல்யாணத்துக்கு முன்னாலே, நான் வேலைக்குப் போனேன். அவர் வேண்டாம்னுட்டார். அப்பவே, நான் மறுத்திருக்கணும். அவர் சம்பாதிச்ச பணத்தை நான் செலவு செய்ததால, இப்படி அவர் சொல்லிக் காட்டறார். வேற ஒண்ணும் இல்லை. புத்தகம் வாங்கினதைத் தப்புங்கிறார். அதுவும் நூறு ரூபாய்க்கு."

"அதான்."

"நான் வாங்குவேன். இப்போ, நானும் சம்பாதிக்கவே செய்றேன். என் இஷ்டத்துக்கு எது சரியோ, அதைச் செய்யவே செய்வேன்."

பாரதியின் பேச்சு, வைதேகிக்குப் பிடித்தே இருந்தது.

அவர்கள், தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

"அப்புறம், குழந்தை?"

ஒரு திகிலான நிலை நிலவியது. எல்லோரும் பாரதியின் முகத்தைப் பார்த்தார்கள்.

"குழந்தை இப்போ என்னிடம் இருக்கு. அது பெரியவளாகி, எங்க இருக்கிறதுன்னு தீர்மானிக்கிற வரைக்கும் என்னிடம்தான் இருக்கும். அவளே வளர்ந்து, என்னை விட்டுப் போகணும்னு தீர்மானிச்சா, போகட்டும். அதுவரைக்கும், என் குழந்தையை உங்ககிட்ட கொடுக்க மாட்டேன். இதுக்காக நான் கோர்ட்டுக்கும் போகத் தயாராக இருக்கேன்."

பஞ்சாயத்துக்காரர்கள், மீண்டும் தங்களுக்குள் உரையாடிக் கொண்டார்கள்.

மாலை, இருட்டாகும் வரை பேச்சு நீண்டது.

"அப்படியானா, விடுதலைப் பத்திரம் எழுதிக்குவோம்... சட்டப்படிக்குப் பிரியவும் இது நல்லது."

"எனக்கு ஆட்சேபணை இல்லை" என்றாள் பாரதி.

எல்லாம் முடிந்தபோது, வந்தவரில் பெரியவர் சொன்னார்.

"பஞ்சாயத்துக்கு வந்ததாலே, நான் எதுவும் பேசலை. அம்மா, நீ எடுத்த முடிவுதான் சரி."

எல்லோர்க்கும் அது திருப்தியாக இருந்தது.

(தொடரும்)



# ராஜாவுக்கு 100 வயசு!

கிண்டி ரயில் நிலையத்துக்கு ஒருபுறம் இருக்கும் ரேஸ்கோர்ஸில் குதிரைகளின் நடமாட்டம் இருப்பதில் வியப்பில்லை. ஆனால் ரேஸ்கோர்ஸின் எதிர்புறம் இருக்கும் பசுமை சூழ்ந்த கிங் இன்ஸ்டிட்யூட்டிலும் ஏகப்பட்ட குதிரைகளின் நடமாட்டம் இருக்கிறது! கிங் இன்ஸ்டிட்யூட்டில் குதிரை வளர்க்கிறார்கள்!

எதற்கு?

பாம்புக் கடிக்கு விஷ முறிவு மருந்து தயாரிக்கத்தான்!

பாம்பின் விஷத்தையே எடுத்து அதை குதிரையின் உடலில் செலுத்தி எதிர்ப்புப் பொருளை உண்டாக்கி பின்னர் அதை எடுத்து பாம்புக் கடிக்கு விஷமுறிவு மருந்து தயாரிக்கப்படுகிறது!

இன்று தமிழ்நாடு முழுவதும் அரசு மருத்துவமனைகளில் இருக்கும் பாம்பு விஷ முறிவு மருந்து கிங் இன்ஸ்டிட்யூட்டில் தயாரிக்கப்படுபவைதான்!

இது மட்டுமா? நாய்க் கடிக்குத் தடுப்பூசி மருந்தும் இங்குதான் தயாரிக்கப்படுகிறது. ஆட்டின் மூளையில் ரேபிஸ் வைரஸைச் செலுத்தி வெறி நாய்க் கடிக்கு மருந்து தயாரிக்கிறார்கள். தவிர காலரா, டைபாய்டு, ரணஜன்னி, கக்குவான் இருமல் போன்ற நோய்களுக்கும் தடுப்பூசி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன.

தடுப்பூசி மருந்துகளைத் தயார் செய்ய குதிரைகளும் ஆடுகளும் வளர்க்கப்படுவது ஒரு பக்கம் இருக்க, அந்த மருந்துகளை சோதனை செய்து பார்க்க முயல், எலிகள் என்று குட்டி மிருகக்காட்சி சாலையே கிங் இன்ஸ்டிட்யூட்டில் இயங்குகிறது. நோய்த் தடுப்பில் உலக அரங்கில் முன்னணியில் இருக்கும் இந்த நிறுவனத்துக்கு இப்போது வயது 100!

1899ல், சென்னை மாகாண துப்புரவு ஆணையாளராக இருந்த டபிள்யூ.ஜி. கிங் அவர்களால் துவக்கப்பட்டது இந்த நிலையம். பெரியம்மை தடுப்பு மருந்தை சேமித்து வைக்கும் இடங்காகத்தான் முதலில் துவங்கப்பட்டது. பின்னர் அந்த பெரியம்மைக்கே தடுப்பூசி இங்கு தயாரிக்கப்பட்டது. தடுப்பூசி விவகாரங்களைத் தவிர முக்கியமான பணி, நீர், உணவு ஆகியவற்றைப் பகுத்தாய்ந்து சோதனை முடிவுகளைச் சொல்வது!

உலகத் தலைவர்கள், ஜனாதிபதி, பிரதமர் ஆகிய புள்ளிகள் சென்னைக்கு வந்தால் அவர்கள் உணவை முன்னதாகவே சோதனை செய்து பார்த்து விடுவார்கள்.

நூற்றாண்டு விழாவில் கல்வெட்டைத் திறந்து வைத்த முதல்வர், தமக்கே உரிய பாணியில் இன்ஸ்டிட்யூட்டின் பெயரைத் தமிழில் மாற்றியிருப்பது பற்றி விமர்சித்தார்!

"கிங் இன்ஸ்டிடியூட் ஆப் பிரிவென்டிவ் மெடிசன்' என்று ஆங்கிலத்தில் சொல்லும்போது பொருத்தமாக இருக்கிறது. இதனைத் தமிழிலே 'கிங் நோய்த் தடுப்பு மருத்துவ நிலையம்' என்று மொழி பெயர்த்திருக்கிறார்கள். 'கிங் நோய்' என்று எந்த நோயும் கிடையாது. 'எய்ட்ஸ் நோய்த் தடுப்பு' என்பது போல 'கிங் நோய்த் தடுப்பு' என்று சொல்வதை நான் ஆட்சேபிக்கிறேன். தயவு செய்து இனிமேலாவது இந்த மருத்துவ நிலையத்தை 'நோய் தடுப்பு கிங் மருத்துவ நிலையம்' என்று சொல்லுங்கள்" என்றார்!

— ஸ்ரீநிவாசன்

படம்: ராஜன்




இது வரை கண்டிராத மாயா ஜால தந்திரக் காட்சிகள் நிறைந்த ஜாலியான தொடர்.

சித்தர் மலையில் 2000 ஆண்டுகளாக வாழும் ஜிங்கலன் என்ற சித்தர் கர்ணனின் கவசத்தையும், ஆயுதங்களையும் தகுந்த ஒருவரிடம் ஒப்படைப்பதற்காக பாதுகாத்து வருகிறார். மூன்று குள்ளர்களும் அந்த மலையில் வசிக்கிறனர். அருகில் உள்ள மிதிலாபுரத்தில் மாரகன் என்ற மந்திரவாதி தனது மந்திர சக்தியினால் மக்களை துன்புறுத்தி வருகிறான். அவனிடம் பிடிபடும் ஒரு குள்ளன் உயிருக்குப் பயந்து சித்தரிடம் உள்ள கவசத்தைப் பற்றி அவனிடம் கூறிவிடுகிறான். அதைக் கைப்பற்ற வரும் மாரகனுக்கும், சித்தருக்கும் நடைபெறும் மந்திர தந்திரப் போரில், சித்தர் அருகில் உள்ள பாண்டவபுரத்தை சேர்ந்த அப்பாவி சுயம்புவால் காப்பாற்றப்படுகிறார். சுயம்புவின் நல்ல உள்ளத்தை அறிந்த சித்தர், அவனுக்கு மந்திர தந்திரங்கள் கற்றுக் கொடுப்பதுடன், கவசத்தையும் அளிக்கிறார். சுயம்பு கவசம் அணிந்த உடன் மறையும் 'மாயா' என்ற வீரனாகி அநீதியை எதிர்த்து தனது போராட்டத்தை தொடர்கிறான்.

சித்தர் மலைக்கு மூலிகைகள் பற்றி எழுத வந்த பத்திரிகை நிருபர் நிவேதிதா சுயம்புவின் அப்பாவித்தனத்தால் ஈர்க்கப்படுகிறாள். ஆனால் சுயம்புதான் மாயா என்று அறியாமல் மாயாவை நேசிக்கிறாள். நிவேதிதாவை நேசிக்கும் சுயம்பு தனது காதலை வெளிப்படுத்த முடியாமல் தவிக்கிறான். விடை சின்னத்திரையில்.

*நடிப்பு : நாகேந்திர பிரசாத் (பிரபு தேவாவின் தம்பி) ஸ்வர்ணா, காந்திமதி.*

*இயக்கம் : பி.ஆர். விஜயலக்ஷ்மி*




**விஜய் டி.வியில் அக். 27 முதல் ஒவ்வொரு புதன்கிழமையும் இரவு 8.00 மணிக்கு**

- ADVT -



# திருடாதே!

குவித்து வைக்கப் பட்டிருந்த கம்ப்யூட்டர் டிஸ்க்குகள், மானிட்டர்கள் இன்ன பிறவற்றை சில யானைகள் மிதித்து, உடைத்து துவம்சம் செய்து கொண்டிருந்தன!

டி.வி. நியூஸில் காட்டப் பட்ட ஒரு காட்சி இது! ஏன் இப்படிச் செய்தார்கள்? அங்கே மிதித்து நொறுக்கப் பட்டவை அனைத்துமே சட்டத் துக்குப் புறம்பாக பலரும் பயன்படுத்திய திருட்டு சாஃப்ட்வேர் சாதனங்கள்!

கம்ப்யூட்டர் துறையின் வில்லன்தான் இந்த சாஃப்ட்வேர் பைரஸி என்கிற திருட்டு சாஃப்ட்வேர் பிரச்னை!

கம்ப்யூட்டர் வாங்கி விட்டிருப்பார்கள். அதற்குத் தேவையான சாஃப்ட்வேரும் வைத்திருப்பார்கள். ஆனால், அந்த சாஃப்ட்வேர், சட்டப்படி லைசென்ஸ் பெற்ற விற்பனையாளரிடம் வாங்காமல், திருட்டுத்தனமாக பிரதியெடுக்கப்பட்டதாக இருக்கும். இந்தப் பிரச்னை இன்று உலகளாவிய ஒன்று என்றாலும் கூட சீனாவிலும், வளைகுடா நாடுகளிலும்தான் அதிகமாக இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

திருட்டு சாஃப்ட்வேர் பிரச்னை மிக மிகக் குறைவு என்று பெருமைப்பட்டுக் கொள்கிற நாடுகளில் இந்தியாவும் ஒன்று.

சாஃப்ட்வேர் பைரஸியைத் தடுக்க உலக நாடுகள் பெருமுயற்சி செய்து கொண்டிருக்கின்றன. இதைக் கட்டுப்படுத்த வெகுநாட்களுக்கு முன்பே, சட்டத்தில் சில திருத்தங்கள் செய்த பெருமை இந்தியாவுக்கு உண்டு. 1957ம் வருடத்திய காப்பிரைட் சட்டத்தினை உரிய முறையில் திருத்தியதன் மூலம் இது சாத்தியமானது.

திருட்டு சாஃப்ட்வேரைப் பயன்படுத்துகிறவர்கள் பிடிபடுகிறபோது, மூன்றாண்டு காலம் வரை சிறைத் தண்டனையும், இரண்டு லட்சம் ரூபாய் வரை அபராதமும் கிடைக்க சட்டம் வழிசெய்கிறது. கடுமையான சட்டத்தை மட்டுமே நம்பாமல், திருட்டு சாஃப்ட்வேர்கள் பயன்படுத்தப்படுவதைத் தடுப்பதற்காக, அரசாங்கமும், கம்ப்யூட்டர் நிறுவனங்களும் பலவிதமான நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன.

கம்ப்யூட்டர் மற்றும் சாஃப்ட்வேர் இரண்டையும் தனித்தனியாக விற்பதை விட, இரண்டையும் இணைத்து ஒரு பேக்கேஜ் போல விற்பனை செய்கிற உபாயம் கையாளப்படுகிறது.

"எங்களுடைய என்.ஐ.ஐ.டி.யில் ஆயிரக்கணக்கான மாணவர்கள் கம்ப்யூட்டர் பயிலுகிறார்கள். அத்தனை கம்ப்யூட்டர்களுக்கும் உரிய சாஃப்ட்வேரை வாங்குவது அபரிமிதமான செலவு பிடிக்கும் விஷயம். அதே நேரம் திருட்டு சாஃப்ட்வேர்களைப் பயன்படுத்தவும் எங்கள் கொள்கை இடம் தராது. எனவே, சாஃப்ட்வேரை உருவாக்கி விற்பனை செய்யும் நிறுவனங்களுடன் நேரடியாகவே ஒப்பந்தம் செய்து சகாயமான விலை கொடுத்து வாங்கிப் பயன்படுத்துகிறோம்! திருட்டு சாஃப்ட்வேர் பிரச்னையும் இல்லை" என்கிறார் என்.ஐ.ஐ.டி.யின் துணைத்தலைவரான பாலா.

திருட்டு சாஃப்ட்வேர் பற்றி அண்மையில் ஒரு கம்ப்யூட்டர் இதழில் வந்த விளம்பரம் : நீங்கள் திருட்டு சாஃப்ட்வேர் பயன்படுத்துகிறவரா? அப்படியெனில் உங்களுக்கு 'ஹார்ட்வேர்' காத்துக் கொண்டிருக்கிறது என்ற எச்சரிக்கை வாசகத்தின் கீழே இருந்த படம் : கை விலங்கு!

— கௌதம் ராம்

ஒரு வீட்டு மனை வாங்கி சின்னதாக வீடு கட்டிக் கொள்ள வேண்டும். சுற்றிலும் சில மரங்கள் வைத்து வளர்க்க வேண்டும் என்று மகாகவி போல ஓர் ஆசை எப்போது என் சகதர்மிணிக்கு வந்ததோ அன்று பிடித்தது எனக்கு ஏழரை.

ராப்பகலாக தூக்கமில்லாமல் தவிக்கப் போகிறேன் என்றெல்லாம் நான் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை.

மைய அரசு சார்புடைய ஓர் அலுவலகம். அதன் உருப்படாத இலாகா ஒன்றில் இருபத்தைந்து வருடங்களாக குமாஸ்தா நான்.

இந்த இலாகாவை வைத்துக் கொள்வதா அல்லது சிக்கனம் கருதி மூடி விடலாமா என்ற சர்ச்சையே உயர் மட்டத்தில் நீண்ட காலமாக இருந்து வருகிறது.

"என்னங்க! எப்படியாச்சும் ஒரு அரை கிரவுண்டோ, முக்கால் கிரவுண்டோ, நல்ல தண்ணி, ஸ்கூல் வசதி, ஆஸ்பத்திரி வசதி, சினிமா தியேட்டர், ஹோட்டல் இருக்கிற இடமா பார்த்து வாங்கிப் போட்டுட்டம்னா அப்புறமா குடிசையாவது போட்டுக்கிட்டு போய் உட்கார்ந்துடலாம்'' என்பாள் ஜானகி.

"ஓ... குடிசை போடறது பிரச்னையே இல்லை."

"என்ன சொல்றீங்க? எது சொன்னாலும் புரியும்படியா சொல்றதே இல்லை. எல்லாம் தலையெழுத்து."

"கோபிக்காத ஜானு... மனையை வாங்கிப் போட்டுட்டா போதும். குடிசையை யாராவது அவன் செலவிலேயே போட்டுக்குவான்..."

"சே... என்ன அபசகுனம் பிடிச்சாப்பல பேச்சு. ஒரு காரியத்துக்குத் துப்பில்லை... எனக்குன்னு இப்படியா வந்து வாய்ச்சுத் தொலைக்கணும்..."

"சரி சரி புலம்பாதே... உனக்கு இப்ப மனை வாங்கணும்னு ஆசை வந்துடுச்சி, அவ்வளவுதானே. பணத்துக்கு எங்கேம்மா போறது? சொல்லு."

"கல்யாணம் பண்றவங்க... வீடு கட்டறவங்க எல்லாருமே பணத்தை மூட்டைக் கட்டி வச்சுக்கிட்டா இறங்கறாங்க? முயற்சி பண்ணினா கிடைக்கும்."

"அதுக்கில்லை ஜானு. ஒரு புடைவை வாங்கவே நாலு கடைகள் ஏறி, இறங்கி அரை நாள் போல செலவழிச்சு வாங்கறே. மனைனா வில்லங்கம் இல்லாம இருக்கணும்.. நல்ல இடமா அமையணும். ஈசின்ற என்கம்பரன்ஸ் சர்டிபிகேட் வாங்கணும். இப்படல்லாம் பார்த்துப் பார்த்து செஞ்சால் கூட திடீர்னு ஒருத்தன் முளைச்சு 1585ம் வருஷத்திலிருந்து இது எங்க நிலம்ன்றதுக்கு ஆதாரம் இருக்குன்னு கோர்டில் கேஸ் போடுவான்... ஸ்டே வாங்குவான்..."

"இத பாருங்க... இப்படி எடுத்ததுக்கெல்லாம் முட்டுக்கட்டை போடாம ஆக வேண்டியதைப் பாருங்க..."

"முட்டுக்கட்டை இல்லை ஜானு... இத பார்... நானோ அரசாங்க குமாஸ்தா... பணம் லட்சக்கணக்கா புரட்டியாகணும். அப்படியே புரட்டறதுக்கும்கூட ஆபீசில் ஆயிரத்தெட்டு கேள்வி கேட்பானுக..."

"எதுக்கு கேள்வி கேட்கணும்? நாம் மனை வாங்கறதுக்கும் உங்காபீசுக்கும் என்ன சம்மந்தம்..."

"நல்லாயிருக்கே உன் கேள்வி... ஆபீசில் விஜிலன்ஸ் செல்லுனு இருக்கு... அதுக்கு எழுதி பர்மிஷன் வாங்கணும்... அதாவது லஞ்ச ஒழிப்புத் துறைனு பெயர். அப்புறம் எவ்வளவோ பார்மாலிடீஸ்..."

"என்ன பெரிய பார்மாலிடீஸ்? உங்களோடகூட வேலை செய்யற ராமசாமிக்கு எப்படி பிளாட் வாங்கி வீடு கட்ட முடிஞ்சுது... இத்தனைக்கும் அவருக்கு உங்களைவிட சர்வீஸ் கம்மி... சம்பளமும் கம்மி... ஆனா மூளை அதிகம்..."

"சரி என்னைக் கிண்டல் பண்றது இருக்கட்டும். பார்ப்போம்..."

கடைசியில் அலைந்து திரிந்து புறநகர் பகுதி ஒன்றில் ஒரு மனையைப் பார்த்தோம். பிடித்திருந்தது. வில்லங்கம் இல்லாமல் சுத்தமாக இருந்தது. விலை மட்டும் கொஞ்சம் அதிகம். இரண்டு

# உதிர்மனைகள்

லட்சம். என் கையில் பைசாகூட கிடையாது. முழுப் பணத்தையுமே புரட்டியாக வேண்டும்...

"உங்க ஜி.பி.எப்பில் கடனா கேளுங்களேன்" என்றாள் ஜானகி.

அதிலும் அதிக சேமிப்பில்லை... மாக்சிமம் ஐம்பதாயிரம் வரைதான் கிடைக்கும்... அதற்கும் தகுந்த காரணங்கள் சொல்ல வேண்டும்... மனை வாங்க என்றால் மனையின் முழு விலை என்ன? விஜிலன்ஸ் பர்மிஷன் வாங்கியாயிற்றா? பாக்கிப் பணத்துக்கு என்ன செய்வதாக உத்தேசம் என்றெல்லாம் கேட்பார்கள்.

விவரமத்தனையையும் எழுதி விஜிலன்ஸ் செல்லுக்கு அனுப்பி வைத்தேன். டெல்லியைத் தலைமை இடமாக கொண்டுள்ளது அந்த விஜிலென்ஸ் செல்.

என் கடிதம் திருப்பியனுப்பப்பட்டது.




கௌசல்யா ரங்கநாதன்

சில பல விவரங்கள் கேட்டு.

"ஸி.ஸி.எஸ் (காண்டக்ட்) ரூல்ஸ் படி கீழ்க் கண்ட விவரங்கள் கோரப்படுகின்றன.

(1) மனை வாங்கும் இடம், (2) ஏரியா சதுர அடியில்..., (3) விலை.... (4) யாரிடமிருந்து.... (5) அன்னாரது முழு விலாசம், (6), அவருக்கும் உனக்கும் அலுவலக ரீதியாக தொடர்பு உண்டா..." என்று...

இவற்றை எழுதி அனுப்பிய மறுவாரமே மறுபடி சில விளக்கங்கள் கோரப்பட்டன...

"மனை விலையான இரண்டு லட்சத்தில் ஜி.பி.எப். லோன் ஐம்பதாயிரம் போக பாக்கியுள்ள தொகையை எப்படிப் புரட்டப் போகிறாய்?" என்று...

அலுவலக திரிப்ட் அண்டு கோவாபரேடிவ் சொஸைடியில் 20 ஆயிரமும், மனைவி நகைகளை அடகு வைத்து 20 ஆயிரமும் அம்மா பரிசாகக் கொடுக்கப் போகும் 20 ஆயிரமும் மிச்சம் தொண்ணூறை மாமனாரிடமிருந்தும், மைத்துனனிடமிருந்தும் கடனாகப் பெற்றுக் கொள்ளப் போவதாகவும் சொன்னேன்...

மறுபடி சுவரில் அடித்த பந்து போல் எனக்குத் திரும்பி வந்தது என் விண்ணப்பம் மேலும் சில விளக்கங்கள் கோரி...

"உங்கள் விளக்கங்கள் விஜிலன்ஸுக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை... மேலும் ரூல் 17 ஸி.ஸி.எஸ்.(காண்டக்ட்) விதிகளின்படி அரசு ஊழியர் கடன் வாங்குவதும், கொடுப்பதும் தவறு என்றும், செலவினங்களைத் தன் கட்டுப்பாட்டுக்குள்ளேயே வைத்துக் கொள்ளப் பழகிக் கொள்ள வேண்டும் என்றும் அதே ஸி.ஸி.எஸ் (காண்டக்ட்) ரூல்ஸ் ஏதோ ஒரு விதி எண்ணின்படி அரசு ஊழியர் பரிசாகப் பணம் பெற்றுக் கொள்ள ஒரு வரைமுறை உள்ளது என்றும் சொந்தத் தாயிடமிருந்துகூட பரிசாக நான் குறிப்பிட்ட தொகையைப் பெற்றுக் கொள்ளுதல் விதிமுறை மீறலாக எடுத்துக் கொள்ளப்படும் என்றும் மேலும் மாமனாரிடமிருந்தோ, மைத்துனனிடமிருந்தோ வரதட்சிணை பெறுவது சட்டப்படி குற்றமாகும் என்றும் கருதப்படுவதால் உங்கள் விண்ணப்பம் தள்ளுபடி செய்யப்பட்டு பர்மிஷன் மறுக்கப்படுகிறது" என்று பதில் வந்தது.

எனக்குக் கல்யாணமாகி 25 ஆண்டுகள் ஆகி விட்டன என்றும் தற்போது மாமனாரிடமிருந்தும் மைத்துனனிடமிருந்தும் பணம் கடனாகத்தான்... அதுவும் வட்டியில்லாமல் வாங்க உத்தேசம் என்றும் அம்மாவிடமிருந்து அரசாங்கம் குறிப்பிட்ட தொகைக்கு மேல் பரிசாகப் பெறவில்லை என்றும் பாக்கியுள்ள தொகைக்கு நகைகள் சிலவற்றை அடகு வைத்து வாங்கி ஈடு செய்ய உள்ளது பற்றியும் எழுதினேன்.

அப்பாடா... ஒருவழியாக பிரச்னை முடிந்துவிட்டது ஆறு மாதங்களில்.

இனி பிரச்னை இல்லை... விஜிலன்ஸ் கேட்ட அத்தனை விவரங்களையும் தந்தாயிற்று என்று இறுமாந்திருந்த வேளையில் மறுபடி ஒரு குண்டைத் தூக்கிப் போட்டு என்னைத் திணற அடித்தார்கள் விஜிலன்ஸ் இலாகாவினர்.

மாமனார்/மைத்துனனிடமிருந்து கடன் வாங்குவதாகக் கூறியிருக்கிறீர்கள்.

உங்களுக்குக் கொடுத்து உதவும் அளவுக்கு அவர்கள் வசதியானவர்கள்தானா...

அவர்களின் வங்கிக் கணக்கு விவரங்கள கடந்த ஆறு மாத வரவு செலவு விவரங்களின் ஜெராக்ஸ் பிரதி அனுப்பவும். தவிர நகை எது? எப்போது கொடுக்கப்பட்டது என்பது போன்ற விவரங்களையும் கேட்டிருந்தார்கள்...

மாமனாரும், மைத்துனனும் என்னைப் பார்த்துச் சிரித்தார்கள்.

"அதெப்படி மாப்பிள்ளை எங்க வங்கி கணக்குகளின் ஜெராக்ஸ்... அதுவும் கடந்த ஆறு மாதங்களுக்கானதை உங்க இலாகாவுக்குக் கொடுக்க முடியும்... பைத்தியக்காரத்தனமா இருக்கே."

"இல்லை மாமா... நான் இதுபோல் ஏதாவது பொய் சொல்லிட்டு லஞ்சமா வாங்

---

**"நம்ம போலீஸ் ஸ்டேஷன் காம்பவுண்ட் சுவர்ல சினிமா போஸ்டர் ஒட்டினவங்களைப் பிடிச்சு முட்டிக்கு முட்டி தட்டணும் சார்!"**

**"என்னய்யா இவ்ளோ சூடா பேசறே..."**

**"பின்னே! படத்தோட பேர் 'பயிரை மேயும் வேலிகள்'னு இருக்கே, ஸார்!"**

**— சீர்காழி வி. ரேவதி**



கின பணத்தில் மனை வாங்கிடப் போறே னோனுதான் இவ்வளவு விவரங்கள் கேட் கிறாங்க... வேணாம்னா விட்டுடுவாங்க...''

''ஐயாம் ஸாரி மாப்பிள்ளை... உங்க மனசை புண்படுத்தனும்ன்ற எண்ணத்தில் இதை நான் சொல்லலை... நீங்க அப்பாவி... எல்லாம் முறையா நடக்கனும்னு பார்க் கிறீங்க.. பர்மிஷன் கேட்டு ஆறு மாசமா லோல் படறீங்க... ஆனா இதுவும் ஒரு வகையில் நல்லதுக்குத்தான்... பின்னால் ஏதாவது பிரச்னைனு வந்தால்கூட இப்பப் பட்ட கஷ்டத்துக்கு பலன் தெரியும்... பின் னால் ஒரு காலத்தில் நீங்க முறைகேடா இந்த மனையை வாங்கினீங்கன்னு யாரும் உங்களைக் குற்றம் சொல்ல முடியாதுல்ல... நான் தரேன். என் பிள்ளையையும் தரச் சொல்றேன். வங்கிக் கணக்கின் ஜெராக்ஸ்... ஆனாலும் மெண்டல் டார்ச்சர் இல்லையா உங்களுக்கு...''

''ஆமாம் மாமா...''

இப்படி ஏழு மாத கடிதப் போருக்குப் பிறகும் எனக்கு விஜிலன்ஸ் பர்மிஷன் கிடைக்கவில்லை.

மறுபடி மறுபடி ஏதேதோ கேட்டுத் துளைத்தெடுத்தனர் என்னை.

வேலைக்குச் சேரும் முன் உங்கள் சொத்து விவரம் என்ன? பூர்வீக சொத்தா? மனைவி வழியில் வந்ததா - அதன் மதிப் பென்ன...

தலையைச் சுற்றியது எனக்கு...

இப்படியெல்லாம் சட்ட திட்டங்கள் கடுமையாக இருந்தும்கூட ஏன் லஞ்சம் தலை விரித்தாட வேண்டும். ஏன் சொத்து குவிப்புகள்?

என் 32 வருட சர்வீஸில் என் க்ஷேமநல நிதி மற்றும் திரிப்ட் கோவாபரேடிவ் சொஸைடி தவிர கடனுடன் வாங்கி ஒரு மனை வாங்க இவ்வளவு பாடா... வேலை யிலிருந்து ஓய்வு பெறப் போகும்போது பாக்கிக் கடன்களைத் திருப்பியாக வேண் டும்.

அப்போது மிஞ்சப்போவது சில ஆயிரங்கள். மாதாந்திர ஓய்வூதியமாகவும், இரண்டு மூன்று ஆயிரம் ஓய்வூதியத் தொகையும் மட்டுமே... அதிலும் மனை வாங்கக் கடனாகப் பெற்ற தொகையைத் திருப்பிவிட்டால் மிஞ்சப் போவது ஒரு லட்சம் மட்டுமே... ஏதாவது பெரிய நோய் வந்தால் அது பணாலாகி விடும். பிறகு வாழ் நாட்கள் பூரா 2/3 ஆயிரம் பென்ஷன் மட்டுமே. வெறுப்பாக இருந்தது எனக்கு.



''ஐயா ஏதாவது போடுங்க...''

''ஒண்ணும் இல்லைப்பா, போயிட்டு வா!''

''அப்ப நீங்களும் வாங்க, பக்கத்துத் தெருவுல ரெண்டு பேருமா சேர்ந்து போவம்!''

— சீர்காழி ஆர்.ஸி. கார்த்திக்

---

நான் மனை வாங்கும் எண்ணத்தைக் கை விட்டு விட்டதாக ஒரு கடிதம் எழுதி விஜி லன்ஸ் இலாகாவுக்கு அனுப்பிய பின்புதான் நிம்மதிப் பெருமூச்சு வந்தது...

''என்ன இப்படி செஞ்சுட்டீங்க?'' என் றாள் ஜானகி.

''இத பார்! மனுசனுக்கு நிம்மதிதான் முக் கியம்.''

''அடச்சட்... நீங்களும் உங்க உருப்படாத சித்தாந்தமும். தேர்தல்ல நிற்க டெபாசிட் கட்டக்கூட நகையை அடகு வச்சேன்றாங்க. மாச வருமானமே சில நூறுகள்னு சொல் றாங்க. அப்புறம் தேர்தல்ல நின்னு ஜெயிச்சு கோடிகளில் புரள்றாங்க... பணமாகவும், ஷேர்களாயும், பங்களாக்களுமாய் ஊருக்குத் தெரிஞ்சே ஆட்டம் போடறாங்க... ஊழல்னு வழக்குப் போட்டா எதை எதையோ சொல்லி வழக்கைத் தள்ளிப் போட்டுக் கிட்டே வராங்க.

''சில வருடங்கள் கழிச்சு வழக்கு என் னைக்காவது முடிஞ்சு தண்டனைனு கீழ் கோர்ட் தீர்ப்பு வழங்கினா அதை எதிர்த்து மேல்முறையீடு செஞ்சு, சாட்சிகளைக் கலைச்சு...

''இது மட்டுமா... மறுபடி தேர்தல் வரப்ப எலெக்ஷனில் நின்னு தாங்கள் மக்களுக்குச் சேவை செய்யவே பிறந்தவங்கன்னும் அபாண்டமா தங்கள் மேல பொய் வழக்குகள் போட்டு அவமானப்படுத்தின தாகவும் நம்ப வைக்கிறாங்க...''

''இருக்கலாம் ஜானு... அவங்களுக்கெல் லாம் இல்லாத ஒண்ணு என்கிட்ட இருக்கு... அதான் மனசாட்சி...'' என்றபோது என் கைகளைப் பற்றிக்கொண்டாள் ஜானகி.

# அல்லிக்கேணி அழகர்

ஆனந்தி

சென்னை கடற்கரை ஓரமாக நடந்து சென்றால் தெற்கு வடக்காக முதலில் திருவான்மியூர் மருந்தீசர் கோவிலும், திருமயிலை கபாலீச்வரர் கோவிலும், மாதவ பெருமான் கோவிலும், அல்லிக்கேணி பார்த்த சாரதி பெருமாள் கோவிலும், திருவொற்றியூர் தியாகராஜர் கோவிலும் நெடிதுயர்ந்த கோபுரங்களுடன் விளங்குவது இந்தத் தொண்டை நாட்டின் தொன்மையான வரலாற்றை நினைவூட்டிக் கொண்டிருக்கின்றன.

இவற்றுள் திருவல்லிக்கேணியில் உள்ள பெருமான் கோவிலுக்குத் ஒரு தனிப் பெருமை. பரமபதநாதன் என்று ஆழ்வார்களாலும் தொண்டர்களாலும் கொண்டாடப்படுகிற ஸ்ரீமந் நாராயணன் ஐந்துவிதமான கோலங்களில் ஸேவை சாதிக்கிறாரே! யோக நரஸிம்ம மூர்த்தியாகத் தரிசனம் தந்து அஹோபிலத்துக்குச் சென்று வழிபட்ட பலனையும், ஐந்தலை வாய் நாகத்தணையான் ரங்கநாதராக ஸ்ரீரங்க தலத்தில் வழிபட்ட பலனையும், வேங்கட கிருஷ்ணனாக சங்கேந்தி நின்று திருமலையில் வழிபட்ட பலனையும், •விநதை சிறுவன் மேல் அமர்ந்து அடியார்களுக்கு வரமளிக்க அவசரமாக வரும் வரதராஜப் பெருமானாக சேவை சாதித்து காஞ்சியில் வழிபட்ட பலனையும், பரத சத்ருக்ன லக்ஷ்மண மைதிலியுடன் ராமபிரானாகக் காட்சி தந்து அயோத்தி சென்ற பலனையும் திருவல்லிக்கேணி கோவிலுக்குப் போனால் அலைச்சல் இல்லாமல் சுலபமாக அடையலாம்!

ஸ்ரீ முக்கூர் அவர்கள் கல்கியில் நரசிம்ம மூர்த்தியைப் பற்றியும் ப்ரஹ்லாதனைப் பற்றியும் எழுதுவதைப் படித்த போது திடீரென்று ஸ்ரீ நரஸிம்மஸ்வாமியைத் தரிசிக்க வேண்டும் என்று தோன்றியது.

தெளிசிங்கப் பெருமாள் கோவில் தெருவில் ஸ்ரீ பார்த்தஸாரதி கோவிலின் மேற்குக் கோபுர வாசலை அடைந்து பார்த்தால் துவஜஸ்தம்பம் கம்பீரமாக நிற்பதைக் காணலாம். கருடன் ஸந்நிதியில் ஸேவித்துக் கொண்டு மேற்கு



• சக்கரத்தாழ்வார்

நோக்கி வீற்றிருக்கும் தெள்ளிய சிங்கர் என்ற திருப்பெயருடைய யோக நரஸிம்மர் ஸந்நிதியை அடைகிறோம்.

அடியார்கள் கூடி ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள். பட்டர் எல்லாருக்கும் தீர்த்தம் அளித்து, சடாரி சாதித்து, திருத்துழாய் அளிக்கிறார். ஸ்ரீ யோக நரசிம்மர் ஸந்நிதியில் எப்போதும் கூட்டம். இளைஞர்களும், சிறுவர்களும் சிரத்தையாக வலம் வந்து கொண்டிருக்கிறார்கள்.

ஆச்சரியமாக இருந்தது. வஸ்திர கைங்கர்யம் பாலாஜியிடம் "எப்போதும் இளைஞர்கள் வருவார்களா?" என்று கேட்டேன். "ஆமாம்! இவருக்கு மாணவர் கூட்டம்தான் ஜாஸ்தி. பரீக்ஷைக்குப் படிக்கிறவர்கள் வந்து ஸேவிப்பார்கள். கட்டாயம் பரீக்ஷை பாஸாகும். வேலை

---

• விநதை - கருடன்

வேண்டுமென்பவர்கள் ஒரு மண்டலம் வலம் வந்தால் போதும். வேலை நிச்சயமாகக் கிடைக்கும். இருபது நாள் ஸேவிக்கும் போதே நல்ல செய்திகள் வந்து விடும். இவர் வரப்ரஸாதி. ரொம்ப அனுக்ரஹம். குழந்தையான பிரஹலாதனுக்கு அனுக்ரஹம் பண்ணினவர் இல்லையா! அதனாலே சின்னவாளுக்கு இவரிடம் சலுகை" என்றார் பாலாஜி.

இத்தனை நாளும் ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தி என்றால் பயங்கரமானவராக, ஆகாயமளாவிய சரீரமும், சிங்க முகமும், இரண்யகசிபுவை மடியில் கிடத்திக் கொண்டு கூர்மையான நகங்களால் அவன் வயிற்றைக் கிழிக்கும் கோலமும், இடி முழக்கம் போன்ற கர்ஜனையும், கோப வெறி



• அழகிய சிங்கர் - உற்சவர் - ஸ்ரீதேவி பூதேவியுடன்

யுடன் கூடிய துருத்திக் கொண்டிருக்கிற கண்களும் சிலிர்த்து நிற்கும் பிடரி மயிருமாக செங்கட்சியமாகவே கற்பனை செய்து கொண்டிருந்த எனக்கு இன்ப அதிர்ச்சி. தெள்ளிய சிங்கரின் திருமகத்தில் எத்தனை அமைதி!

மூலவர் யோக நரசிம்மர். அவரும் யோக நிலையில் சாந்தமடைந்தவராக அனுக்ரஹ மூர்த்தியாய் காட்சி தருகிறார். உற்சவரோ உள்ளம் கவர் கள்வனாகவே அழகு சுந்தரனாகவே அருள் வடிவமாய் அலங்கார மூர்த்தியாய் உபயநாச்சியோடு முகவாயில் சிறிய குழி விழுந்து குழந்தைத்தனமான தூய்மை வடிவாக நம் மனத்தை ஆட்கொள்கிறார்.

என்ன அலங்காரம்! சூட்டிய கிரீடமென்ன? மார்பில் மின்னும் பதக்கங்களென்ன! காலில் கொஞ்சும் சதங்கை என்ன? தூக்கிக் கட்டிய ஜடாமகுடம் என்ன? சந்திர சூரியர்களை அணிந்த பாங்கென்ன! குண்டு மல்லிகையை அடுக்கிக் கட்டிய மாலை என்ன? மருக்கொழுந்தின் மணம் என்ன? நெற்றியில் சுடர் விடும் திலகமென்ன! மகாவிஷ்ணு அலங்காரப்பிரியர் என்று சொல்வது இங்கே மெய்யாகிறது. ஸ்ரீதேவி பூதேவி நாச்சியார்களும் அலங்காரமாகக் கைகளில் தாமரைகள் ஏந்தி அமைதியும் அருளும் சுடர்விட அருகில் நிற்கிறார்கள்.

யோகநரஸிம்ம மூர்த்தியோ ஞான வடிவானவர். அவரைக் கோபம் தெளிந்த சிம்மம் என்றே நினைத்து வந்தேன். இல்லை. நமக்கு ஞானத் தெளிவை அளிக்கும் பிரான். கலக்கங்கள் தீர்ந்து விட்டால் தெளிவு நிலைதானே?

இவரைப் போய் பயங்கரமான தோற்றமுடையவர். அச்சம் தரும் வடிவமுடையவர் என்று கற்பனை செய்து கொண்டிருந்தோமே என்று வெட்கமாக இருந்தது.

'பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்
புடைப்பப் பிறை எயிற்று அனல் விழிப்
பேழ்வாய்த்
தெள்ளிய சிங்கமாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே"

என்று திருமங்கையாழ்வார் பாடியிருக்கிறாரே. அந்தப் பிறை போன்ற கோரைப்பல், கனல் கக்கும் விழி, பேழை போன்ற அகன்ற வாய் இவையெல்லாம் யோக நரஸிம்ம மூர்த்தியின் உருவத்தில் கலை வடிவமாகவே இருப்பதைக் கண்டு வியக்கிறோம். ஸாளிக்ராம மாலை அணிந்து கால்களை மடக்கி அமர்ந்திருக்கும் கோலம்.

சரி, பகவான் எதற்கு யோகத்தில் ஆழ்ந்திருக்கிறார்? நம்மைப் போன்ற அஞ்ஞானிகளைக் கூட தமது யோகத்தில் ஐக்கியமாக்கிக் கொள்வதற்காகத்தான் இருக்க வேண்டும். திருமார்பில் மகாலக்ஷ்மியுடன் உறையும் திருவுடைய நரசிம்மமூர்த்தி. இவர் கோவிலில் தனியாகத் தாயார் சந்நிதி கிடையாது. மூலவரைப் போலவே சிறிய வடிவில் இருப்பவரைப் பற்றிக் கேட்டபோது, "இவர் ஸ்தபன பேரர்'' இவருக்குத்தான் நித்தியத் திருமஞ்சனம்" என்று கூறினார் பட்டர்.

இவருடைய சந்நிதியில் பதினாறு கரங்களுடன் ஸுதர்சனாழ்வார் சற்று மறைந்து இருக்கிறார். இவருக்கு வீரியம் அதிகம். சக்ராயுதம் அல்லவா? இந்த ஆழி ஆதவனைவிடச் சக்தி வாய்ந்ததென்று சொல்வார்கள். அதனால் எதிரே தெரியும்படி இல்லாமல் சற்று மறைவாகவே வைத்துப் பூஜிப்பது வழக்கமாக இருக்கிறது.

மீண்டும் தெள்ளிய சிங்கமாகிய கோவைத் தீப ஒளியில் காண்கிறோம். வலது கையில் அபய முத்திரை தாங்கி இடது கையில் என்ன ஹஸ்தம் அது! ஆகா! ''இடது கையில் ஆஹ்வான ஹஸ்தம்!'' "வா" என்று கூப்பிட்டு நம் பயத்தைப் போக்கிக் காப்பாற்றுகிறார். நாம் வராமல் நின்று விடக் கூடாதே என்று ஆள் காட்டி விரலால் அழைக்கிறார். அடாடா இது அல்லவா கருணை?

இந்த அழகிய சிங்கருக்கு ஆனியில் பிரம்மோற்சவம். ஸ்வாமி மெல்ல மெல்ல அழகாக நடந்து வருவாராம். ஐந்தாம் நாள் உற்சவரான தெள்ளியசிங்கருக்கு யோகநரஸிம்ம கோல அலங்காரம் செய்வார்கள். மூலவருக்கோ அன்று முத்தங்கி சாத்துவார்கள்.

கோவிலில் பெருமாளுக்கு பணி செய்பவர்களுக்கோ எங்கள் பெருமாளுக்கு நிகர் இல்லை" என்று ஒரு பெருமை. ஒரு பூரிப்பு. தாய்மார்கள் தன் குழந்தையைப் போல அற்புதக் குழந்தை உலகத்திலேயே இருக்க

---

**''கல்யாணம் நிச்சயமானதும் நம் லவ் லெட்டர்ஸையெல்லாம் என்ன செய்யலாம்?''**

**''பீச்ல சுண்டல்காரருக்கு அன்பளிப்பாக கொடுக்கலாம்! கிழிச்ச சுண்டல் மடிப்பார்!''**

**– பர்வதவர்த்தினி**



முடியாது என்று எண்ணுகிறார்களே. அது போல ஒரு வாஞ்சை. அர்ச்சா மூர்த்தியாக வடிக்கப்பட்ட பகவானுடைய உருவத்தை மெய்யன்பர்கள் கலையாகவோ சிலையாகவோ பார்க்காமல் உணர்வும், சக்தியும், அருள் திறனும் தன்னிடம் வாஞ்சையும் உள்ள தெய்வ வடிவாகக் காண்கிறார்களே இது எப்படி என்று நான் வியப்பதுண்டு.



• அழகிய சிங்கர் - மூலவர் - யோக நரசிம்மர் திருக்கோலத்தில்

பகவானைத்தான் எத்தனை விதமாக அலங்காரம் செய்து பார்க்கிறார்கள்! எத்தனை உற்சவங்கள். வருடத்தில் கிட்டத்தட்ட இருநூறு நாட்கள் திருவிழாதான். அல்லிக் கேணி பெருமாளுக்கு இரண்டாவது யுத்த காலத்தில் 'கர்ஃப்யூ' இருந்த போது கூட உற்சவாதிகளை நிறுத்தியது கிடையாதாம்!

தெள்ளிய சிங்கர் இங்கே ப்ருந்தாரண்யம் என்ற துளசி வனத்தில் எழுந்தருளியது யாருக்காக என்று பார்க்கலாம். ஸ்ரீ ப்ருந்தாரண்யக்ஷேத்ர மகாத்மியத்தில் ஐந்தாவது அத்தியாயத்தில் பகவான் நரஸிம்ம வடிவமாய் எழுந்தருளிய காட்சியை சிலிர்க்கும்படி வர்ணித்திருக்கிறார் கவி. சரத் காலத்தில் தொடங்குகிறது காட்சி.

அத்ரி என்ற மகரிஷி ப்ருந்தாரண்யத்தில் தவம் செய்வதையும், அவருக்குப் பகவான் தரிசனம் கொடுக்கப் போகிறார் என்பதையும் வசிஷ்ட முனிவர் சொன்னார் என்று கேள்விப் பட்ட விகடர் என்ற முனிகுமாரர் அப்படிப்



• பார்த்தசாரதி

பட்டவரைப் பார்க்கும் ஆசையால் தேடிக் கொண்டு வந்தார். இருவரும் மங்களகரமான வேளைக்காகக் காத்துக் கொண்டிருந்தபோது தேவதுந்துபிகள் முழங்க, புஷ்பங்கள் பொழிய ஒரு பொன்மயமான விமானம் தோன்றியது. அந்த விமானத்தின் மத்தியில் பகவான் ஸ்ரீ நரசிம்மராக அத்ரி மகரிஷிக்குத் தரிசனம் தந்து, "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். அத்ரி மகரிஷி அவரைப் பலவிதமாகத் துதித்து பரமபதம்தான் வேண்டும் என்று கேட்டார். அத்ரி மகரிஷிக்கு வைகுண்ட பதவியளித்து அருள்புரிந்த சுவாமி விக்ரஹரூபமாக அங்கேயே தங்கி அடியார்களுக்கு அருள்புரிந்து வருகிறார். அத்ரி மகரிஷி கிழக்குப் பார்த்துக் கொண்டிருந்தபடியால் பகவான் மேற்குப் பார்த்துத் தரிசனம் தந்தார்.

இந்தத் தலத்தின் ஆதி தெய்வம் முதலில் கோயில் கொண்டவர் ஸ்ரீமந் நாதர் என்று கூறினார்கள். வேதவல்லித் தாயார் தனிக் கோவிலில் வீற்றிருக்கிறார். வெகு நாட்கள் பிரிந்திருந்து ஸ்ரீ ரங்கநாதன் வந்த போது, "வாரீர் என் நாதா!" என்று தாயார் அழைத்தாராம். அதனால் அவர் மன்னாதன் என்றே அழைக்கப்படுகிறார். மாசி சுக்ல பக்ஷ துவாதசியில் திருக்கல்யாண உற்சவம் வைதிக முறைப்படி நடக்கும். அம்மி மிதித்து அருந்ததி பார்த்து என்று எல்லாச் சடங்குகளும் நடத்துவார்கள்.

ஸ்ரீ மன்னாதன் சந்நிதியில் வராஹமூர்த்தியும், நரஸிம்ம மூர்த்தியும் எழுந்தருளியிருப்பது இங்கே சிறப்பு.

ஸ்ரீ ராமர் ஸந்நிதியில் நிற்கும் போது, "சிற்றவை பணியால் முடி துறந்தானைத்

திருவல்லிக்கேணி கண்டேனே" என்ற பெரிய திருமொழியில் ஒரு அடி நினைவுக்கு வருகிறது. "இங்கே பெருமாள் ஒவ்வொரு சந்நிதியிலும் குடும்ப சகிதமாகத்தான் தரிசனம்'' என்று சொல்கிறார் பட்டர். தம்பிகளான பரதன் சத்ருக்னன் லக்ஷ்மணன் இவர்கள் சூழ மைதிலி என்ற ஜனகரின் புத்திரியுடன் காட்சி தருகிறார் ராமபிரான். அவரைத் தரிசனம் செய்து கொண்டு வரும் போது பார்த்தசாரதிப் பெருமாள் சந்நிதியில் ஐம்பது அறுபது பேர் திவ்யப்ரபந்தம் இசைப்பதைப் பார்க்கிறோம். ''எங்க கோவில்லே திவ்யபிரபந்த சேவை களுக்கு எல்லாரும் வந்து தாங்களாகவே ப்ரபந்தம் சொல்லிடுவா. தினமும் ஐம்பது அறுபது பேர் வந்துடுவா'' அடாடா! தொண்டர்கள் இப்படியல்லவா இருக்க வேண்டும்.

"கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றானை"த் தரிசிக்கிறோம். இவருக்கு வேங்கட கிருஷ்ணன் என்பதே பெயர். சுமதி முனிவர் சோழ ராஜாவுக்குக் காட்சியளித்தவர். சோழ அரசர் பார்த்த சாரதியாய் ஸேவை சாதிக்க வேண்டும் என்று வரம் கேட்டார். அதற்காக அரசகுலத் தோன்றலாய்ப் பெரிய மீசையுடன்

"வெளிய சங்கொன்றுடையானை பீதக
ஆடை உடையானை
அனி நன்குடைய திருமாலை''

காண்கிறோம். ஆத்ரேய மகரிஷி வைகானஸ முறைப்படி பிரதிஷ்டை செய்த பெருமாள். ஸ்ரீ பார்த்தஸாரதிக்கு மானுஷ வாஸுதேவர் என்று பெயர் வழங்குகிறது. இரண்டு கரங்கள். வலது கையில் பாஞ்ச ஜன்யம் ஏந்தி இடது கையால் தன் பாதத்தைக் காட்டுகிறார். மேற்கே விரலால் அழைத்து அனுக்ரஹம். கிழக்கே பாதத்தைக் காட்டி அனுக்ரஹம். அருகில் ருக்மிணீ தேவியுடன் மட்டுமல்ல அண்ணா பலராமர், மகன் ப்ரத்யும்னன், பேரன் அநிருத்தன் தம்பி ஸாத்யகி எல்லோருடனும் குடும்பத்தோடு ஸேவை சாதிக்கிறார்!



''பாங்க்ல லோன் வாங்கி மாடு வாங்கினது தப்பாப் போச்சு!''
"ஏன்? என்னாச்சு?''
"பாங்க் விடுமுறை நான்ல பால் கறக்க மாட்டேங்குது.''
– ஈரோடு டி.என். சத்யா

இந்தக் குடும்பத்தினரைக் குசலம் விசாரித்துவிட்டு நம்முடைய குடும்பக் கவலைகளை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு மீண்டும் திருச்சுற்றுக்கு வருகிறோம். வரதராஜ சுவாமி பிரத்யக்ஷமாகிறார். அதுவும் கஜேந்திரனுக்கு உதவி செய்வதற்காக அவசரமாக வந்தாரே. அந்தக் கோலத்தில் கருட வாகனத்தின் மீது அமர்ந்து பறந்து வருகிறார். எல்லாம் நமக்கு அருளத்தான். இந்த மாதிரி கோலம் வேறு எங்குமே பார்க்க முடியாது என்று சொன்னார்கள்.

மீண்டும் யோக நரசிம்மர் சந்நிதியை அடைகிறோம். இந்த யோகநரசிம்மருக்கு ஆவணி ஸ்வாதியில் திருமஞ்சனம் நடைபெறும். கவசம் களையும் போது பார்த்தால் அவருடைய ஆபரணங்கள் ஒவ்வொன்றிலும் சிம்மத்தின் முகம் இருப்பதைக் காணலாம். மற்ற நாட்களில் தங்கக் கவசம் சாத்தி வருவதால் அத்ரி முனிவருக்கு விமானத்தில் காட்சியளித்த திருமேனியைத் தரிசிக்க முடியாது.

ரொம்ப சுவாரஸ்யமான ஒரு வழக்கம் இந்தக் கோவிலில் இருக்கிறது. பகவானுக்குத் திருமஞ்சன காலத்தில் கட்டியம் கூறுகிறார்கள். அடாடா! அந்த மணிப்ரவாள நடையின் அழகைச் சொல்லி முடியாது. முதலில் வடமொழியில் சொல்லிப் பிறகு தமிழில் ''பராக் பராக்! ஸ்வாமீ பராக்'' என்று தொடங்கி "ஸ்ரீ பார்த்தஸாரதனே திருமஞ்சனங் கண்டருளுகவே ஜயவிஜயீபவ" என்று முடிப்பார்கள்!

கண்ணாடி அறைக்கு முன்னுள்ள படியில் சற்று உட்கார்ந்து. ஆண்களும் பெண்களும் வேகமாக வலம் வந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இத்தனை பேருக்கு என்னென்ன கோரிக்கையோ? பகவான் பாடு கொஞ்சம் சிரமம்தான். இன்னின்னாருக்கு இன்னின்ன வேண்டும் என்பதைச் சரியாகப் பதிவுசெய்து கொண்டு பிறகு அனுக்ரஹம் செய்ய வேண்டுமே! சரியாக விலாசம் எழுதப்பட்ட தபால்களே வீடு மாறிப் போய் விடுகின்றன. இவ்வளவு பேருடைய மனத்தில் உள்ளதையெல்லாம் சரியாகத் தெரிந்து கொண்டு கிடைக்கச் செய்ய வேண்டுமே. தற்காலத்தில் தங்கள் கோரிக்கைகளைக் காகிதத்தில் எழுதி சுவாமி முன் எரிப்பது சில இடங்களில் வழக்கமாக இருக்கிறது. அதைவிட ஒரு ரிஜிஸ்டர் வைத்து விட்டால் சுவாமிக்கு வசதியாக இருக்கும்!

படங்கள் : **எம். ஏ. சௌந்தரராஜன்**

# ஜீ.... பூம்.... பா.

குழந்தைகளை குதூகலப் படுத்த, யூடிவி தயாரித்து அளித்துள்ள தொடர் ஜீ.... பூம்.... பா. இது விஜய் டிவியில் ஜனவரி 23 முதல் ஞாயிறு தோறும் இரவு 8.00 மணிக்கு ஒளிபரப்பாக உள்ளது.



குழந்தைகளின் உலகம் வித்தியாசமானது. அதில் அவர்கள் எண்ணிய வண்ணம் நடக்கிறது. நினைத்த பொருட்கள் அவர்களுக்கு கிடைக்கின்றன. அருணின் பெற்றோர்கள் இருவரும் தங்கள் வேலைப் பளு காரணமாக அருணுடன் அதிக நேரம் செலவிட முடியவில்லை. அருண் தான் ஒதுக்கப்பட்டுள்ளதாக நினைத்து தனிமையில் வளர்கிறான். இந் நேரத்தில் அவனுக்கு ஒரு மேஜிக் பென்சில் கிடைக்கிறது. ஜீ.... பூம்.... பா. அருண் அந்த பென்சிலால் வரையும் உருவங்கள் உயிர் பெற்று வருகின்றன. வாழ்க்கை வண்ண மயமாகிறது அருணுக்கு. அருணுக்கு மட்டுமல்ல அனைத்து குழந்தை களுக்கும்தான்.



சமந்த்ராஜ் இயக்கத்தில் மலர்கிறது ஜீ... பூம்.... பா... தொடர்.




***விஜய் டி.வியில் ஜனவரி 23 முதல் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் இரவு 8.00 மணிக்கு***

# ஏவுகணை, ராணுவம், ரயில்வே, மாட்டுத்

மேஜர் ஜெனரல் ஏ. பாலசுப்பிரமணி யன், 'விப்ரோ' அதிபர் அஸிம் பிரேம்ஜி இருவரையும் கடந்த ஜனவரி மாதம் தில்லிக்கு வரவழைத்த 'டேட்டாக்வெஸ்ட்' இதழ், இரண்டு பேருக்கும் 'லைஃப்டைம் அச்சீவ்மெண்ட்' விருதை வழங்கியது!

பிரேம்ஜிக்கு சரி, இராணுவத்தில் பணியாற்றிய பால சுப்பிரமணியத்துக்கு எப்படி கம்ப்யூட்டர் பத்திரிகை விருது கொடுத்துக் கௌரவித்தது?

இஞ்ஜினீயரிங் படித்து விட்டு, ராணுவத்தில் சேர்ந்தார் பால சுப்பிரமணியன். சிக்னல்ஸ் துறையில்தான் ஆரம்பம். செய்திகள் அனுப்பவும் பெறவும் டிரான்ஸ்மிட்டர்களும் ரிசீவர்களும்தாம் பழக்கத்தில் இருந்தன. தில்லியிலிருந்து பிரிட்டனுக்கும், ரஷ்யாவுக்கும் தொடர்பு வைத்திருந்தது கூட இந்தப் பழைய முறையில்தான்!

அப்புறம் இங்கிலாந்தில் மார்க்கோனி கல்லூரியில் மேற் படிப்பு. பூனாவில் அட்வான்ஸ்ட் எலக்ட்ரானிக் அன்ட் கைடட் மிஸைல் கோர்ஸ் படிப்பு. பிறகு சிறப்பு ஆயுதப் படை தில்லியில் உருவானபோது, 1962ல் அமெரிக்கா போய் ஐபிஎம் நிறுவனத்தில் பயிற்சி பெற்றுத் திரும்பிய முதல் இராணுவ அதிகாரி மேஜர் ஜெனரல் பாலசுப்பிரமணியம்தான்.

ஹைதராபாதில் 'சிமுலேஷன் சென்டரை' நிறுவினார்கள். ராக்கெட்டுகளின் பாதை ஒழுங்கு, ஏவுகணைகள், நீர்மூழ்கிக் கப்பல்கள் இவற்றின் முறையான செயல்பாடு எல்லாவற்றுக்கும் கம்ப்யூட்டர்தான் துல்லியமாக உதவியது. அன்றைக்கு கம்ப்யூட்டர் துறையின் முன்னணியில் நின்ற நிறுவனம் ஐபிஎம்தான்.

இதுவோ ரகசியம் காக்க வேண்டிய பாதுகாப்புத் துறை. விஞ்ஞான ரீதியாக வெகு ஒழுங்காக இயங்க வேண்டும். ஒரு ஆயுதத்தின் திறனைக் கணக்கிட அதன் சக்தி, அளவு, அமைப்பு எல்லாவற்றையும் முடிவு செய்து, கம்ப்யூட்டருக்குத் தெரிவித்தாக வேண்டும். அதன் பிறகு எந்த உயரத்தில் அதைச் செலுத்தினால் இலக்கைக் கிட்டத் தட்டத் தாக்கும் என்று திட்டமிட கம்ப்யூட்டர்தான் தேவைப்பட்டது. தவிர சீதோஷ்ண நிலையையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். காற்றின் அடர்த்தி எப்படி இருக்கிறது என்பது தெரிந்து கொண்ட பிறகு, மாற்றங்கள் செய்தாக வேண்டும். சில சமயம் மிஸ் ஆகும்.

"அப்போது டிஜிடல், அனலாக் இரண்டு வகை கம்ப்யூட்டர்களும் இருந்தன. நாங்கள் இரண்டையும் இணைத்து ஹைப்ரிட் கம்ப்யூட்டர் உருவாக்கினோம்!" என்கிறார் மேஜர் ஜெனரல்.

இருப்புப்பாதை சீராக இருக்கிறதா என்று பரிசோதித்துப் பார்க்க அப்போதே இரயில்வே இலாகாவினர் இவர்களது உதவியை நாடியது உண்டு. பிஎச்இஎல் கூட இவர்களது கம்ப்யூட்டரைப் பயன்படுத்திக் கொள்ள வந்தது உண்டாம். ஹைதராபாதிலுள்ள மத்திய ஆங்கில ஆராய்ச்சிக் கழகம் கூட, இங்கிலீஷ் டெக்ஸ்ட்டில் அதிகமாகப் புழங்கும் வார்த்தைகள் எவை எவை என்று தொகுக்க, இவர்களது கம்ப்யூட்டரின் உதவியை நாடியதுண்டு!

இராணுவத்தில், கடற்படையில், விமானப் படையில் என்று கம்ப்யூட்டரின் தேவை பெருகிய பிறகு, தில்லியிலேயே இராணுவத் தலைமையகத்தில் உயர் அதிகாரியாகப் பொறுப் பேற்றார் மேஜர் ஜெனரல் பாலசுப்பிரமணியன்.

"சம்பளப் பட்டியல் தயாரிப்பது, அக்கவுண்டிங் என்று சாதாரணப் பணிகளுக்கு கம்ப்யூட்டரை உபயோகப்படுத்துவதை அன்றைக்குப் பலரும் விரும்பவில்லை. ஆனால் இன்வென்டரி கன்ட்ரோல், கையிலிருக்க வேண்டிய சாதனங்களில் செய்ய வேண்டிய முதலீட்டைக் குறைப்பது, என்று பல வகைகளில் கம்ப்யூட்டர்



# தீவனம்!

பயன்பட்டது. மனித முயற்சிகளுக்கு ஓர் உந்து சக்தியாக இருந்தது!"

ஐபிஎம் இந்தியாவை விட்டு மூட்டை கட்டிக் கொண்டு போனவுடன், கம்ப்யூட்டர்களைப் பராமரிக்க 'கம்ப்யூட்டர் மெயின்டெனன்ஸ் கார்ப்பரேஷன்' (சி.எம்.சி.) நிறுவினார் மேஜர் ஜெனரல். பாலசுப்பிரமணியன்.

சில எலக்ட்ரிசிடி போர்டுகள் கூட கம்ப்யூட்டரின் தேவையை உணர்ந்து இவரது தில்லி அலுவலகத்தை நாடின.

இரயில்வேயில் டிக்கெட் பதிவு செய்ய கம்ப்யூட்டர் கொண்டு வரப்பட்டபோது, ஒரு டிக்கெட் அச்சடிக்கும் செலவு ஒரு டாலர் (அன்றைக்குக் கிட்டத்தட்ட 15 ரூபாய்) ஆகிவிடும் போலிருக்கிறதே என்று யோசித்தார்களாம். இருபது ரூபாய் பயணச் சீட்டு தயாரிக்க பதினைந்து ரூபாய் செலவா என்றெல்லாம் கூட யோசித்தார்களாம். பிறகுதான் சி.எம்.சி.யே அதை உருவாக்கியதாம்!

1965-ல், கம்ப்யூட்டர் சொசைடி அஃப் இந்தியாவைத் தொடங்கினார் பாலசுப்பிரமணியன். நேஷனல் சென்டர் ஃபார் சாஃப்ட்வேர் டெக்னாலஜியையும், நேஷனல் இன்ஃபர்மேடிக்ஸ் சென்டரையும் ஆரம்பித்தார். சர்வதேச ஐடி அமைப்பின் இந்திய பிரதிநிதி, இந்திரா காந்தி திறந்த வெளிப் பல்கலைக் கழகத்தின் கம்ப்யூட்டர் பிரிவு ஆலோசகர் என்று பல பொறுப்புகள் வகித்து வந்தார். வாலன்டரி ஹெல்த் எஜுகேஷன் ரூரல் டெவலப்மென்ட் சொசைடியின் தலைவராக இன்றைக்கும் இருந்து வருகிறார்.

வெண்மைப் புரட்சி திட்டமிடப்பட்டபோது சி. சுப்பிரமணியத்தின் அறைக்கு அழைக்கப்பட்டார் பாலசுப்பிரமணியன். அவரது அறையில் செயலர் சிவராமன் ஐஸிஎஸ், டாக்டர் வி. குரியன் ஆகியோர் இருந்தார்கள்.

"மாட்டுக்குத் தீனி எவ்வளவு வைக்க வேண்டும், எவ்வப்போது கொடுக்க வேண்டும், எவ்வளவு தீனி வைத்தால் எவ்வளவு பால் கொடுக்கும் எல்லாவற்றுக்கும் கம்ப்யூட்டரில் ப்ரோக்ராம் போட்டுத் தரச் சொன்னார்கள்! செய்து கொடுத்தேன். பிறகு, 'மனிதர்களுக்கே கம்ப்யூட்டரின் பலன் இன்னும் முழுதாகப் போய்ச் சேரவில்லை. அதற்குள் மாடுகளுக்கு கம்ப்யூட்டர் அறிமுகம் செய்து விட்டாயே!' என்றார்கள் என் நண்பர்கள்!"- சிரிக்கிறார் மேஜர் ஜெனரல் பாலசுப்பிரமணியன்.

சந்திப்பு : **சாருகேசி**

புகைப்படம் : **வெங்கடேஷ்**


அபிராமி

# மனம்போல் மென்பொருள்!

**"க**ம்ப்யூட்டரை மனிதனுக்கு ஒப்பிடலாம்" என்கிறார் க. அபிராமி. இவர் கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட சில புத்தகங்களை தமிழில் எழுதியிருக்கிறார். அபிராமி சொல்கிறார்: "மனிதனுக்கு உடலும் மனமும் முக்கியமானவை. அது போலத்தான் கம்ப்யூட்டருக்கும்!

மனிதனின் உடல் போன்றது கம்ப்யூட்டரின் ஹார்டுவேர் என்கிற வன்பொருள். மனம் போன்றது சாஃப்ட்வேர் என்கிற மென்பொருள்!

கை, கால், வயிறு போன்ற நம் உடலின் பாகங்களை நம்மால் பார்க்க முடிகிறது. அது போலத்தான் வன்பொருட்கள். கம்ப்யூட்டரின் மானிட்டர் திரை, விசைப் பலகை (கீ போர்டு) போன்றவை. அதே சமயம், நமது மனத்தைப் பார்க்க முடியாது. ஆனால் அதைப் பயன்படுத்த முடியுமில்லையா? அது போலத்தான், கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும், கம்ப்யூட்டரை இயக்குவதற்கு சாஃப்ட்வேர் அஸ்திவாரமாக இருக்கிறது.

கம்ப்யூட்டர் சாஃப்ட்வேரில் இரண்டு வகை உண்டு. அவை சிஸ்டம் சாஃப்ட்வேர் (கணினி அமைப்பு மென்பொருள்) அப்ளிகேஷன் சாஃப்ட்வேர் (கணினி செயல்முறை மென்பொருள்) முதலாவது, கம்ப்யூட்டர் தயாரிப்பாளர்களால் எழுதப்படும் செயல் திட்டம். உதாரணம் : எம்.எஸ். டாஸ். இரண்டாவது, நமது தேவைக்காக நாமாக எழுதும் செயல் திட்டம் : உதாரணம், கம்ப்யூட்டர் கேம்ஸ்.

இன்னும் அவரவர் தனித் தேவைக்கேற்ப மெடிகல் ஷாப் முதல் விண்வெளி ஆராய்ச்சி வரையில் அத்தனை இடங்களிலும் உபயோகமாகிற கம்ப்யூட்டர்களுக்கு அவற்றின் பணிக்கு ஏற்ப சாஃப்ட்வேர் தயாரிக்கப்படுகிறது."

**இ**ப்போது புரிகிறதல்லவா, 'சாஃப்ட்வேர் புரோகிராமர்கள்' என்ற கம்ப்யூட்டர் கில்லாடிகளுக்கு உலகெங்கிலும் ஏன் இவ்வளவு கிராக்கி என்பது....?

— மானஸா

# சலவைக்கு சலவை !
# சலுகைக்கு சலுகை !

# இலவசம் !

ரூ. 5.00 மதிப்புள்ள ஒரு பார்க்லாண்ட் பிரிமியம் தீப்பெட்டி
மூன்று 300 கிராம் டோட்டல் பாருடன்







ரூ. 5.00 மதிப்புள்ள ஒரு பார்க்லாண்ட் பிரிமியம் தீப்பெட்டி
இரண்டு 500 கிராம் டோட்டல் பாருடன்







**டோட்டல்**
நீல டிட்டர்ஜெண்ட் பார்

**MSIL** A Product of
Mysore Sales International Limited,
Bangalore-560 052.

# 1-2-3

# ஈஸ்டர்ன் சுலபமான ஊறுகாய் பொடி

இதோ! மிக எளிமையான முறையில் ஈஸ்டர்ன் ஊறுகாய்ப் பொடியைப் பயன்ப் படுத்தி உங்களுக்கு விருப்பமான ஊறுகாயைத் தயாரிக்கலாம், அதுவும் மூன்றே மூன்று நிலைகளில்

**நல்ல ஊறுகாய் தயாரிக்க ஈஸ்டர்ன் வழங்கும் டிப்ஸ் :**

ஈஸ்டர்ன் ஊறுகாய்ப் பொடியைப் பயன்படுத்தி எலுமிச்சை, பாகற்காய், வெள்ளைப் பூண்டு, நார்த்தை மற்றும் நீங்கள் விரும்பும் எதையும் ஊறுகாய்க்காகக பயன்படுத்தலாம். ●கொதிக்கும் நல்லெண்ணெய்யை பயன்படுத்தக்கூடாது. கொதித்து ஆறிய எண்ணெய் மற்றுமே பயன் படுத்தப்பட வேண்டும். ●எலுமிச்சையைப் பயன்படுத்தும் போது நல்லெண்ணெய் விட்டு எலுமிச்சையை ஒரு மூன்று நிமிடங்களுக்கு வதக்க வேண்டும். பிறகு அதனை ஈரம்போகத் துடைக்க வேண்டும் . பிறகே துண்டாக்க வேண்டும். ●உப்பில் ஊறவைத்த எலுமிச்சையைப் பயன் படுத்தினால் இந்த ஊறுகாயை உடனடியாகப் பயன்படுத்தலாம்.




" எனது சொந்த ஊறுகாய் "



1

இரண்டு கிலோ மாங்காயை சிறு துண்டுகளாக்கவும்.

2

ஒரு பாக்கட் ஈஸ்டர்ன் ஊறுகாய்ப் பவுடரைச் சேர்க்கவும்.

3

அரைகப் நல்லெண்ணெய் சேர்க்கவும் ஈஸ்டர்ன் ஊறுகாய் தயார்.

EASTERN FOODS, Adimali - 685 561, Kerala, India

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *